# ஸ்ரீ ராமாநுஜன்—212, 213







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 18 | 1966 ஆகஸ்டு, ஸெப்டம்பர் மாதத்திற்காக 15-7-66-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 8, 9

## திருவாய்மொழி நூற்றந்தாதி—89.

மல்லடிமை செய்யும்நாள் மால்தன்னைக்கேட்க*அவன்
சொல்லுமளவும் பற்றுத் தொன்னலத்தால்—*செல்கின்ற
ஆற்றுமை பேசி அலமந்த மாறனருள்*
மாற்றுகப் போகுமென்றன் மால்.

| | |
|---|---|
| மல் அடிமை செய்யும் நாள் | பரிபூரணமான கைங்கரியம் செய்யப்பெறுங்காலம் எப்போதோ வென்று |
| மால் தன்னை கேட்க | எம்பெருமானை நோக்கிக் கேட்க |
| அவன் சொல்லும் அளவும் பற்று | அப்பெருமான் அறுதியிட்டுச் சொல்லுமளவும் ஆறியிருக்க மாட்டாத |
| தொல் நலத்தால் | இயற்கையான பக்தியினுல் |
| செல்கின்ற ஆற்றுமை பேசி | தமக்கு நிகழ்கின்ற ஆற்றுமையை யெடுத்துக் கூறி |
| அலமந்த மாறன் | அலமாப்பையடைந்த ஆழ்வாருடைய |
| அருள் மாற்று ஆக | கருணையே மருந்தாக |
| என் தன் மால் போகும் | எனது அஞ்ஞானம் தொலையும். |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய *அறுக்கும் வினைப்பதிகத்தில் *அடியேனணுகப் பெறுநாள் எவைகொலோ *ஒர் நாளறியேனே* நாளேலறியேன் *கண்ணுரக்களிக்கின்ற திங்கென்று கொல்கண்டே* என்றிப்படி பலகால் பேசின ஆழ்வார் நித்திய கைங்கரியம்

# ஸ்ரீ ராமாநுஜன்—212, 213







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 18 | 1966 ஆகஸ்டு, ஸெப்டம்பர் மாதத்திற்காக 15-7-66-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 8, 9

## திருவாய்மொழி நூற்றந்தாதி—89.

மல்லடிமை செய்யும்நாள் மால்தன்னைக்கேட்க*அவன்
சொல்லுமளவும் பற்றுத் தொன்னலத்தால்—*செல்கின்ற
ஆற்றுமை பேசி அலமந்த மாறனருள்*
மாற்றுகப் போகுமென்றன் மால்.

| | |
|---|---|
| மல் அடிமை செய்யும் நாள் | பரிபூரணமான கைங்கரியம் செய்யப்பெறுங்காலம் எப்போதோ வென்று |
| மால் தன்னை கேட்க | எம்பெருமானை நோக்கிக் கேட்க |
| அவன் சொல்லும் அளவும் பற்று | அப்பெருமான் அறுதியிட்டுச் சொல்லுமளவும் ஆறியிருக்க மாட்டாத |
| தொல் நலத்தால் | இயற்கையான பக்தியினால் |
| செல்கின்ற ஆற்றுமை பேசி | தமக்கு நிகழ்கின்ற ஆற்றுமையை யெடுத்துக் கூறி |
| அலமந்த மாறன் | அலமாப்பையடைந்த ஆழ்வாருடைய |
| அருள் மாற்று ஆக | கருணையே மருந்தாக |
| என் தன் மால் போகும் | எனது அஜ்ஞானம் தொலையும். |

*** கீழ்த்திருவாய்மொழியாகிய *அறுக்கும் வினைப்பதிகத்தில் *அடியேனணுகப் பெறுநாள் எவைகொலோ *ஓர் நாளறியேனே* நாளேலறியேன் *கண்ணுரக்களிக்கின்ற திங்கென்று கொல்கண்டே* என்றிப்படி பலகால் பேசின ஆழ்வார் நித்திய கைங்கரியம்

செய்யப்பெறும் நாள் என்றைக்கென்று எம்பெருமானைக் கேட்டாராயிற்று; அவனருளிச் செய்யும் விடையை எதிர்பார்த்திருக்கவேணுமன்றோ? அவன் அறுதியிட்டுச் சொல்லு மளவும் பொறுத்திருக்க கில்லாத ஆழ்வார் தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையை அந்யாப தேசத்தாலே பேசினாராயிற்று *மல்லிகை கமழ்தென்றற்பதிகத்தில்.

இங்கு அந்யாபதேசம் எவ்விதமென்பதைச் சிறிது விளக்குவோம். நம்முடைய முதலிகள் *மல்லிகை கமழ்தென்றற்பதிகத்திற்கு மாலைப் பூசலென்றும், மேலே பத்தாம் பத்தில் *வேய்மருதோளிணைப் பதிகத்திற்குக் காலைப்பூசலென்றும் ஸங்கேத மிட்டனர். கண்ணபிரான் விடியற்காலத்திலே பசுமேய்க்கப் போனாக அதிசங்கைபண்ணி அவன் முகத்தைப் பார்த்து நீ பசுமேய்க்கப்போனால் நலியக்கடவனவான பதார்த்தங்கள் நலியா நின்றன வென்று முறையிடுவது காலைப்பூசலான *வேய்மருதோளிணைப்பதிகம். மாலைப் பூசலான *மல்லிகைகமழ்தென்றற்பதிகத்திலோ வென்னில் *காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரன் மாலைப் பொழுதிலே திருவாய்ப்பாடிக்குத் திரும்பிவரும்போது, சில நாட்களில் பசுக்களை யெல்லாம் பின்னே வரவிட்டுத் தான் முன்னே குழலூதிக்கொண்டு வருவன்; சில நாட்களில் பசுக்களையெல்லாம் முன்னே போகவிட்டுத் தான் பின்னே வருவது முண்டு. அப்படி வருகின்ற நாளில் அப்பெருமானைப் பசுக்களின் முற்கொழுந்திலே காணாமல் திருவாய்ப்பாடியிற்பெண்கள் பட்டபாட்டை ஆழ்வார்தாம் ஏறிட்டுக்கொண்டு பேசுகிற தாக வுள்ளது. இதை ஆழ்வார் தாமே இப்பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் ஸ்பஷ்டமாக வருளிச் செய்துள்ளார். பரமபோக்யமான நம்பிள்ளையீட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;— "படை வீட்டிலிருந்தால் மாமியார் மாமனாருக்குக் கூசிப் பெருமாளுடன் நினைத்தபடி பரிமாறப் போகாதென்று காட்டிலே ஏகாந்தமாயநுபவிப்பதாக மநோரதித்துப் போந்த பிராட்டியை *காந்தாரமத்யே விஜநே விஸ்ருஷ்டா பாலேவ கந்யா விலலாப ஸீதா" என்கிறபடியே கூப்பிடப் பண்ணினாப் போலே திருநாவாயிலேபுக்கு அநுபவிப்பதாக மநோரதித்த விவர்க்கு பாதக வர்க்கத்துக்கு அஞ்சிக் கூப்பிட வேண்டும்படியாய் விளைந்தது" என்று. இதுதான் இங்கு அந்யாபதேசப்பேச்சு. ...

## அன்பர்களுக்கு அறிவிப்பு

ஸ்ரீ ராமாநுஜனில் நாம் வெளியிடத் தொடங்கின வியாஸங்கள் பூர்த்திபெறாமல் ஸசேஷமாயிருப்பதைப்பற்றிப் பலர் நினைவூட்டுகிறார்கள். நாமே மறவாமல் நினைவிலே வைத்துக்கொண்டிருக்கிறோம். அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி என்கிற மிகப் பெரிய விஷயமொன்றே முக்கியமாக சேஷித்திருக்கிறது. அது ஸ்ரீராமாநுஜன் 204-ல் உபக்ரமிக்கப்பட்டது. (1) வேதஸம்ஹிதையில் 18. (2) (வேத) ப்ராஹ்மணத்தில் 18. (3) ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் 18. (4) பகவத் கீதையில் 18. (5) பூர்வாசார்ய க்ரந்த விவரணம் 18. (6) ராமாநுஜனும் ராமாநுஜரும் 18. (7) மநுஸ்ம்ருதியில் 18. ஆகிய ஏழு பதினெட்டுகளும், ப்ராஸங்கிகமாக ஸ்ரீமதஹோபில விசேஷங்கள் 18, பிரபந்தஸாரம் பற்றிப் பதினெட்டு=இவை (நெ. 204, 205ல்) வெளியிடப்பட்டன. பிறகு (209ல்)

ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்கள் 18 வெளியிடப்பட்டன. மிச்சமுள்ளவை—

9. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் 18.
10. பகவத் விஷயத்தில் 18.
11. மூவாயிர வியாக்கியானத்தில் 18.
12. ஆசாரியர் நால்வர் ஸூக்தி 18.
13. ஸ்ரீ வசநபூஷணத்தில் 18.
14. தத்வத்ரயத்தில் 18.
15. முமுக்ஷுப்படியில் 18.
16. ஆசார்ய ஹிருதயத்தில் 18.
17. வேதாந்ததேசிக க்ருதிகளில் 18.
18. மணவாளமாமுனிகள்பற்றி 18.

என்னுமிவை. இவையே முந்நூற்றிருபத்துநான்கு மஹார்த்த நிதி. இது அடுத்த ஸஞ்சிகைகளில் பூர்த்தியாகிவிடும். ... ... ❋

## 1966 ஜூன் மாதத்தில் ஸ்ரீ ராமாநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள்

மதராஸ் மெம்பர்கள்:

115. Sri C V. Kasturirangam 28
116. ,, V. R. Ranganathan 8
117. ,, S. G. Rajan 47
118. ,, V. Raghavan 33
119. ,, G. Parthasarathi Iyengar 21
120. ,, T. N. இராமசாமி முதலியார் 2
121. ,, V கிருஷ்ணஸாமிசர்மா, Lif Co. 17
122. ,, M S. Rangachari 5
123. ,, ஊர. ஸ்ரீதேவியம்மா (லைப் மெம்பர்) 17
124 ,, T. E. N. Chari 9

வெளியூர்கள்

125 சடகோபராமாநுஜதாஸர் நெசனூர்
126. T. S. ராஜகோபாலாசார், முடிகொண்டான்
127. தாமோதராசாரியர், திருக்கண்ணங்குடி
128. குப்புஸாமி ஐயங்கார், பள்ளத்தூர்
129 Dr. S. Prasannam, பெரியகுளம் (Life Member)
130 P ஸ்ரீநிவாஸப் பிள்ளை, பன்ருட்டி
131. கிருஷ்ணராமாநுஜம், பந்தல்குடி
132. V. R. பாஷ்யசக்ரவர்த்தி ஸ்வாமி, திருச்சி
133. T. S திருமலை, திருவுள்ளூர்
134. கஜேந்திர ஐயங்கார், உக்கடம்
135. R ராமஸாமி ஐயங்கார், பொத்தனூர்
136 கொடிகோவில் ஸ்ரீநிவாஸராகவாசாரியர், கோவை
137. K. S. கிருஷ்ணமூர்த்தி, கோவை
138. R. Kannan, New Delhi
139. T. K S. ரங்கன், New Delhi
140. ஜோதிஷமணி அனந்தகிருஷ்ணய்யங்கார், கண்டரமாணிக்கம்
141. திருவேங்கடராமாநுஜ பாகவதர், கோவை
142. T. Seetharaman Nangunesi
143. T. V. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பேராவூரணி
144. பாஷ்யராமாநுஜ ரெட்டியார், ஏந்தூர்
145. A. K. Rajagopalan, Rajakote
146. T. D. ரங்கராமாநுஜய்யங்கார், திருமாணிக்குழி
147. பண்டித. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், அனக்காவூர்
148 ஸ்ரீமதி ரங்கம் ஜானகி ஆழ்வார் திருநகரி
149. ராமராமாநுஜதாஸர், திண்டுக்கல்
150. காட்டுமன்னார் ஸன்னிதி ஸ்ரீராமுலு
151 மதுரை அழகு ராமாநுஜம்
152. பரமக்குடி D. ஸ்ரீநிவாஸய்யங்கார்
153 ,, V. ஸ்ரீநிவாஸய்யங்கார்
154. ,, S. ஸ்ரீநிவாஸய்யங்கார்
155 சிரகிக்கோட்டை நாராயணையங்கார்

# நம்மாழ்வாருத்ஸவமும்—தேவப்பெருமாளுத்ஸவமும்.

நம்முடைய உத்தேச்யகோடியானது எம்பெருமானென்றும் ஆழ்வார்களென்றும் ஆசாரியர்களென்றும் மூவகுப்பாகப் பிரியலுற்றது. எம்பெருமான் ஸர்வோத்துங்கனுகை யாலே ஆழ்வாராசாரியர்களிற்காட்டிலும் அவனே மிகவும் ஆதரணீயனுயிருப்பன். அவன்றுன் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் தனக்கு உயிர்நிலையாக நினைத்திருப்பவனுகை யாலே தன்திருவுள்ளத்தினுல் ஆழ்வாராசாரியர்களையே ஆதரித்திருப்பன். கீதை நான்காமத்யாயத்தில் *தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:* என்று, மேல் அவதரிக்கப்போகிற மாஞானிகளின் உபதேசத்தின் மாண்பையே மேம்படக் கூறினனுதலால் அவ்வுபதேசங்கள் தனக்கு மஹத்தான உபகாரத்தை விளைக்கப்போகின்றனவென்று கண்டேதான் ஆழ்வாராசாரியர்கள் பக்கலிலே அபரிமிதமான அபிநிவேசங்கொண்டிரா நின்றுன். உண்மையில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் திருவவதரித்து ஊரையும் நாட்டையும் உலகத்தையும் திருத்தா தொழியில் எம்பெருமானொருவனுளனென்று அறிவாரார்?

ஆழ்வார் ஸம்ஸாரிசேதனர்களைத் திருத்திப்பணிகொண்டபடியை மதுரகவிகள் கண்ணிநுண் சிறுத்தாம்பில் *பயனன்றுகிலும் பாங்கலராகிலும், செயல் நன்றுகத்திருத்திப் பணிகொள்வான், குயில்நின்றுல் பொழில்சூழ் குருகூர்நம்பி* என்கிற பாசுரத்தாலே யருளிச்செய்தார். கிம் பஹுநா? ஆழ்வார் தாமே *ஊரும்நாடுமுலகமுந்தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற* என்று அந்யாபதேசப் பாசுரத்தாலே தாம் திருத்தும்படியைப் பேசி வைத்தார். ஆசாரியர் திருத்தின படியை அமுதனுர் இராமாநுச நூற்றந்தாதியில் "நீ யிந்த மண்ணகத்தே திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின்" என்கிற பாசுரத்தினுல் அருளிச்செய்தார். ஆக ஆழ்வாருமாசாரியரும் உலகைத் திருத்திப் பணிகொள்ளவே அவதரித்து அப்படியே திருத்திப் பணிகொண்டது காரணமாகவே எம்பெருமான் இவர்களை மிகவுகந்திருப்பது. இப்படி எம்பெருமான் பக்கலிலே ஆழ்வாராசாரியர்களுக்கு உகப்பும் ஆழ்வாராசாரியர்கள் பக்கலிலே எம்பெருமானுக்கு உகப்பும் ஒன்றுக்கொன்று தோல்வியற்றிருக்கையாலே திவ்யதேசங்களிலே எம்பெருமானுடைய உத்ஸவங்களும் ஆழ்வாராசாரியர்களின் உத்ஸவங்களும் சிறப்புற்றோங்கி நடைபெற்று வருகின்றன.

ஆனுல், ஆழ்வாராசார்யோத்ஸவங்களிற் காட்டிலும் எம்பெருமானுடைய மஹோத்ஸவமே எங்கும் மிக்க சிறப்புடன் நடந்து வருவதாகத் தெரிகின்றதே, இதற்கென்ன காரணமென்று சிலர் கேட்பதுண்டு. இதைப்பற்றி ஸ்ரீவசனபூஷணத்தில் ஒரு சூர்ணையினுல் தெளிவுபெறுகிறோம். அதாவது, அந்த திவ்யக்ரந்தத்தில் முடிவானது சரமபர்வ நிஷ்டாப்ரகரணம். அதில் (432) "ஆசார்யனுக்கு ஸத்ருசப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதிசதுஷ்டயமும் ஈச்வரத்வயமுமுண்டாகில்" என்கிற சூர்ணையினுல்—ப்ரத்யுபகாரத்திற்கு அவகாச மற்ற மஹோபகாரகத்வம் ஆசார்யனுக்கேயுள்ளதென்று கூறி, (433) "ஈச்வரஸம்பந்தம் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும்; ஆசார்ய ஸம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும்" என்கிற அடுத்த சூர்ணையினுல்—கர்மாநு

குணமாக ஸம்ஸாரத்திலே தள்ளவும், காருண்யாநுகுணமாக முக்திபெறுவிக்கவும் வல்லவன் ஸர்வேச்வரன்; ஆசார்யன் அப்படியல்லாமல் ஸம்ஸாரத்தில் நின்றும் விடுவிப்பதற்கே அநவரதமும் சிந்தித்திருப்பனென்று ஆசார்ய மஹிமையையருளிச்செய்து, மேல் "பகவல்லாபம் ஆசார்யனாலே; ஆசார்ய லாபம் பகவானாலே" என்கிற சூர்ணைகளினால்—நிருபாதிகசேஷியாய் நிரங்குச ஸ்வதந்திரனான எம்பெருமானைப் பெறுவிப்பவன் ஆசார்யன்: அவ்வாசார்யனை ஸஹஜ ஸௌஹார்த்தமடியாகப் பெறுவிப்பவன் எம்பெருமான் என்றருளிச்செய்து, ஆக இவ்வளவால் ஆசார்யனும் ஈச்வரனும் உபகாரத்தில் ஸமானமானவர்கள் என்று தோற்றப் பேசி, இதற்குமேல் ஆசார்யனிற்காட்டிலும் ஈச்வரனே அதிசயித்த உபகாரகனென்பதை வெகு அற்புதமாகவருளிச்செய்கிறார். **(436) "உபகார்ய வஸ்து கௌரவத்தாலே ஆசார்யனிற்காட்டில் மிகவும் உபகாரகன் ஈச்வரன்"** என்றார். ஆசார்யன் உபகரித்தவஸ்துவையும் எம்பெருமானுபகரித்த வஸ்துவையும் சீர்தூக்கிப்பார்த்தால் ஆசார்யனிற்காட்டில் எம்பெருமானே மஹோபகாரகனாகத் தேறும். எங்ஙனேயென்னில், ஆசார்யனுபகரிக்கும் வஸ்து பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான பகவத்விஷயம். இது சிறந்ததன்றோ. மோக்ஷத்திற்கே ஹேதுவாய் ஸகலார்த்தங்களையும் உபதேசிப்பவனான ஆசார்யனன்றோ சிறந்தவன்; அப்படிப்பட்டவனை உபகரிக்கும் ஸர்வேச்வரனன்றோ மஹோபகாரகன். ஒருவன் கல்லையும் மண்ணையும் கொடுக்கிறான்; மற்றொருவன் பொன்னையும் மாணிக்கத்தையுங் கொடுக்கிறான். இவர்களில் எவன் மிகுந்தவுபகாரகனென்பதையறிவதில் அருமையுண்டோ? உபகரிக்கப்படும் வஸ்துவின் பெருமையைப் பொருத்ததன்றோ உபகர்த்தாவின் பெருமை. ஆகவே மிகச் சிறந்த பொருளான ஆசார்யனையுபகரிக்கும் ஸர்வேச்வரனே மஹோபகாரகனென்று தேறிற்று. உத்தாரகத்வேந ஆசார்யன் உத்தேச்யனென்றும் உபகாரகத்வேந எம்பெருமான் உத்தேச்யனென்றும் சொல்லிற்றாயிற்று. ஆகவே மஹோபகாரகர்களில் அக்ரகண்யனான எம்பெருமானுக்கு ஆழ்வாராசாரியர்களிற்காட்டிலும் அதிசயித்த விபவங்களுடன் மஹோத்ஸவங்கள் நடைபெறுவது சாலப்பொருந்தும்.

ஸ்ரீ காஞ்சீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தில் நம்மாழ்வாருத்ஸவம் பதினொரு நாளும் வெகு சிறப்புடன் நடைபெற்றது. தேவப்பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவமும் அவருடைய பெருமைக்குத் தக்கபடி சீரும் சிறப்பும் பொலிய எவ்வகையான இடையூறுமின்றி நடைபெற்று முடிந்தது. ... ... ... ... *

# மஹநீயர்களின் பகுதி.

இந்நிலவுலகில் வாழ்ந்தவர்களும் வாழ்பவர்களுமான மஹநீயர்களைப்பற்றி யெழுதுவதிலும் அவர்களின் திருவுருவப்படங்களை சேகரித்து வெளியிடுவதிலும் அடியேனுக்கு அபரிமிதமான குதூஹலமுண்டென்பதை உலகமறியும். இங்கே ஸேவை ஸாதிக்கின்ற மஹாஸ்வாமி ஸ்ரீமதுபயவே. அப்பன் ப்ரணதார்த்திஹராசார்ய ஸ்வாமியென்று உலகம் நிறைந்த புகழாளராய் விளங்கினவர். முப்பத்திரண்டு வருடங்களுக்கு முன்பு (பவ வருஷத்தில்) திருநாட்டுக்கெழுந்தருளினவர். ந்யாய வேதாந்தங்களில் ப்ரக்யாதரான வித்வன்மணியாக விளங்கினவர். சின்னகாஞ்சியில் ஸன்னிதி வீதியில் விளங்கும் திருமாளிகையில் அடியேன் நாற்பத்திரண்டு பிராயம் வரையில் ஸ்ரீஸ்வாமியிடம் அடிக்கடி தெண்டன் ஸமர்ப்பித்து வார்த்தையாடியிருக்கிறேன். ஸ்ரீஸ்வாமி ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யக்ரந்தங்களைப் பல கால் ப்ரவசனம் செய்தருளியிருக்கிறார். அக்காலத்தில் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதியில் ஞாயிற்றுக்கிழமைதோறும் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் வித்வான்கள்கூடி உபயவேதாந்தோபந்யாஸம் செய்வதென்று ஏற்பாடிருந்தது. அப்படி இரண்டு மூன்று வருஷ காலம் நடந்துவந்தது. அந்த ஸமயத்தில் ஸ்ரீஸ்வாமியின் மதுரலலிதவாக்விலஸிதங்களை அடியேன் மிகவும் அநுபவித்திருக்கிறேன். ஸ்ரீஸ்வாமி பரமஸாத்விகரென்பதைத் திருமேனியின் தோற்றமே தெரிவிக்கும். ஸ்வாமிக்கு திருக்கண்ணபுரம் ப்ராந்தத்திலும் சிஷ்ய ஸம்ருத்தியிருந்தபடியால் அங்கேயும் இடையிடையில் எழுந்தருளியிருந்தபடி. ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவர்கள் பலர். ஸ்வாமியின் திருப்பேரனார் ஸ்ரீஉவே. ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்பவர் வித்வானாக விளங்கிவருகிறார். அவர் பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வாஸமாக இருந்து வருகிறார். ...



ஸ்ரீமதுபயவே. அப்பன் ப்ரணதார்த்திஹராசார்யஸ்வாமி
(வைதண்டவாஸி)

# ஆசார்யபக்தியுக்த சிஷ்யபரம்பரை

உலகில் ஸமஸ்தஸம்பத்துக்கும் முதன்மையான மூலம் ஆசார்ய பக்தியேயென்று நூற்கொள்கை. உபநிஷத்துக்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் ஆசார்ய பக்தியின் பலனைப் பலவாறு காண்கிறோம். நாளடைவில் தருமங்களெல்லாம் க்ஷீணதசையை யடைந்துவந்தாலும் ஆசார்ய பக்தி யென்கிற தருமம் பல மஹான் களிடத்திலே பறியுண்டு போகாமல் சேமம் பெற்று வருவதையும் அதன் சீரிய பலனையும் கண்டுவருகிறோம். முன்னே ப்ரஸ்தாவிக்கப்பட்ட மஹா ஸ்வாமியின் திருவுருவப் படமும் இங்கே ஸேவைஸாதிக்கின்ற மஹாபுருஷருடைய திருவுரு வப்படமும் அடியேனுக்கு ஏக காலத்தில் கிடைத்ததானது மிகவும் ஆச்சரியமாயிருந்தது. அதை அடியேன் என்னவென்று எழுது வேன்! முன்பக்கத்தில் ஸேவை ஸாதித்தருளாநின்ற அந்த மஹா ஸ்வாமியின் திருவடிகளிலே ஆச்ர யித்து உய்ந்தவர்களில் இந்த மஹா புருஷர் ஒருவரும் தலைவருமாவர். அவரிடத்தில் ஆச்ரயித்தவரென்பது மட்டுமன்று; அவ்வாசார்ய ஸந்தகி யில் மனைக்கான பக்தி பூண்டவர். அதன் பலனாக மிக்க ப்ரக்யாதி பெற்ற மஹான். திருக்கண்ணபுரத் தருகிலுள்ள உபயவேதாந்தபுர மென்று விலக்ஷணமான திருநாமம் பெற்ற அக்ரஹாரம் இந்த ஸ்வாமியி னுடையது. சென்னையில் பிரபல அட்வகேட்டாக விளங்கிவருகிறார். ஸர்வேச்வரனை ஆபத்ரக்ஷகனென்று கொண்டாடிவருகிறோம். அதற்குரிய சில கதைகளையும் கேள்விப்பட்டுவருகிறோம். இம்மஹாபுருஷருடைய ஆபத்ரக்ஷகத்வத்தை உலகமெல்லாம் கண்டுவருகிறது. நீதி மன்றங்கள் மூலமாக ஆபத்தையடைந்து கவலைப்பட்டவர்கள் இம்மஹானைத் தஞ்ச மாகப்பற்றி ரக்ஷிக்கப்பட்டுவருவது திண்ணம். இன்னாரைத் தண்டிக்கவேணுமென்று வாதிக்கும் வகுப்பிலே இந்த ஸ்வாமி தலைகாட்டுவது கிடையாது. ராஜகோபாலனென்கிற



ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியர்ஸ்வாமி
M. L. Advocate, Madras-10

திருநாமத்திற்குத் தக்கபடி பாலனமே செய்து போருகிறார். நம்முடைய ஸம்பிரதாய க்ரந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுள்ள மஹாவிவேகி; மஹாஜ்ஞானி. சென்னையில் அடியேனுடைய போதுபோக்குக்காக ஸ்தாபிக்கப்பட்டுள்ள ஸத்காலக்ஷேப ஸபைக்கு ஸ்வாமியே நிரந்தர அக்ராஸனர். ஞானசீலவயோவ்ருத்தராக ஸேவைஸாதித்துவரும் ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடி நிற்கிறேன். ... ...

## விலக்ஷணமான திருநாமமுள்ள விவேகியான மஹான்

மணவாள மாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் "உண்டோ சடகோபர்க்கொப் பொருவர்" என்ற திருவகக்கிறலேயே "உண்டோ பெரியாழ்வார்க்கொப்பொருவர்" என்றுமருளிச்செய்யக்காண்கிறோம். அங்ஙனே நிகரற்றவர்களாகக் கொண் டாடப்படுவார் திரளிலே சேர்ந்தவர் களை நிகரற்றவர்களென்று தானே சொல்லவேண்டும். சென்னையிலும் மற்றையிடங்களிலும் பலபல திரு நாமங்களையுடைய பல பெரியார் களைப் பார்க்கிறோம், கேள்விப் படுகிறோம். சம்பகேசத் திருநாமம் பூண்டவர்கள் அபூர்வமென்றே சொல்லவேண்டும். தெற்கே தக்ஷிண த்வாரகையென வழங்கும் ராஜ மன்னார் ஸன்னதிக்கு சம்பகாரண்ய க்ஷேத்ரமென்றும் ஒரு வ்யபதேச முண்டு. அந்த எம்பெருமானுக்கு சம்பகேச னென்றும் திருநாமமாத லால் அதையிட்டு சம்பகேசய்யங் காரென்கிற திருநாமம் வழங்கலா யிற்றென்று தெரியவருகிறது. ராஜ மன்னார் ஸன்னதியிலும் தத்ப்ராந் தங்களிலும் அடியேனுக்குப் பலர் பரிசிதர்களுண்டு. இந்தத் திருநாம முள்ளவர் வேறு யாரும் புலப்பட வில்லை. நிற்க. இந்த ஸ்வாமி



ஸ்ரீமான் உவே. K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி (Advocate) திருவல்லிக்கேணி

சென்னையில் பிரபல அட்வகேட். திருவல்லிக்கேணியில் நெடுநாளாக ஸேவை ஸாதித்து வருகிறார். வைதிகலௌகிகங்களில் உத்தமாதிகாரி. விசேஷித்து அடியேனிடத் தில் அந்தரங்க விச்வாஸமுள்ளவரென்பதை அடியேன் விஜ்ஞாபித்துக்கொள்ளாமலிருக்க முடியுமோ? பரம ரஸிகரென்பதை விண்ணப்பித்து நிற்கிறேன். ...

# திருவரங்கம் பெரியகோயில் திவ்யகோஷ்டிகள்

நமது ஸ்ரீராமாநுஜன் 211 இதழில் [சென்ற ஸஞ்சிகையில்] "ஸ்ரீரங்கம் தென்னாசார்ய ஸம்பிரதாய ஸம்ரக்ஷணஸபையின் பொன்விழாக் கொண்டாட்ட நிகழ்ச்சிப்புகப்பு" என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள வியாஸத்தை அனைவரும் வாசித்திருக்கிறீர்கள். அது வொரு விலக்ஷணமான ஸந்தர்ப்பம் அல்லது ஸந்நிவேசம் என்றே சொல்லவேண்டும். அப்போது கோஷ்டிகள் அமைந்த வைலக்ஷண்யத்தை ஸேவிக்க இழந்தவர்களும் ஒருவாறு ஸேவித்து க்ருதார்த்தர்களாக வழியுண்டன்றே. அப்போது பல ஸமயவிசேஷங்களில் எடுக்கப்பட்டவுருவப் படங்கள் நமக்குச் சிறிது தாமதமாகக் கிடைத்தன. சென்ற இதழிலேயே வெளிவரவேண்டியவை இப்போது வெளியாகின்றன.



இது ஸ்தோத்ரபாட கோஷ்டி

ஏழு வேளைகள் நடைபெற்ற ஸ்தோத்ரபாட கோஷ்டியில் பட்டர் ஸ்ரீஸூக்திகள் பூர்த்தியாக இருமுறை ஸேவிக்கப்பட்டன. மற்ற ஸ்தோத்ரங்கள் பெரும்பாலும் யதாவகாசம் ஸேவிக்கப்பட்டன. பின்மாலை வேளைகளில் உத்தரவீதியிலும், மாலை வேளைகளில் சித்திர வீதியிலும் கோஷ்டி நடைபெற்றது. இங்கே திகழும் கோஷ்டியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயணஜீயர் ஸ்வாமி ஸேவை ஸாதிக்கிறார். ...

3

# வேதபாராயண கோஷ்டி

ஸ்தோத்ரபாட கோஷ்டியானது அருளிச்செயல் ஸ்தானத்திலே அமைந்தபடியால் முன்னே ஸ்தோத்ரபாட கோஷ்டியும் பின்னே வேதபாராயண கோஷ்டியுமாக நடைபெற்று வந்தது. கோயில் நம்பெருமாள் ஸன்னிதியில் சதுர்முகப்ரஹ்மா ஆரம்பித்த வேதபாராயணம் அவிச்சிந்நமாக நடைபெற்றுவருகிறது. ஸ்வாமிகள் பதின்மர் நன்கு



அத்யயனம் செய்தவர்கள் மிகுந்த ச்ரத்தையோடு வேதபாராயண கைங்கரியம் நடத்தி வருவது மிகமிக அதிசயிக்கத்தக்கது. இத்தலத்து வேதபாராயண கைங்கரியம் மற்றைத் தலங்களிற்போலன்று. தை மாசி பங்குனி சித்திரை ஆகிய நான்கு மாதங்களிலும் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்கள். அப்போது ஆஸ்தானத்திலிருந்து வாஹன மண்டபத்திற்குப் புறப்பாடு கண்டருளும் ஸமயம் இரவு இரண்டு மணிக்கும் மூன்று மணிக்குமாக இருக்கும். அப்போதும் வேதபாராயணமுண்டாதலால் ஸன்னிதியிலேயே ஒருபுறத்தில் துஞ்சாமுனிவர்களாயிருப்பர்கள். காத்திருந்து கைங்கரியம் செய்வதென்பது இந்தத் திருப்பதியில் தான் அந்வர்த்தம். தை மாதத்து ப்ரஹ்மோத்ஸவமொன்று தவிர மற்ற மூன்று மாதத்து ப்ரஹ்மோத்ஸவங்களிலும் இந்த கோஷ்டியில் அந்வயித்து இடைவிடாத கைங்கரியம் பண்ணப் பலமுறை அடியேனுக்கு பாக்கியம் வாய்த்திருக்கின்றது. ஸமீபத்திலன்று; இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு. அடியேனுக்குத் தேவப்பெருமாளுத்ஸவங்

களில் மஹத்தான வியாமோஹமிருந்தாலும் நம்பெருமாளுத்ஸவங்களை யநுபவிக்கும்போது "ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்கிற அநுஸந்தானம் நெஞ்சில் அநுவர்த்தித்துக் கொண்டேயிருக்குமாதலால் பேரின்ப வெள்ளத்தில் அமிழ்ந்திருப்ப தாகவே தோன்றும். அதையெல்லாம் நினைந்துனைந்துள் கரைந்துருகும் நிலைமையில் தானிருக்கிறேனிப்போது. அநுபவ பாக்யதூரஸ்தனுயினேன். ...

## மணவாளமாமுனிகள் ஸன்னிதித் திருவாசலில் ஸ்தோத்ரபாட கோஷ்டியின் சாற்று.

கோஷ்டிகள் மாமுனிகளின் ஸன்னிதியிலிருந்து புறப்படும்போது லகூபக்ரமமாக இருப்பது ஒரு அழகாகவும், திருவீதிகளில் எழுந்தருளும்போது தென்னீர்ப்பொன்னியே அலையெறிந்து வெள்ளங்கோத்துப் பெருகுகின்றதோவென்னும்படி அமைவதும், திருவீதித் திருமாளிகைகளிலுள்ளாரெல்லாரும் க்ரமேண கோஷ்டிகளில் கலந்துகொள்வதும்



அநுயாத்திரையில் அந்வயிப்பதுமாகி அலையாருங்கடல்போல் முழங்க ஸன்னிதியேறவந்து சேர்ந்து ஸ்வாமிகள் வீற்றிருப்பாரும் நிற்பாருமாகி 'இப்போது நாம் எங்கிருக்கிறோம்!' என்று நினைக்கும்படியான ஸந்நிவேசமும் எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் மறக்கற் பாலதன்று. ... ... ... ...

# உபந்யாஸ கோஷ்டியின் ஒரு பகுதி.

இந்த மஹோத்ஸவத்தை ஜீயர் ஸ்வாமிகள் ஐவர் கூடிச் சிறப்பித்தருளினார்களென்று முன்னிதழில் விஜ்ஞாபிக்கப்பட்டிருக்கின்றது. இங்கே ஸ்வாமிகள் நால்வர் ஸேவைஸாதிக்கிறபடி. அடியேன் இளமையில் ஆழ்வார் திருநகரியில் அத்யயநோத்ஸவம் ஸேவிக்க விடைகொண்டிருந்தபோது ஸ்ரீமத் பரமஹம்ஸ. எம்பெருமானார் ஜீயர், தென்திருப்பேரை ஜீயர், அப்பன் ஜீயர், திருக்குறுங்குடி ஜீயர், (அடியேனுடைய மாதாமஹர்) ஸ்ரீ காஞ்சீ. அழகிய மணவாள ஜீயர் ஆகிய ஜீயர்கள் ஐவர் ஸேவைஸாதிக்கப் பெற்ற கோஷ்டியின் சிறப்பை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்.

ஐம்பத்தெட்டு வருடங்களுக்கிப்பால் இப்போது அத்தகைய மஹா கோஷ்டியை ஸேவிக்கும் பாக்கியம் வாய்த்தது. இந்த கோஷ்டியில் முந்துறமுன்னம் நிற்பவர்தாம் சென்னை பிரபல வியாபாரியான ஸ்ரீமான் நாதெள்ள. ஸம்பத்து செட்டியார். இவரே ஸ்ரீரங்கம் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷண ஸபையின் நிரந்தர அக்ராஸனர். இவரே முன்னின்று இந்தப் பொன்விழாக் கொண்டாட்டத்தை வெகு சிறப்பாக நடத்தி வைத்தவர். இவரே ஸ்ரீகாஞ்சீ அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமியால் பரமார்த்தபூஷணமென்கிற விருது சாத்தப்பெற்றவர். இவர் மேன்மேலும் நீங்காத செல்வம் நிறைந்து விளங்குக. ... ... ... ...



# உபந்யாஸ கோஷ்டியின் மற்றொரு பகுதி

கீழே நான்கு கோஷ்டிகள் ஸேவிக்கப்பெற்றீர்கள். இது ஐந்தாவது கோஷ்டி. கிடைத்த திருவுருவப்படங்கள் இவ்வளவே. இந்த கோஷ்டியில் நிற்பவர்தாம் ஸ்ரீஉவே. சதாபிஷேகாசாரியர். இவரே கோயில் தென்னாசார்ய ஸபையின் சார்பாக அவ்விடத்து உடையவர் ஸந்நிதியில் நித்யப்ரவசனம் நிர்வஹித்து வருபவர். இவரைச் சார்ந்து



வீற்றிருக்கும் ஸ்வாமிகளிருவர் ஸ்ரீஉவே. இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமியும், ஸ்ரீஉவே. மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமியுமாவர். ஆக இம்மூவரும் ப்ரக்ருதஸபா நிர்வாஹத்தில் முன்னின்று பரிமளிக்கச் செய்தவர்களென்பதை முன்னிதழிலேயே விஜ்ஞாபித்திருக்கிறேன். முக்கியமாக மணவாளமாமுனிகளே இந்த மஹோத்ஸவத்தை வெகு சிறப்பாக நடத்திக்கொண்டருளினரென்பதே அடியேனறிந்தது.

சிறந்த வக்தாக்கள் உபந்யாஸக ஸ்வாமிகளாக அமைந்ததும் ஒரு விசேஷம். அவர்கள் பெரும்பாலும் தென்னாசார்ய ஸம்பிரதாயத்தின் அந்தரங்கமான அர்த்த விசேஷங்களையே உபந்யஸித்தார்கள். திருவரங்கம் பெரிய கோயிலிலுள்ள ஸகல ஸ்வாமிகளும் ஸகலாசார்ய புருஷர்களும் அரையர்ஸ்வாமிகளும் இக்கொண்டாட்டத்தில் அந்வயித்திருந்தது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. இந்த மஹாஸபைக்கு அக்ராஸன

ராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமிக்கு தேவஸ்தானுதிகாரிகள் மடாதிபதிகளுக்குரிய மரியாதையை மூன்றுநாள் வெகு சிறப்பாக நடத்திவைத்தார்கள். ... ... ...

"தழை நல்லவின்பந்தலைப்பெய்து எங்குந்தழைக்கவே."

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே,
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

## ஸ்ரீ ராம ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

ஸ்ரீ கூர்மக்ஷேத்ர ஸமீபத்தில் களிங்கபட்டணமென்பது ப்ரஸித்தமானவொரு நகர். இது ஸ்ரீகாகுளம் ஜில்லாவைச் சேர்ந்தது. அடியேன் ஸ்ரீ கூர்மம் ஸேவிக்கச் சென்றபோது ஏறக்குறைய முப்பதாண்டுகட்கு முன்பு மேலே சொன்ன களிங்கபட்டணத்திற்கு ஒரு நாள் செல்ல நேர்ந்தது. அங்கே ஒரு வயோதிகரான ஸ்வாமி [ஆந்திரதேச வித்வான்] சிலர்க்கு பகவத்விஷய ப்ரவசனம் ஈடுமுப்பத்தாறுயிரப்படி காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்தார். [அந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி வெகு நாளாயிற்று.] அப்போது அந்த ப்ரவசனத்தை ஒருநாழிகாலம் கேட்க நேர்ந்தது. ஆந்திரதேசம் தமிழுக்கு மேட்டுமடையான தேசமாயிருந்தாலும் அங்கும் சில வ்யக்திகளில் ஆழ்வாருடைய கடாக்ஷவெள்ளம் பெருகியிருப்பதுண்டாதலால் அடியேனுடைய வாழ்நாளில் ஆந்திர ப்ராந்தங்களில் ஐந்தாறு வ்யக்தி விசேஷங்களை பகவத்விஷய ப்ரவீணர்களாக அநுபவித்திருக்கிறேன். அன்னவர்களில் அந்த ஸ்வாமியைத் தலைவராக நினைத்தேன். அவரிடத்தில் கேட்டவர்களில் ஒருவர் ஸ்ரீமத் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியென்பவர். இவர் ஸம்ஸ்க்ருத வித்வான். ஆங்கிலப் பயிற்சியுமுள்ளவர். ஸ்ரீராம வைத்யசாலையென்று ஒரு சிகித்ஸாலயம் ஸ்தாபித்திருக்கிறார். சரக ஸுச்ருதாதிகளில் ஸ்வயம்ப்ரவீணர். இவர் வைராக்யாதிசயத்தினுல் சில மாதங்களுக்குமுன்பு துரீயாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டார். அவருடைய திருவுருவப்படம் இங்கே ஸேவிக்கப் பெறுகிறீர்கள். ஸ்ரீராமராமாநுஜ ஜீயரென்று திருநாம் பூண்டிருப்பதாகத் தெரிகிறது.



ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீராம ராமாநுஜ ஜீயர் களிங்கபட்டணம். A P.

ப்ரஸங்காத் விஜ்ஞாபிக்கிறேன். ஸிம்ஹாசலம், ஸ்ரீகூர்மம், ராமதீர்த்தம், பத்மநாபம் என்கிற நான்கு க்ஷேத்ரங்கள் ஸ்ரீகாகுளம் ஜில்லாவில் உயர்ந்தவையாக ப்ரஸித்தியுள்ளது. இவை எம்பெருமானாருடைய விசேஷ கடாக்ஷந்திற்குப் பாத்திரமானவையென்று சொல்லப்படுகிறது. அது வாஸ்தவமென்பதை, இப்போதும் இந்த நான்கிடங்களில் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய இதிஹாஸ புராணாதிகாரிகளும் ரஹஸ்யாதிகாரிகளும் ஸேவை ஸாதிப்பதனால் நிச்சயிக்கலாம். ... ... ❀

# அபூர்வக்ரந்த லாபமொன்று—ஸ்ரீராமாநுஜ சம்பூக்ரந்தம்.

பகவத் பாஷ்யகாரரான எம்பெருமானாருடைய திவ்ய சரித்திரங்களை உள்ளபடி பேசப்பிறந்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்கள் முற்காலத்தில் பலபல அவதரித்துள்ளனவென்றும், அவற்றுள் ஸ்ரீராமாநுஜ சம்பூக்ரந்தமென்பதும் ஒன்றென்றும் நெடுநாளாகக் கேள்விப்பட்டிருந்ததுண்டேயல்லது இஃது அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளதென்பதை நாம் இதுகாறுமறிந்திலோம். சென்னை எழும்பூரில் வாழும் ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரியாசாரியர் (Advocate) ஸமீபத்தில் காஞ்சிக்கு வந்திருந்தபோது இந்த சம்பூக்ரந்தத்தைக் கொணர்ந்து காட்டினர். நிதி கண்டதுபோல் கண்டேனிதனை. இது 1942-ஆம் வருஷத்தில் (அதாவது இருபத்துநான்கு வருடங்களுக்கு முன்பு) மதராஸ் கவர்ன்மெண்டு ஓரியண்டல் மானஸ்க்ரிப்ட் ஸீரீஸ் நெ. 6 ஆக சென்னை கவர்ன்மெண்டு வெளியீடுகளில் ஒன்றாக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. தேவநாகர லிபியில் மிகவுயர்ந்த காகிதத்தில் 159 பக்கங்கள்கொண்ட மூலமும், அதன்பிறகு 50 பக்கங்கொண்ட டிப்பணியுமாக வெகு நேர்த்தியாய் அச்சிடப்பட்டுள்ளதிது. இது வெளிவந்து இருபத்தைந்து வருடங்களாகியும் நமக்கு இதுகாறும் தெரியவராமலிருந்தது பற்றி மிக்க வருத்தமேயுண்டாயிற்று. சென்னை யூனிவர்ஸிடியில் ஒன்றரைரூபா விலைக்கு எளிதாகக் கிடைக்கின்றதாமிது. பண்டித. திருமலைநல்லான் V. கிருஷ்ணமாசாரியர் தாம் இதனை அச்சிடுவித்தவரென்றும், டிப்பணியெழுதியவரும் அவரேயென்றும் தெரியவருகின்றது. வித்யாஸாகர. வித்யாவாசஸ்பதி. ப்ரொபஸர். (ப்ரஹ்மஸ்ரீ) P. P. S. சாஸ்திரியாரென்று ப்ரஸித்தரான ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரியார் ஆங்கிலத்திலெழுதிய விரிவான முகவுரையொன்று இதில் சேர்க்கப்பட்டுள்ளது. அதிலுள்ள விஷயத்தின் ஸாரம் வருமாறு ;—

ஸம்ஸ்க்ருதபாஷையில் சரித்திரஸம்பந்தமான நூல்கள் அபூர்வம்; ஆகவே ஸ்ரீராமாநுஜரின் சரித்திரத்தை விளக்கத் தோன்றிய இந்நூலைப் பிரசுரம் செய்வது அவசியம். இந்த சம்பூக்ரந்தம் ஸ்ரீராமாநுஜருடைய வாழ்க்கை வரலாறுகளைத் தெரிவிப்பது. முதன் முதலாக வடுகநம்பியென்கிற ஸ்ரீராமாநுஜ சிஷ்யரே ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தை 114 சுலோகங்கள்கொண்ட யதிராஜ வைபவமென்கிற காவியத்தினால் நிபந்தித்தவர். யதிராஜ ஸப்ததி, யதிராஜவிம்சதி என்னுமிவை ஸ்ரீராமாநுஜரைப்பற்றிய ஸ்துதிநூல்கள். ஸ்ரீராமாநுஜர் கி. பி. 1017 முதல் 1137 வரை வாழ்ந்திருந்த ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்.

நூலாசிரியர் ராமாநுஜசாரியரென்பவர். வாதூலகோத்ரர். பாவநாசாரியரின் திருக்குமாரர். கருடபஞ்சாசத்தின் வியாக்யாதாவான ராமாநுஜாசாரியர் 1450ல்

வாழ்ந்தவர். பஞ்சஸ்தவ வ்யாக்க்யாதாவான ராமாநுஜாசாரியர் கர்க்க கோத்ரி. அவர் வேறுபட்டவர். வேதபாத ராமாயணமும், ராமாநுஜீய மென்கிற ஸ்ரீ ராமாயண வியாக்கியானமுமெழுதியவரான வாதூல ராமாநுஜாசாரியர் வேறு. இவ்வாசிரியர் கந்தாடை ராமாநுஜர் எனப்படுவர். ராமாயண வ்யாக்க்யாதா வைத்யநாத தீக்ஷிதர் தமது வியாக்கியானத்தில் இவரைக் குறிப்பிடுகிருர். வேதாந்த விஜயத்தின் ஆசிரியரான வாதூல ராமாநுஜாசாரியர் அப்பய தீக்ஷிதருடைய ஸமகாலத்தவர். (1550ஹு)

இந்த ராமாநுஜ சம்பூக்ரந்த கர்த்தாவின் வம்சம் முதலியாண்டானிடமிருந்து தொடக்கமானது. இவர் கி. பி. 1600ல் வாழ்ந்தவரென்று தெரிகிறது. இந்நூலின் ஓலைச் சுவடிகள் நான்கு கவர்ன்மெண்டு ஓரியண்டல் மானஸ்க்ரிப்டு லைப்ரெரியில் தானுள்ளன. பாடபேதமில்லாதவை. அவைகளை ஆதாரமாகக் கொண்டே இது பதிப்பிக்கலாயிற்று. (இவ்வளவே முகவுரையின் ஸாரம்.)

(ஒரு சிறு குறிப்பு.) இம்முகவுரைகாரர் ராமாநுஜாசாரியர்களின் வேற்றுமைகளை நிருபித்துவருமடைவில் ஒரு ராமாநுஜாசாரியரை வேதாந்த தேசிகரின் பௌத்ரியின் குமாரர் என்று குறிப்பிடுகிருர். இது ஸம்பாவிதமா? என்பதைப் பெரியார்கள் விமர்சிப்பது. வேதாந்தகுருவின் திருக்குமாரர்க்கு ஸந்ததியில்லையே.

"கத்யபத்யமயம் காவ்யம் சம்பூரித்யபிதீயதே" என்பராதலால் சுலோகங்களும் கத்யங்களுங்கலந்து இயற்றப்படும் காவியம் சம்பு வெனப்படும். போஜசம்பூ, பாரதசம்பூ, விச்வகுணதர்ச சம்பூ, வரதாப்யுதய சம்பூ, ஆசார்ய சம்பூ.........முதலான சம்பூ ப்ரபந்தங்கள் ப்ரஸித்தமாகவுள்ளன. வெறும் சுலோக ரூபமான காவியங்களிற்காட்டிலும் இப்படி கத்ய பத்ய ரூபமான சம்பூக்ரந்தம் பாஷா வ்யுத்பத்தியை யுண்டாக்குவதில் மிகவும் வல்லதென்னுமிடம் அநுபவ ஸித்தம். எம்பெருமானருடைய சரித்திரத்தை விளக்கும் சம்பூ ப்ரபந்தம் இஃதொன்று தவிர வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை. இதனை யியற்றியவர் சிறந்த ப்ரௌடகவி யென்பது ரசநாவைகரியினல் நன்கு தெரிய வருகின்றது. அச்சுப்பிழைகள் சில காணப்படுகின்றன.

இதில் பத்து ஸ்தபகங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஸ்தபகத்திலுமுள்ள கதைப்போக்கும் நூன்முகத்தில் பதிப்பாசிரியரால் பொறிக்கப்பட்டிருப்பதால் அதை யிந்த மொழி பெயர்த்தெழுதுகிறேன்—இதனல் இந்நூல் முழுதும் எளிதாகப் படிக்கப்பட்டதாகுமென்று.

**முதல் ஸ்தபகத்தில்**—நூல்களின் முறைப்படி மங்களாசரணம். ஸ்ரீபெரும்பூதூரின் சிறப்பை வருணித்தல். ஸ்ரீ வைகுண்டநாதன் திருவனந்தாழ்வானை ஸ்ரீ ராமாநுஜராகத் திருவவதரிக்கும்படி கட்டளையிடுதல். எம்பெருமான் கேசவாத்வரிக்கு [ஸ்ரீ ராமாநுஜருடைய திருத்தந்தையார்க்கு]ப் பாயஸம் அனுப்புதல். அந்த கேசவாத்வரிக்கு எம்பெருமான் கனவில் காட்சி தருதல்.

**இரண்டாம் ஸ்தபகத்தில்**—கேசவாத்வரியின் திருத்தேவியார் திருவயிறு வாய்த்தது. ஸ்ரீ ராமாநுஜர் திருவவதரித்தது. ஸ்ரீ ராமாநுஜரை அநுக்ரஹித்தருளப் பெரிய

திருமலைநம்பி திருப்பதியிலிருந்து எழுந்தருளினது. ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் சிறப்புற நடத்திவைத்தது.

**மூன்றும் ஸ்தபகத்தில்**—ஸ்ரீராமாநுஜர் வேதாந்தமதிகரிக்க யாதவப்ரகாசரிடம் சென்று சேர்ந்தது. யாதவப்ரகாசரிடமிருந்து அத்வைத ஸப்பிரதாயத்தை யதிகரித்தது. (எம்பாரென்கிற) கோவிந்தபட்டரும் யாதவப்ரகாசரிடம் வாசிக்கவந்து சேர்ந்தது. ஸ்ரீ ராமாநுஜர் நிர்விசேஷாத்வைதத்தைக் கண்டித்துரைத்தது. கப்யாஸ ச்ருதிக்கு ஹேயமான பொருளை மறுத்து உண்மையான பொருளையுணர்த்தியது. யாதவப்பிரகாசர் சிஷ்யர்களுடனே காசியாத்திரை புறப்பட்டது. கோவிந்தபட்டர் மூலமாக யாத்திரையின் சூதைத் தெரிந்துகொண்டு ஸ்ரீ ராமாநுஜர் இடைவழியில் விலகி ஏகாகியாய் விந்தியாடவியில் அலைந்தது. பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் வேடக்கோலம் பூண்டு அங்கே காட்சிதந்து அவர்கள் ராமாநுஜரைக் கச்சிப்பதி சேர்ப்பித்தது. யாதவப்ரகாசர் கங்காயாத்திரை முடித்துக்கொண்டு காஞ்சிக்குத் திரும்பிவந்து சேர்ந்தது.

**நான்காவது ஸ்தபகத்தில்** — ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீயாமுநாசாரியர் (ஆளவந்தார்) ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரைக் கடாக்ஷிக்கக் காஞ்சிக்கெழுந்தருளிக் கடாக்ஷித்துவிட்டுத் திருவரங்கம் திரும்பியெழுந்தருளினது. ஸ்ரீ ராமாநுஜர் ராஜபுத்ரிக்கு நேர்ந்திருந்த ப்ரஹ்மராக்ஷஸ பீடையைப் போக்கியருளினது. ராமாநுஜர் யாதவப்ரகாசரிடத்தில் அத்வைத ச்ருதிகளுக்கு விசிஷ்டாத்வைதபரமாகப் பொருள் விவரித்தது. சீற்றங்கொண்ட யாதவப்ரகாசர் ராமாநுஜரை வெறுத்துவிட்டது. ராமாநுஜர் விலகிக்கொண்டது.

**ஐந்தாவது ஸ்தபகத்தில்**—ஸ்ரீராமாநுஜருடைய பிரபாவங்களைக் கேட்டறிந்த ஆளவந்தார் அவரை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துவரும்படி தம்முடைய ப்ரியசிஷ்யரான பெரிய நம்பியைக் காஞ்சிக்குப் போகவிடுதல். ஸ்ரீ ராமாநுஜர் பெரியநம்பியுடன் திருவரங்கம் பெரியகோயில் வந்துசேரும் ஸமயமும் அங்கே ஆளவந்தார் பரமபதித்தஸமயமும் ஒன்றுயிருந்ததனுல் ஆளவந்தாருடைய சரமத்திருமேனியையே ஸேவிக்கப்பெற்ற ஸ்ரீ ராமாநுஜர் அவருடைய திருவுள்ளக் குறைகள் மூன்றையறிந்து அவற்றைத் தாம் நிறைவேற்றுவதாக ப்ரதிஜ்ஞை செய்தது. காஞ்சிக்கு மீண்டுவந்து சேர்ந்த ராமாநுஜர் திருக்கச்சிநம்பிகளிடம் ஆறுவார்த்தை கேட்டது. பெரியநம்பியிடம் ஆச்ரயிக்கக் கோயிலேறப் புறப்பட்ட ராமாநுஜர் வழியிடையில் நம்பியை ஸந்திக்க நேர்ந்து அப்போதே அவரிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று, பெரியநம்பியுடன் கச்சிப்பதி வந்து சேர்ந்து இருவரும் ஒரு திருமாளிகையில் வாழ்ந்திருந்தகாலத்து இருவருடைய மனைவியர்க்கும் வாக்கலஹம் முற்றியதனுல் பெரியநம்பி தம் தேவியாருடன் கோயில் சென்று சேருதல். ஸ்ரீ ராமாநுஜர் ஸம்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரித்தது. கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் ஸ்வாமி திருவடிகளிலேவந்து ஆச்ரயித்தது. யாதவப்ரகாசரும் ஸ்வாமி திருவடிகளிலாச்ரயித்து த்ரிதண்டி ஸம்ந்யாஸியானது.

**ஆறுவது ஸ்தபகத்தில்**—ஸ்வாமியைக் கோயிலுக்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதற்காகத் திருவரங்கப் பெருமாளரையர் கச்சிப்பதிக்கு வந்துசேர்ந்தது. ஸ்வாமி

திருவரங்கம் பெரியகோயில் சென்று சேர்ந்து ஸந்நிதியில் மங்களாசாஸனம் செய்தருளி ஸ்ரீரங்க ஸ்ரீயைப் பரிஷ்காரம் செய்தருளினது. பெரியநம்பி பக்கலில் விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயார்த்தங்களை லபித்தது. ஆசார்யமுகேந திவ்ய ப்ரபந்தங்களோதினது. திருக்கோட்டியூர் நம்பி பக்கல் சரமச்லோக ரஹஸ்யார்த்தம் கேட்டது. திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப் பொருள் கேட்டது. யஜ்ஞமூர்த்தியென்னும் பிரபல பண்டிதரான ஏகதண்டி ஸம்ந்யாஸியைத் திருத்திப் பணிகொண்டு அருளாளப் பெருமாளெம்பெருமானாராக்கினது.

ஏழாவது ஸ்தபகத்தில்—சைவதர்மநிரதராய்க் காளஹஸ்திசென்று சேர்ந்திருந்த கோவிந்தபட்டர் (எம்பார்) திருத்தமுற்றுத் திருப்பதி சேர்ந்திருக்க, அவரைக் காண வேண்டி ஸ்வாமி திருப்பதிக்கெழுந்தருளினது. அங்குத் திருமலைநம்பி பக்கலில் ஸ்ரீ ராமாயண ரஹஸ்யார்த்தங்கள் கேட்டுத் திரும்புகையில் எம்பாரைப் பரிசாகப் பெற்றுக்கொண்டுவந்தது. பழையபடி திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்ந்தருளுகையில் திருவரங்கத்தமுதனர் இராமாநுச நூற்றந்தாதி பணித்தது.

எட்டாவது ஸ்தபகத்தில்—வடநாட்டுக்கெழுந்தருளி போதாயநவ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷித்துவந்து ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தது. திக்விஜய யாத்திரை செய்தருளினது. சாரதாபீடத்தில் ஸ்ரீ பாஷ்யத்திற்குப் பெருமதிப்பு விளைந்தது. பதரிகாச்ரமமெழுந்தருளி மீண்டு ஸ்ரீ ஜகன்னாத ஸ்ரீ கூர்மாதி க்ஷேத்ரங்கள் ஸேவித்தது. திருமலையில் சென்று திருவேங்கட முடையானுடைய ஸ்ரீ மஹாவிஷ்ணுத்வத்தை ஸ்தாபனம் செய்தருளித் திருவரங்கம் மீண்டது. கூரத்தாழ்வானுக்குப் பெரியபெருமாள் திருவணை ப்ரஸாதமநுக்ரஹித்தது. ஆழ்வானுடைய திருக்குமாரர்களுக்குப் பராசர பட்டரென்றும் வ்யாஸ பட்டரென்றும் திருநாமத்தை ஸ்வாமி சாத்தியது. எம்பாருடைய திநத்தம்பியாரின் திருக்குமாரர்க்குப் பராங்குசநம்பி யென்று திருநாமம் சாத்தினது.

ஒன்பதாவது ஸ்தபகத்தில்:—வீர சைவனன சோழராஜன் ஸ்வாமியைத் தன்னிடம் வரவழைக்க முயன்றது. பெரிய நம்பியும் கூரத்தாழ்வானும் ராஜஸபைக்கு எழுந்தருளினது. அங்கு அரசன்சொற்படி செய்யாத நம்பிக்கும் ஆழ்வானுக்கும் திருக்கண்ணைப் பிடுங்க அரசன் கட்டளையிட்டது. ஆழ்வான் தாமே தமது திருக்கண்களைப் போக்கிக் கொண்டது. பெரிய நம்பிகள் நேத்ரோத்பாடன க்லேசத்தினுல் அங்கேயே பரமபதித்தது. ஸ்ரீ ராமாநுஜர் வெள்ளை சாத்திக்கொண்டு மேல்நாட்டுக் கெழுந்தருளினது. யாதவாத்ரி யென்கிற திருநாராயணபுரத்தில் திருநாராயணப் பெருமாளைத் திருப்ரதிஷ்டை செய்வித்தருளினது. டில்லிக்கெழுந்தருளி ராமப்ரிய ரென்கிற உத்ஸவ மூர்த்தியைக் கொணர்ந்தது.

பத்தாவது ஸ்தபகத்தில்:—டில்லிராஜன் மகளுடைய ராமப்ரிய விக்ரஹ விரஹ க்லேசத்தை வருணித்தல். அம்மகளை வரவழைத்து ராம ப்ரியரை ஸேவிக்கச் செய்தருளினது. மஹாபராதியான க்ரிமிகண்ட சோழன் புழுத்து மாண்டானென்று செய்திபெற்றது. அந்த சோழனுடைய புதல்வன் ஸ்வாமியைக் கோயிலுக் கெழுந்

தருளப் பிரார்த்தித்தது. ஸ்வாமி கோயிலுக்கெழுந்தருளின பின் கூரத்தாழ்வான் வந்து சேருதல். எம்பெருமானுர் ஆழ்வானுடன் தேவப்பெருமாளை ஸேவிக்க வெழுந்தருளி வரதராஜ ஸ்தவத்தை விஜ்ஞாபிக்கச் செய்தருள ஆழ்வான் திருக்கண் பெற்றது. மீண்டும் கோயிலேற வெழுந்தருளி அங்கு வாழ்ந்தது.

“ ஸ்ரீ சைலபூர்ண—ஸ்ரீமஹாபூர்ணுதிஸ்வாசார்யதநூபவாந் சங்கசக்ராங்கநபூர்வகம் அதிகததர்சநரஹஸ்யாந் விதந்வந் ஸாதுஜநமாந்ய: ஸ்ரீரங்கராஜதாங்யாமேவ சிரமுவாஸ. ” என்று க்ரந்தம் தலைக்கட்டப் பட்டுள்ளது. ... ... ... ❀

எம்பெருமானுர் திருவடிகளே சரணம்.

# இதைச் சிரியாமல் வாசியுங்கள்.

காஞ்சீபுரத்திலிருந்த கொந்தமூர் கேசவாசாரியர் தாம் அருமையாகப் பெற்று வளர்த்த பெண்ணுக்கு விவாஹம் நிச்சயித்துத் திருமலையில் அதை நடத்துவதாக முஹூர்த்த நிச்சயமும் பண்ணி பந்து வர்க்கங்களுடனும் ஸம்பந்தி வர்க்கங்களுடனும் புறப்பட்டுக் காஞ்சீபுரம் ஸ்டேஷனில் ரைலேறி அரக்கோணம் ஸ்டேஷனில் இறங்கினுர். விவாஹத்திற்காகக் கொண்டு போன மூட்டைகளோ அபரிமிதம். அரக்கோணத்தில் S. I. R. பாதையிலிருந்து M. S. M. பாதைக்குப் படிக்கட்டு வழியாய் மூட்டைகளைக் கொண்டுபோக வேண்டும். போர்ட்டர்களிடம் பேசினதில் 20 ரூபாய் வரையில் கொடுத்தாலொழிய மூட்டைகள் அப்பால் சென்று சேராதென்று திண்ணமாக எண்ணின கேசவாசார் வேறு போர்ட்டர்களைப் பார்ப்போமென்று செல்லுகையில் S. I. R. ஸ்டேஷன் மேஸ்டர் (பிரமசாரி ஐயங்கார்) நாற்காலியில் உட்கார்ந்திருக்கக் கண்டார். அவரை இவர் பார்த்தபடியே நிற்கிறுர். என்ன பார்க்கிறீர்? என்று அவர்கேட்க, ஒன்றுமில்லை, உம்முடைய கோத்ரமென்ன? என்றுர். விவாஹ ப்ரஸங்கத்தில்தானே கோத்ரம் விசாரிக்கிற வழக்கமென்றெண்ணிய S. M. உடனே கோத்ரத்தைச் சொல்லிவிட்டு ‘என்ன என்ன?’ என்றுர். ‘சொல்லமாட்டேனு? கோத்ரம் ஸரியாய் விட்டது; விவாஹமாகாத தமையனுர் இருக்கிறுரோ?’ என்றுர். ‘இல்லையில்லை, அவர்க்கு விவாஹமாகிப் பசங்களுமுண்டு’ என்றுர் S. M. உடனே கேசவையங்கார் (விவாஹ நிச்சயம் செய்திருக்கிற) பெண்ணைக் கிட்ட வரவழைத்து ஸ்டேஷன் மேஸ்டருக்குக் காட்டிவிட்டு பந்துக்களிடமே சென்று சேர அனுப்பி விட்டார். இந்தப்பெண்ணை உமக்குக் கொடுக்கலாமென்று தீர்மானம் செய்து விட்டேன்; இந்த மாதத்திலேயே முஹூர்த்தம் பார்த்துத் திருமணம் நடத்த இடையூறுண்டோ? ஜாதகம் இங்கே யிருக்கிறதோ? என்றுர் கேசவாசார். ‘எங்கள் குடும்பத்தில் ஜாதகம் எழுதுவதுமில்லை, ஜாதகம் பார்க்கிற வழக்கமுமில்லை; என்றைக்கு வேணுமானுலும் முஹூர்த்தம் முடிவு செய்யலாம் நாளை வெள்ளிக்கிழமையுமாகலாம்’ என்றுர் S. M.

இந்தப் பேச்சினிடையில் கேசவாசாரியர் போர்ட்டர்களோடும் வார்த்தையாடுகிறுர், கூலியைப்பற்றி பேரம் பேசுகிறுர். “மாமா! இந்த விசாரம் உமக்கேதுக்கு?’

என்று சொல்லிக்கொண்டே போர்ட்டர்களை யழைத்து 'டோய்! நம்ம மாமாவினுடைய சாமான்களை யெல்லாம் ஒரே நிமிஷத்தில் ரேணிகுண்டா ட்ரைனில் கொண்டு சேருங்கள், ஒரு பைஸா சேளாதீர்கள்' என்று கட்டளையிட்டு விட்டார் S. M. தானும் சில ஸாமான்களைத் தலையிலும் தோளிலும் கையிலும் தூக்கிக்கொண்டு வேகமாக நடக்கிறார். கேசவாசார் வேகமாக நடக்க முடியாமல் மெதுவாக வருகிறார். மாமா மாமா! வண்டி புறப்படும் நேரமாய் விட்டது, வேகமாக ஓடிவாரும்' என்று சொல்லிக்கொண்டேபோய் மணப்பெண் இருக்கிற வண்டியைக் கண்டுபிடித்து ஏறி 'கண்மணீ! உன்னுடைய பெயர் என்ன? என்ன வயதாயிற்று? என்ன வாசிக்கிறாய்?' என்று கேட்டுக்கொண்டிருக்கிறார் S. M. அதற்குள் கேசவாசாரும் வந்து வண்டியிலேறினர். 'மாப்ளே! ஒரு கல்யாணத்திற்காகத் திருப்பதி போகிறோம், நாளைக்கே திரும்பி விடுவோம், விரைவில் முஹூர்த்தம் பார்க்கவேண்டியதுதான்' என்று சொல்லும்போதே ரைல் நகரத் தொடங்கி விட்டது. 'மாமா! ரேணிகுண்டாவிலும் இறங்கியேற வேணும்; அங்கு போர்ட்டர்கள் அதிக கூலி கேட்பர்கள், இங்கிருந்தே சில போர்ட்டர்களைக் கூடவே யனுப்புகிறேன்' என்று சொல்லி அப்படியே யனுப்பிவிட்டுத் திரும்பினர் S. M. மறுநாள் விவாஹத்தை நடத்தி விட்டு ஒரு ஸர்விஸ்பஸ் மூலமாய் ஊர்போய்ச் சேர்ந்தார் கேசவாசார் முதலானோர். ❀

## செவிக்கும் வாய்க்கும் செவ்விய நாமம்

நமது தேசத்தில் ரங்காசார், ராகவாசார், ராமாநுஜாசார், க்ருஷ்ணமாசார் வரதாசார்.........என்றிப்படிப்பட்ட பெயர்களே இடப்படுகின்றன பெரும்பாலும். வடதேசத்தில் வ்ரஜவிஹாரீ, வ்ரஜபூஷண், யுகள கிசோர், ராதாரமண், கோபீநாத், கோகுலசந்த், நீலமணி, வ்ரஜமோஹன், குஞ்ஜவிஹாரீ, ச்யாமஸுந்தர், ராதேச்யாம்...என்றிப்படிப்பட்ட பெயர்களையே கேள்விப்படுகிறோம். வல்லப மதஸ்தர்கள் ஸ்ரீ க்ருஷ்ணபக்தியே வடிவெடுத்தவர்களாதலால் அவர்கள் மேலேகாட்டிய பெயர்களைத் தவிர வேறு பெயர்களை அனேகமாக வைத்துக்கொள்வதில்லை. இங்கே காட்சிதரும் என்னுடைய பரம ப்ரீதிபாத்திரமானவர் செந்தாமரைக்கண்ணனென்று பெயர் பூண்டிருக்கிறார். இப்பெயர் காரணமாகவும் இவர் என்னுடைய ப்ரீதிபாத்திரமாயினர். இவர் சில வருஷகாலமாய் பேட்டூர்டாம் என்கிற ஊரில் வாழ்பவர். நூல்களின் பொருளை நுட்பமாகக் கண்டறிவதில் மிக வல்லவரென்பதை அடிக்கடி கிடைக்கும் இவருடைய கடிதங்களினுலறிந்து மகிழ்கிறேன். இவருடைய சில ஆராய்ச்சி வியாஸங்கள் நம்மிடம் வந்திருக்கின்றன. அவை ஸமயாந்தரத்தில் வெளியிடப்பெறும். ❀



ஸ்ரீமான் R. செந்தாமரைக்கண்ணனையங்கார்
திரளி அக்ரஹாரம்

## போகத்தில்வழுவாத புதுவையர்கோன்.

*ஆனிதன்னிற் சோதிநன்னாளாகிய இன்று துயில்விட்டெழுந்தவுடனே தனியன்களை யநுஸந்தித்துத் திருப்பல்லாண்டை யநுஸந்தித்தபின் பெரியாழ்வாருடைய ப்ரசம்ஸை யுள்ள பாசுரங்களையெல்லாம் அநுஸந்திக்கவேணுமென்னுமாசை கிளர்ந்தது. திருப்பல்லாண்டின் நிகமனப் பாசுரத்திற்போல் பெரியாழ்வார் திருமொழியில் ஒவ்வொரு பதிகத்தின் நிகமனப் பாசுரத்திலும் பெரியாழ்வாருடைய ப்ரசம்ஸையிருப்பதனால் அந்த நிகமனப் பாசுரங்களையெல்லாமநுஸந்தித்தபின் ஆண்டாளுடைய அருளிச்செயலான திருப்பாவை நாச்சியார்திருமொழிகளிலும் நிகமனப் பாசுரங்களில் பெரியாழ்வாருடைய ப்ரசம்ஸையை ஆண்டாள் செய்திருப்பதனால் அந்தப் பாசுரங்களையும் அநுஸந்திக்கலானேன். ஆண்டாள் தன்னுடைய பேற்றுக்குப் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பையே மூலமாகக் கொண்டவளாதலால் அதனை நாச்சியார் திருமொழியில் *கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே* *வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே* என்கிற இரு பாசுரங்களில் பொறித்துவைத்தவள். இவள் திருத்தந்தையார் பக்கலில் ஆசார்ய ப்ரதிபத்திகொண்டிருந்ததனாலே ஒவ்வொரு பதிகத்திலும் நிகமனப் பாசுரங்களில் பெரியாழ்வாரை முன்னிட்டே தன்னைச் சொல்லிக்கொள்வதென்று விரதங்கொண்டாள். *விண்ணீல மேலாப்புப் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் பெரியாழ்வாரை நிர்தேசிக்கின்றவள் *போகத்தில் வழுவாத புதுவையர்கோன்* என்றருளிச்செய்தாள். இப்பாசுரம் அடியேனுடைய நெஞ்சை மிகவுமுளுக்கியது. பெரியாழ்வார் தமக்குத்தாமே யிட்டுக் கொள்ளுகிற விசேஷணங்களில் “வேதப்பயன் கொள்ளவல்ல” (விட்டு சித்தன்) என்பது முதலானவைகிடக்க, ஆண்டாளருளிச்செய்த “போகத்தில் வழுவாத” என்னுமிவ் விசேஷணம் அற்புதமானது. போகமாவது பகவதநுபவம். அதனை வழுவாமற்செய்தவர் உண்மையிற் பெரியாழ்வாரொருவரே. திருவாய்மொழியில் (6-6.) *மாலுக்கு வையம் பதிகத்திற்குப் பயனுரைக்குமிடத்து “இப்பத்தும் வல்லவர், கட்டெழில் வானவர் போகமுண்பாரே” என்றார் நம்மாழ்வார். பெரியாழ்வாருடைய போகத்திற்கும் நித்யஸூரிகளின் போகத்திற்கும் பர்வதபரமாணுவோட்டை வாசிபோருமே. பெரியாழ்வாருடைய போகம் க்ருஷ்ணாவதார சேஷ்டிதபோகம். பராசரபாராசர்யாதிகளும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களைப் பேசியிருந்தாலும் அவர்கள் ஏதோ கதை சொன்னவர்களே யொழிய அநுபவித்தவர்களல்லர்; லவலேசமும் அநுபவித்தவர்களல்லர். பெரியாழ்வார் இருநூற்றறுபது பாசுரங்களினால் ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை யநுபவித்திருக்கு மழகு வாசாமகோசரமென்றல்லது வேறு என்ன சொல்ல இயலும்? *வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க் கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்* என்று தொடங்கிக் கதை சொல்லுபவராகச் சொல்லிக்கொண்டு போந்தவர் *கிடக்கில் தொட்டில்கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும் மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்!* (9) என்றொரு பாசுரம் பாடினர். இங்கு நானென்பதற்கு யசோதையென்றல்லவோ அர்த்தம். இப்படி யசோதை சொன்னாளென்று சொல்லாமே தாமேயன்றோ யசோதையாக வடிவுகொண்டார். யசோதாபாவம் மெய்யே

உண்டாயிற்றில்லையாகில் *பெருநீர்த்திரை யெழுகங்கையிலும் பெரியதோர் தீர்த்த பலந்தருநீர், சிறுச்சண்ணம் துள்ளஞ்சோரத் தளர்நடை நடவானே* *சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க என்குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்* என்கிற பாசுரங்கள் இந்த ரீதியில் அவதரித்திருக்கமாட்டாவே.

க்ருஷ்ணாவதார விஷயத்தில் மஹர்ஷிகளின் வாக்குக்களெல்லாங் கூடினாலும் இவ்வாழ்வாருடைய *வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு* என்னும் பதிகத்தில் ஒரு பாசுரத்திற்கு ஈடாகாதே; ஓரடிக்கு ஈடாகாதே. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கண்ணன் வெண்ணெயமுது செய்தானென்கிற பேச்சேயில்லையே. "கண்ணன் தின்னும் பண்டம் என்ன? கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய்" என்னும் சிறுவர்களின் மழலை மென்மொழிகூட மஹர்ஷிகளின் செவியில் விழுந்ததில்லையே.

இப்போது நடைபெறுவது பராபவவருடம். சென்ற கீலகவருஷத்தில் [ஐம்பத்தெட்டாண்டுகட்குமுன்பு] கோயில் நிகழ்ச்சியொன்று கேளீர். திருவத்யயநோத்ஸவம் முதல்நாளில் அரையர் ஸேவையில் *வெண்ணெய் விழுங்கிப் பதிகத்தோடு சாற்று. *ஆற்றிலிருந்து பதிகம் மறுநாள் தொடக்கம். முதல்நாள் *வெண்ணெய் விழுங்கிப் பதிகம் சாற்றும்போது அரையர்கள் நால்வர்

"வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ்வருபுனற் காவிரித்தென்னரங்கள்
பண்டவன்செய்த கிரீடையெல்லாம் பட்டர்பிரான் விட்டுசித்தன் பாடல்"

என்னுமிரண்டடிகளைப் பெருமிடறுசெய்து ஸேவித்து உள்ளொலாமுருகிக் குரல் தழுத்தொழிந்து பின்னடிகளை ஸேவிக்கமாட்டாதே கண்ணநீரோடே தெண்டனிட்டெழுந்தருளினார்கள். எமுனைக்கரையில் கண்ணன்செய்த கிரீடையெல்லாம் வருபுனல் காவிரிக்கரையில் தென்னரங்கன் செய்ததாகப் பேசிவைத்தால் பாடுவார்கண்ணில் காவிரிப்புனலும் கங்கைப்புனலும் பெருகாதிருக்குமோ?

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை

ஸமீபித்திருக்கும் ஐப்பசி மாதத்தில் மணவாளமாமுனிகளின் திருவவதார நன்னாளாகிய திருமூலம் இருமுறை வருவதனால் இதற்கு நீடூழிநினைவுமலராக "ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை" யென்னும் பெயரால் மணவாளமாமுனிகளின் திவ்யஸ்ரீஸூக்திகளையெல்லாம் ஒரே ஸம்புடமாகப் பதிப்பித்து வெளியிட மநோரதங்கொண்டிருக்கிறபடியை ஏற்கெனவே ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருக்கிறோம். இந்த க்ரந்தமாலையை அடியேன் இருபத்தைந்தாண்டுகட்குமுன் தெலுங்குலிபியில் பிரசுரித்திருக்கிறேன். அது நாலைந்து வருடமாகவே துர்லபமாய்விட்டது. இப்போது தமிழ் லிபியில் அச்சிடப்பட்டுவருகிறது. இதற்கு ஏறக்குறைய பதினாயிரம் ரூபாய் செலவு. 'அணில் ஸேவை மணல் ஸேவை' என்னும்படியான ஸேவை பாக்யசாலிகளுக்குக் கிடைக்கட்டும்.

# பூவிருந்தவல்லியில் திருப்பணி விசேஷங்கள்.

திருக்கச்சிநம்பிகளின் திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லியில் ஸன்னிதி ஸந்நிவேசம்—ப்ராகாரமண்டப கோபுராதிகள் நிர்மாணமானகாலத்திற்குப் பிறகு ஜீர்ணோத்தாரணத் திருப்பணிக்கு ப்ரமேயமே ஏற்படாமலிருந்ததுபோலும். வைச்யர்கள் விசேஷித்து அபிமானிக்கக்கூடியதான இந்த ஸ்தலத்தில் அவர்கள் ஏன் இவ்வளவு உபேக்ஷை காட்டுகிறார்களென்று நாம் பலவருடங்களாக நினைத்திருந்ததுண்டு. பரிதாபங் கொண்டிருந்ததுமுண்டு. கீதையிலே "ப்ரதிஜாநீஹி கௌந்தேய ந மே பக்த: ப்ரணச்யதி" என்றருளிச்செய்த பகவான் அடியேன் போல்வார் பரிதாபங்கொண்டால் பொறுத்திருப்



திருக்கச்சிநம்பிகள் ஸன்னிதியில் கோஷ்டி 25—5—1966.

பனோ? சில வைச்ய ப்ரமுகர்களுக்கு நியமனம் தந்தருளி அவர்கள் முகமாகப் பல திருப்பணிகளை நடத்திக் கொள்ளத் திருக்கச்சி நம்பிகளும், அவருக்கு ஆராத்ய தேவதையாக அங்குக் கோயில் கொண்டிருக்கும் தேவப்பெருமாளும் திருவுள்ளம் பற்றின படியால் பல மாதங்களாக மிகச் சிறப்பான முறையில் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன. ஜீர்ணோத்தாரணக் கமிட்டி யொன்றைப் பல கனதனவான்கள் கூடி ஸ்தாபித்து, பொருளாதார வசதிக்கும் பாங்கு செய்வித்து மிகவும் மெச்சக் கூடிய நிலைமையில் காரியங்கள் நடந்து வருகின்றன. ஆஸ்திகர்களான தார்மிகர்கள் இத்திருப்பணி கிஞ்சித்காரத்தில் எவ்வளவு அங்வயித்தாலும் ஏற்கும். இவ்விடத்தில் ஒரு அபூர்வமான நிர்மாணமும் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வருகின்றது. அதாவது **திருக்கச்சிநம்பி க்ரந்தாலயம்** என்னும் பெயரால் ஒரு புஸ்தக பாண்டாகாரம் நிருமிக்கப்பட்டு வருகிறது.

இதில் ஸம்ஸ்க்ருத த்ராவிட ஆந்த்ர பாஷைகளிலுள்ள ஸகல க்ரந்தங்களையும் ஸம்பாதித்துச் சேமித்துவைக்கக் கருதி நாலாறுமாத காலமாகவே பல நூல்களை சேகரித்து வருகிறார்கள். இந்த புஸ்தக நிலயக்கட்டிடத்திற்கு 25-5-66 புதன்கிழமை காலை சுப சுபமுஹூர்த்தத்தில் அஸ்திவாரக்கல் நாட்ட அடியேனுக்கு பாக்கியம் கிடைத்தது. அதே முஹூர்த்தத்தில் தாயார் ஸன்னிதி முகமண்டப நிர்மாணமும் துவக்கப்பட்டது. அதற்கு அஸ்திவாரக்கல் நாட்ட மதராஸ். பரமார்த்த பூஷணம். நாதெள்ள ஸம்பத்து செட்டியார் வரவழைக்கப் பட்டிருந்தார். அவரையும் முன்பக்கத்து கோஷ்டியில் காண லாம். அவ்வூரில் ஸ்திரவாஸியான ஸ்ரீஉவே V. T. வேதாந்தராமாநுஜாசாரியர்ஸ்வாமியும் கோஷ்டியில் ஸேவை ஸாதிப்பது குறிப்பிடத்தக்கது. அவர் பூனமல்லியில் அட்வகேட். அவருடைய திருக்குமாரர் ஸ்ரீமான் V. T. ராகவாசாரியார் திண்டிவனத்தில் அடிஷனல் டிஸ்டிரிக்ட் முன்ஸீப். இவர்களின் ஆஸ்திக்ய ஸாத்விகதாதி குண விசேஷங்களை அன்று அநுபவிக்கப் பெற்றது விசேஷித்த பாக்கியமாக வாய்த்ததடியேனுக்கு.

மேலே குறிப்பிட்ட திருப்பணிகளையும் மற்றும் ஸன்னிதி நிர்வாஹங்களையும் ஒழுங்காக நடத்திவர H. R. E. Boardல் நால்வர் நியமிக்கப்பட்டு அவர்களே நிர்வாஹம் செய்து வருகிறார்கள். அவர்களின் பெயர்கள் வருமாறு—Sri O. Radhakrishnan, B.A.,B.L., Advocate R.E.Govindarajulu Chettyar. C. Govindarajulu, B.A. P.A.Govindarajulu Chettyar. ஆக இந்நால்வரில் ஸி. கோவிந்தராஜுலு, B.A., அவர்களின் பெருமுயற்சி மெச்சத்தக்கது.



பூனமல்லியில் தாயார்ஸன்னிதி விமான ஸம்புரோக்ஷணம் 25—5-66 நடைபெற்றது. அந்த விமானம் இதுவே.

*மாடமாமயிலையிலிருந்து காஞ்சிப்ராந்தமளவும் ஆழ்வார்கள் நால்வரும் ஆசாரியர்கள் அறுவரும் திருவவதரித்த தலங்கள் திகழ்கின்றன. ஆழ்வார்கள் நால்வராவார்—முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரானும். ஆசாரியர்கள் அறுவராவார் எம்பெருமானார் திருக்கச்சி நம்பிகள் முதலியாண்டான் எம்பார் ஆழ்வான் நிகமாந்தவாசிரியர். ஆகப் பதின்மரால் பெருமைபெற்ற தொண்டைநாட்டில் திருப்பணிகள் விசேஷமாக நடைபெறவேணும்.

# "ஈந்தனனீயாதவின்னருள்."

— ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அனந்தாசாரியர் —

அடியேன் இங்கு நம்ஸ்வாமியின் பக்கத்தில் நிற்கிறேன். உருவப்படத்தில் மட்டும் நெருங்கி நிற்பவனல்லேனடியேன். பெரும்பாலும் ஸ்வாமியை அணுகியே வர்த்திப்பவன். அடியேன் ஸ்ரீபெரும்பூதூரில் வித்யார்த்திதசையிலிருந்தகாலத்திலும், பிறகு திருக்கடிகையில் (சோளஸிம்ஹபுரத்தில்) ஸம்ஸ்க்ருத வித்யாலயாத்யக்ஷனுயிருந்த காலத்திலும்... இன்றளவும் ஸ்வாமியின் திவ்யக்ரந்தங்களையும் நான்குபாஷைப் பத்திரிகைகளையும் நாள்தவறாமல் அநுபவித்துவருபவன். ஸ்வாமியின் பல நூற்றுக்கணக்கான நூல்களிலுள்ள பல்லாயிரக்கணக்கான விஷயங்களில் ஏதேனுமொன்றையெடுத்துச் சொல்லி 'இது எவ்விடத்திலிருக்கிறது?' என்று கேட்டால் ஆலோசியாமல் உடனே சொல்லக்கூடியவர்களில் அடியேனுமொருவன். இதில் அடியேனுக்கு அதிகமான இறுமாப்புமுண்டென்னலாம். ஸ்வாமியின் சில நூல்களோ வியாஸங்களோ எழுதிமுடிந்து அச்சுக்கூடத்திற்கு அனுப்பப்படுவதற்கு முன்னமே அடியேன் அநுபவிக்க நேருமென்பதுமுள்ளது. சென்ற ஸ்ரீ ராமாநுஜனிதழில் (2.1-ல் பக்கம் 11-ல்)



ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அனந்தாசாரியர். ந்யாயவேதாந்த சிரோமணி.

"அவரவர்களினுடைய மனப்பான்மை" என்னும் மகுடம் புனைந்தவொரு வியாஸத்தை ஸ்வாமி வெளியிட்டிருந்தார். அதில் சில அநாமதேய நிந்தைக் கடிதங்களைப்பற்றி ப்ரஸ்தாவித்து "இத்தகைய கடிதங்களை நாம் சில வரிகள் வாசித்தவுடனே கிழித்தெறிவது

வழக்கம்" என்றெழுதப்பட்டிருப்பதை அனைவரும் வாசித்திருப்பர்கள். அப்படி அநாமதேய மாகவருவதல்லாமல் ஸநாமதேயமாக அச்சடித்து அட்டையிட்ட நாலு ஏடுக ளாக வந்திருக்கிறது. ஓர் அவ்யபதேச்யனுடைய க்ருதியாக துர்வாதகண்டனம் என்று பெயருள்ள யவனபாஷைச் சுவடி இன்று (4—7—66) தபாலில் வந்தது. இதைப்பற்றி முன்னுரையாகப் பலவிஷயங்கள் அடியேனெழுதவேண்டியதுண்டு. அதையெல்லாம் முடிவில் வைத்துக்கொள்ளுகிறேன். ப்ரக்ருதம் தெரிவித்த ஏடு ஸநாமதேயமானாலும் அநாமதேயக் கந்தையில்தான் சேர்ந்தது. அக்கிலிபிக்கிலி வாக்யார்த்தமென்று ஒன்று சொல்லுவதுண்டு. அதனிலும் கடைகெட்டதிது. அச்சிட்டதாகையால் ஆங்காங்கு அவரவர்களுக்குக் கிடைத்திருக்குமென்று நினைப்பதற்கில்லை. "நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்" ஆதலால் தாராளமாகத் தலைகாட்ட அஞ்சியே நிற்கிறதென்று அறிகிறோம். நம் கண்ணில் பட்டபடியால் "மண்ணுண்ணிப்பாம்பானாலும் மத்தா லடித்துத் தொலை" "தண்ணீர்ப்பாம்பானாலும் தலையை நசுக்கித் தொலை" "குட்டித் தேளானாலும் கொடுக்கை வெட்டிவிடு" என்கிற பழமொழிகளை நினைத்து, கையில் கிடைத்த அக்கிலிபிக்கிலியேடுகளை அறுத்தொழிக்க வேண்டியதாகிறது.

இந்த வியாஸத்திற்கு "ஈந்தனனீயாதவின்னருள்" என்று மகுடம் வைத்திருக் கிறேன். இது இராமானுச நூற்றந்தாதியில் ஒரு பாசுரத்தினடி. ஸ்ரீ ராமாநுஜர் ஒருவர்க்கும் கொடாத அருளை எனக்குக் கொடுத்தாரென்று அமுதனார் அநுஸந்திப்பது அது. துர்வாதகண்டனமென்கிற அபத்தச் சுவடியை வெளியிட்ட நபர் இந்த நமது நூலைப்பெற்று இந்தப் பாசுரத்தை யநுஸந்திக்கவேணுமென்பது கருத்து. (ஈந்தனன்) என்பதற்கு கொடுத்தாரென்கிற பொருள்போல 'கொடுத்தேன்' என்கிற பொருளும் உண்டாதலால் இந்த க்ரந்த கர்த்தாவான நான் அப்பாசுரத்தையநுஸந்தித்து இது எழுதத் தொடங்குவதாகவுங்கொள்ளலாம். ஈயாதவருளை இந்த யதாஜாதனுக்கு ஈந்தேன்.

அநுவதிக்கத்தகாத வார்த்தைகளையும் அநுவதிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிற தன்றோவுலகில். அந்த ரீதியில் அட்டைமேலுள்ள அவத்தச் சொற்களை அநுவதிக்க லாகிறது. நிகமாந்தமஹாகுருவும் நிச்சலும் உச்சிமேல்வைத்து மெச்சநின்ற ஆசாரியர்களில் எம்பாரும் நஞ்சீயரும் அந்வயம் பெற்றவர்களேயொழிய விலகிநின்றவர்களல்லர். அஹோபிலமடத்து குருபரம்பரையில் எம்பெருமானார் எம்பார் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை என்றுதான் இற்றைக்கும் ஆசார்ய பரம்பராநுஸந்தானம் வந்துகொண்டிருக்கிறது. இந்த ஆகாசதாண்டவ தூஷகப் பேர்வழி "காளஹஸ்தியில் சைவனாயிருந்தவனையும், கன்னடதேசத்தில் ஸ்மார்த்தனாயிருந்தவனையும் ஆசார்யராகக் கொண்ட பரம்பரையிற்சேர்ந்த மணவாளமாமுனிகள்" என்று எழுதியுள்ளது. நிகமாந்த மஹாகுரு ரஹஸ்யத்ரயஸாரமென்றொரு க்ரந்தம் ஸாதித்திருக்கிறாரென்று இந்த அஜாகள ஸ்தநத்திற்குத் தெரிந்திருந்தால் இப்படி யெழுத நெஞ்சாலாவது நினைக்குமா? அதில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில்

> "உடையவரருளிச் செய்த வார்த்தையை ஆச்சான் பக்கலிலே கேட்டு நஞ்சீயர் ஸங்க்ரஹித்தார்" என்றும் "ஸ்ரீ ஸூக்த பாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷி தார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்"

என்றும் ஸாதித்திருப்பதைக் காணக்கண்ணில்லை, கேட்கச் செவியில்லை யிதற்கு. பெரிய

ஜீயரென்றதற்கு நஞ்சீயரென்று விவரணம் பண்ணினர் இஞ்சிமேட்டழகிய சிங்கர். [அவருடைய பதிப்பில் இரண்டாம் பாகத்தில் பக்கம் 35 காண்க.] நஞ்சீயரைப் பெரிய ஜீயரென்று சிறப்பித்தெழுதியவர் நிகமாந்தகுரு வொருவரேயாவர். அங்ஙனம் சிறப்புற்ற மஹாசாரியர்களை ஏகவசனத்தால் இழித்துப் பேசுகிற இந்த அவ்ய ர்தேச்யன் இரண்டு கலைக்கும் தள்ளுகடை யென்பதை முகப்பிலேயே காணலாம். *சாக்கியங்கற்றோம் சமண் கற்றோமென்றலைந்த திருமழிசைப்பிரானை ஏன் விட்டிட்டதோ ?

அட்டையைத் தள்ளினவுடனே **அவதாரிகை** என்றாரம்பித்து முதல்வரி—"ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயத்தை தூஷிப்பதே தனக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாகக் கொண்டு" என்பது. இந்த வாக்யத்தின் முடிவு வரி—"அவர் செய்த உபந்யாஸ சதத்வயம் பிரகிருதம் கண்டநீய விஷயம்" என்பது. ஸ்வாமி உபந்யாஸ சதத்வயமருளிச் செய்திருக்கிறா ரென்பதற்கு இது ப்ரசார க்ருத்யம் (அல்லது) ப்ரக்ய்யாபந ப்ரசாரம் என்று உலகமெல் லாம் சொல்லும். "ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயத்தை தூஷிப்பதே தனக்கு ஸ்வரூப நிரூபக தர்மமென்று கொண்டவர்" என்று எழுதிவிட்டால் தன்னைப்போன்ற சில அஜாகள ஸ்தனங்களும் தனக்குத் தாளம்போட வரக்கூடுமென்று எண்ணிவிட்டது பாவம். நாற்றிசைகளிலும் பரவியுள்ள நம் ஸ்வாமியின் திவ்ய க்ரந்த ப்ருந்தங்களைப் பாராத வைஷ்ணவர்களில்லை. வைஷ்ணவர்களென்று விசேஷிக்கவும் வேண்டா. படிக்கத் தெரிந்தவர்களெல்லாரும் படித்திருக்கிறார்களென்னத்தட்டில்லை. உண்மையை யுணராதவர் ஒருவருமிருக்ககில்லார். இந்த அக்கிலிபிக்கிலியும் உணர்ந்து கொள்ளும்படி யாகத்தான் ஸ்வாமி யெழுதியிருப்பது.

நிகமாந்த மஹாகுருவின் நிகிலஸ்ரீஸூக்திகளையும் ஓர் அக்ஷரம் விடாமல் பார்த்தவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் நம் ஸ்வாமி யொருவர் தவிர வேறு யாருமிலர் என்று சபதமிட்டுச் சொல்லலாம். எதனாலென்னில்; தேசிகருடைய ஸகல க்ரந்தங்களையும் "**ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலா**" என்னும் பெயரால் மாலைமாலையாக அச்சிட்டு வெளியிட்டவர் நம்ஸ்வாமி யொருவரே யென்பது உலகமறிந்தது. ஸ்வாமியே சோதித்து அச்சிட்டபடியால் சோதநார்த்தமாக அக்ஷரச: மூன்றுதடவை பார்த்தேயாக வேண்டும். அப்படி பார்த்தவராதலால் அவ்வாசார்யருடைய திவ்ய ஸூக்திகளிலுள்ள ஸகல ஸாரங் களையும் உள்ளவாறு கண்டறிந்தவர் நம் ஸ்வாமி யொருவரே யென்றால் இதனை மறுக்க முன் வரக்கூடியவர் ஒருவருமில்லை. இதை நூறு தடவை ஆயிரந்தடவை யெழுதினாலும் புநருக்தியாகாது. எனக்குமுன்னே பல வித்வான்கள் இதை யெழுதியுமுள்ளார்கள்.

நிகமாந்த மஹாகுருவைப்பற்றியும் அவருடைய திவ்ய ஸூக்திகளைப்பற்றியும் நம் ஸ்வாமி யெழுதியிருப்பது நான்கு பாஷைகளிலும் விளங்கியுள்ளது. ஸ்ரீ ராமாநுஜன் 210ல் ஸ்வாமியினுடைய க்ருதியான ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷையின் முதல் பரிச் சேதம் வெளிவந்துள்ளது. அது அரியபெரிய விஷயங்களை உள்ளபடியுணர்த்தியுள்ளது. க்ரந்தாரம்பத்தில்நான்கு பக்கமுள்ள முன்னுரையை வாசித்து மகிழாதாரில்லை. அதிலிருந்து சில வார்த்தைகளை இங்கெடுத்துக் காட்டுகிறேன். மறப்பு என்பது மநுஷ்ய தர்மமாதலால் மறந்தவர்களுக்கு நினைப்பூட்ட வேண்டியது அவசியமாகிற தன்றோ. (முன்னுரையிலுள்ள வார்த்தைகள் சிலவற்றைக் கேளீர்;)

"பல திவ்ய தேசங்களில் மற்றையாசாரியர்களோடொப்ப ஸ்ரீமந் நிகமாந்தாசாரியரும் ஸம்ப்ரதாய பேதமின்றிக்கே ஒரு கோர்வையாக விக்ரஹ ப்ரதிஷ்டை பெற்று ஆராதிக்கப்பட்டு வருவதனாலும், இதில் வேற்றுமை காட்டப்படுவது அதிநவீன காலந்தொடங்கியே யாதலாலும், அவ்வாசாரியருமுட்பட ஸகல ஆசாரியர்களும் தொன்றுதொட்டுத் தென்னசார்யர்களே யென்பதை யாரும் மறுக்க கில்லார்....... அவருடைய ஸ்ரீ ஸூக்திகள் பெரும்பாலும் தென்னசார்ய ஸ்ரீ ஸூக்திகளைத் தழுவியே அவதரித்துள்ளன வென்பதை அடியேன் ஏற்கெனவே பல நூல்களில் பல பாஷைகளிலும் விவரித்திருப்பதை உலகமறியும். இந்நூலிலும் நிரூபிக்க ப்ராப்த மாகும். இது ஏறிட்டுச் சொல்லப்படுகிறதென்றுவது அஸங்கதமான நிரூபண மென்றுவது இதுகாறும் ஒருவரும் ப்ரத்யவஸ்தானம் செய்திருக்கவில்லை. செய்யவும் போகாது! சிற்சில விஷயங்களில் அபிப்ராய பேதமுண்டாவது வித்வான்களுக்கு ஸஹஜம். அத்தகைய அபிப்ராய பேதம் க்வசித் க்வசித் இருப்பதை நாமும் இசைவோம். பரமாணுவைப் பர்வதமாக்குகிற கணக்கிலே அதை பஹூகரித்து மாச்சரியத்தை வளர்த்திப் போருவது ப்ராமாணிக க்ருத்யமாகாது. வேதாந்த வாரியர்க்குச் சிற்சில விடங்களில் விளைந்த அபிப்ராய பேதமும் நிலைத்திருக்கவில்லை; சில விடங்களை இதற்கு நிதர்சனமாகக் காட்டுகிறேன்."

என்று ப்ரதிஜ்ஞை பண்ணி, உடனே இரண்டரை பக்கம் நிறையப் பல விஷயங்களை இதற்குச் சேர வெடுத்துக்காட்டி மூதலித்துள்ளார். கண்ணாடிபோல் காட்டியுள்ள விஷயங்களின் ஸாரமென்னவென்றால்—ஸ்வாமியே யெழுதியுள்ள பங்க்திகளைக் கேளீர்;

"ரஹஸ்யத்ரய ஸாரத்தில் தம்மாலே மறுக்கப்பட்ட அர்த்தம் தத்ஸாரமான ஸார ஸார ரஹஸ்யத்தில் தம்மாலே ஸ்தாபிக்கப்படுகிறதென்பதை யுணர்ந்தால், ஏதோ காரண விசேஷத்தால் தமக்குண்டாகும் அபிப்ராய பேதத்தைத் தாமே மாற்றிக் கொள்ளுகிற பரம ப்ராமாணிகர் நம் வேதாந்தவாரிய ரென்றுணரலாம். பூர்வாசார்ய ரஹஸ்யங்களில் கண்ட பொருள்களில் சிலவற்றை அநுபபன்னமென்று மறுப்பது ஒரு ப்ரக்ரியை. மறுத்த பொருளையே வேறோரிடத்தில் ஸ்வஹஸ்தேந எழுதி வைத்தல் ஒரு ப்ரக்ரியை. முன்னம் தாமே மறுத்ததைப் பிறகு தாமே தழுவுவதைச் சிலர் தவறாக நினைக்கக் கூடுமென்று கருதி "அப்படி யருளிச் செய்தவர்களுக்கு இப்படி யபிப்ராய" மென்று வழிவிடுதல் ஒரு ப்ரக்ரியை"... .. இத்யாதி.

நம் ஸ்வாமி எதிலும் ப்ரதிஜ்ஞையோடு நிற்பவரல்லர். ஒன்றுக்கு ஒன்பது நிதர்சனங்கள் காட்டி நிலைநாட்டியே நிற்பர். மற்றுள்ள விஷயங்கள் கிடக்க; ப்ரபத்திவிஷயத்திலும் பிராட்டி விஷயத்திலுமன்றோ ப்ரபலசர்ச்சைகள் நடந்துபோருவது. இவ்விரண்டிலும் எத்தனை நூல்கள் எழுதியுள்ளார்களென்பது தெரியாததன்றே. ஸ்வாமியின் நூல்களிலன்றோ சாந்த: கோலாஹல: என்று கிடக்கிறது. இவற்றில் ப்ரத்யவஸ்தானம் பண்ண வேண்டில் உண்மையான வித்வான்கள்—குருகுல க்லிஷ்டர்கள் முன்வரவேண்டும். கஜேந்த்ர ஆக்ரந்தனத்தில் "நாஹம் நாஹம் நசாஹம் ந ச பவதி புநஸ் தாத்ருசோ மாத்ருசேஷு" என்று நடாதூரம்மாள் பணித்த கணக்கிலே அவ்வோவித்வான்கள் கையோய்ந்து நிற்க, இந்த நிரக்ஷரகுக்ஷி தான்வாய்வைக்கவேண்டிய விஷயத்தை விட்டிட்டு, தத்தகபித்தகவென்றெழுதுவதனால் என்னபயனும்?

மேலே நிர்தேசித்த ப்ரபத்திவிஷயத்திலும் பிராட்டிவிஷயத்திலும் நம்ஸ்வாமியி னுடைய பலபல நூல்களில் மிக விரிவான சர்ச்சைகளும் நிர்ணயங்களுமுள்ளன. அவற்றில் கண்டுகொள்கவென்று எழுதிப்போவதில் அடியேனுக்கு த்ருப்தியில்லை. இவ்விரண்டு விஷயங்களிலும் ஸ்வாமியின் நிருபணங்களை ஸாரமாக நினைவூட்டுகிறேன் நிர்மத்ஸர நிபுணவித்வான்களுக்கு.

ப்ரபத்த்யுபாயத்வ விஷயத்தில் ஸ்வாமியின் நூல்களிலிருந்து தெரிவிக்கக்கூடிய ஸாரமிவ்வளவே; உபேயம் என்று ஒன்றும், உபாயம் என்று ஒன்றும் வழங்கப்பட்டு வருவதை யாவரும் அறிவர். ஒரு உபேயத்தைப் பெறுவதற்கு ஒன்று அல்லது பல உபாயங்கள் வேண்டியிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் ஸித்திப்பது அரிதன்றோ. ஒருவன் ஒரு க்ராமப்ராப்தியை உபேயமாகக் கொண்டால் சகடகமநாதிகளை உபாயமாகக் கொள்ளக் காணுகின்றோம். இப்படியெங்கும் கண்டுகொள்ளலாம். இந்த ரீதியில் மோக்ஷப்ராப்தியை உபேயமாகக்கொண்டால் அதற்கொரு ஸாதனம் இருந்தே தீரவேணு மென்னுமபிப்ராயத்தைச் சிக்கனக்கொண்டு 'உபேயமும் அவனே, உபாயமும் அவனே' என்றறுதியிட்ட ஆசாரியர்கள்மீது அம்பு தொடுக்கும் முறையிலே சிலவிடங்களில் ப்ரத்யவஸ்தானங்கள் பண்ணியிருப்பதுண்டு. ஆனால் இவ்வபிப்ராயம் நிலைநின்றிருக்கவில்லை. க்ரமேண விமர்சிக்க விமர்சிக்க, "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தி முதலானவற்றைச் சிந்தனை செய்ய நேர்ந்து கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் *நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:. உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி.* (31) என்கிற சுலோகத்தின் விவரணத்தில் "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வாநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:" என்றருளிச் செய்தார். இங்கு, 'நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திர் யுக்தா" என்றெழுதலாமாயிருக்க "மோக்ஷோபாயதாபுத்திரபி ந ஸ்யாத்" என்றெழுதியிருப்பது மிகவினிதன்றோ? இந்த வொரு வாக்யத்தாலே உபாயவிஷயமாகத் தாம் ஆங்காங்கு எழுதிவைத்த மறுப்பு வாக்கியங்கள் யாவும் ப்ரதிக்ஷிப்தங்களென்பதை ஸம்சய விபர்யயமறவுணரலாம். இதற்குமேலொருவிசேஷம். ஸ்வவ்யாபாரத்தில் உபாயத்வத்தைக்கொள்ளாமல் அந்த வுபாயத்வத்தை எம்பெருமான் பக்கலிலே நிக்ஷேபிக்கவேணு மென்று ஆளவந்தார் ஸாதித்தார்; அதற்குச் சேர வியாக்கியானமிட்டானபிறகு அதையும் சிறிது ஆராய்ந்தார். ஒருவஸ்து உபாயமாக இருந்தால் அதன்தன்மை எப்படிப்பட்டதாயிருக்கவேணுமென்னில் "நதீநிஸ்தரணு நந்தரம் ப்லவபரித்யாகம்போலே" என்றகணக்கிலே உபேயம் ஸித்தித்தவனந்தரம் உபாயம் த்யாஜ்யமாக இருக்கும். ஆகவே எம்பெருமானை உபாயமாகக் கொண்டால் கீழ்ச்சொன்ன நியாயத்தாலே அவனையும் ஒருகால் த்யஜிக்க வேண்டிவருமோவென்று கருதி எம்பெருமானையுங்கூட உபாயமென்ன ஸஹியாத சில மஹான்களிருப்பதாக ந்யாஸதிலகத்தில் (11.) "த்வத் கைங்கர்ய ப்ரவணமநஸ: த்வத்குணாஸ்வாத மத்தா:, த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்" என்றருளிச் செய்தார். இதில் *த்வயி ஏகஸ்மிந்நபி முக்தவத் ஸாதநத்வம் விஜஹத:* என்றருளிச் செய்த சுவை மிக மிக ரஸிக்கத் தக்கது. 'ஸ்வவ்யாபாரங்களிலே ஸாதநத்வத்தைத் தள்ளி அதை எம்பெருமானிடத்தில் நிக்ஷேபிக்கவேணுமென்றார்கள் ஆசார்யர்கள்; உபாயம்

என்கிற சொல்லே அருவருக்கத்தக்கதாதலால் எம்பெருமானையுங்கூட உபாயமென்ன ஸஹியாதார் [ஸு௱ரய: மே ஸ்வதந்தாம்] எனக்கு ருசிக்கக் கடவர்கள் என்று இங்ஙனே பணித்த வேதாந்தவாசிரியர் "உபாயம் உபாயம், உபாயாநுஷ்டாநம் ஸாதநாநுஷ்டானம்" என்று உருப்போடுகிற வகுப்பினர்க்குத் தலைவராயிருக்க எங்ஙனே முடியும்? அவர் தென்னாசாரியர்களில் தலைவரேயாவர் என்று முழுமனமாக விசைந்து கைகூப்பி நிற்க இவ்விஷயமொன்று போராதோ ப்ராமாணிகர்களுக்கு.

இனி, பிராட்டி விஷயத்திலும் நம்ஸ்வாமி ஏறக்குறைய நூறுபக்கங்களில் விவரித்துள்ள விஷயங்களின் ஸாரத்தை வெகுசுருக்கமாக உணர்த்துகிறேன். ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "இதி மந்தைரிதம் ப்ரோக்தம்" என்றும் "த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: தர்மாணும் அவிசாரத:, வ்ருத்தாந் அப்ருச்சந் ஸந்தேஹாந் அந்தச் ச்வப்ரமிவர்ச்சதி. அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி துராத்மநாம், குதர்க்கவ்யால தஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரியவாஜிநாம்" என்று மித்யாதிகளை அஸ்தாநே பொறித்து வைத்ததனால் அந்த நூலுக்குத் திட்டுச்சுவடியென்கிற ப்ரஸித்தி நெடுநாளைக்கு முன்னமேயுண்டாயிற்று. இந்த நூற்றாண்டிலெழுந்தருளியிருந்த மஹாப்ராஜ்ஞரும் மஹாப்ராமாணிகருமான மாம்பலம் வாஸுதேவாசார்ய ஸ்வாமி நல்ல நிருபகராகையாலே மேலேயெடுத்துக் காட்டினவிடங்கள் இடைச்செருகலாய்ப் புகுந்தவையென்று எழுதியும் ப்ரசாரம்செய்தும்வந்தார். உபதேசரத்தினமாலையில் *முன்னோர்மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே—தம்நெஞ்சில், தோற்றினதே சொல்லியிது சுத்தவுபதேசவரவாற்றதென்பர் மூர்க்கராவார்* என்கிற பாசுரத்தினால் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:* இத்யாத்யுபாலம்பங்கள் முன்னமேயிருந்தனவென்று ஸ்பஷ்டமாக விளங்குவதனால் ப்ரக்ஷேபவாதம் ஏற்கத்தக்கதன்றென்று பிறர் சொல்லிவருகிறார்கள். கீதாபாஷ்யதாத்பர்ய சந்திரிகையில் [பதினோராமத்யாயம். இருபத்தேழாவது ச்லோகத்தின் விவரணஸ்தலே] யாதவப்ரகாசீயர்கள் மூன்றுமத்யாயத்திலும் இவ்விடத்திலும் சில பலசுலோகங்களை ப்ரக்ஷேபித்து ப்ரவசனம் செய்து வருகிறார்களென்று அந்த (ப்ரக்ஷிப்த) ச்லோகங்களைப் பூர்த்தியாகவெழுதி "ஏதே ச்லோகாஸ் ஸந்தி ந வேதி தேவோ ஜாநாதி" என்றெழுதியுள்ளார் நிகமாந்தகுருவரர். (அதாவது) இந்த ச்லோகங்கள் உண்மையா அல்லவா என்பதை எம்பெருமானறிபுமத்தனை யென்றபடி. இதே ரீதியில் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரக்ஷேபமுண்டா இல்லையா என்பதை நிர்ணயிக்க நாம் அநதிகாரிகள். ஆனால் அந்த இடங்கள் ஸர்வாத்மநா அஸம்பத்தங்களென்பது சிலாலிகிதம். இக்காலத்தில் தத்ப்ரவசனம் செய்து போருமவர்கள் விவேகிகளோடு அவிவேகிகளோடு வாசியற இந்த கெட்டங்களில் எவ்விதமாக நிர்வஹித்துப் போருகிறார்களென்றால், "ஸ்வாமி தேசிகன் திருவுள்ளத்தில் எவ்வளவு கொதிப்பு ஏற்பட்டிருந்தால் இப்படி ஸாதிக்கும்படியாயிருக்கும். பரமஸத்வஸ்திதியான ஸ்வாமியும் இவ்வளவு சீற்றம் பொங்கி ஸாதிக்கும்படியாச்சுதென்றால் அப்படிப்பட்ட அபார்த்தங்களைப்பற்றி நாம் என்ன சொல்லுவது!" என்று கண்ணீரைப் பெருக்குவதும் விக்கிவிக்கி யழுவதும் செய்து தலைக்கட்டுவது தவிர வேறில்லை. வேறு என்ன சொல்லமுடியும்?

"ஸர்வஸ்வாமிநியாய், ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான
பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில்
வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்"

என்று ஸகலபூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை யடியொற்றி ஸாதித்து, அதைத் தாமே வியாக்கியானமும் பண்ணி "எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாக மட்டும் பிராட்டி நிற்கிறாள்" என்பதைப் பலபல ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸ்ரீஸூக்திகளால் நிலைநாட்டி, "மோக்ஷ ப்ரதே பகவதி கடகதயா ஏஷா நிஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்கிற ஸ்ரீஸூக்தியை சிகரமாக எழுதிவைத்து, ஸித்தோபாயசோதனம் பண்ணுவதாகத் தொடங்கி, பிராட்டியை சரணம்புக வேண்டியதென்கிற விதியும் பிராட்டியை சரணம் புகுகிறேனென்கிற அனுஷ்டானமும் காண்கிற சில வசனங்களை யெடுத்தெழுதி "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தேயும் பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......என்கிற தசையாம்" என்றெழுதிவைத்திருப்பதை யாவரும் காணலாம். இவ்விடங்களிலே காலக்ஷேபம் ஸாதிக்கிறவொருவரை வித்வானனவொருவர் மடிபிடித்து நின்று "இதற்கு என்ன அர்த்தம்? நின்று சொல்லும்; சொல்லுவீரா?" என்று கேட்டால் வாய்திறக்க வழியுண்டா? மத்யஸ்தத்ருஷ்டியாலே தோற்றுகிற ப்ராமாணிகார்த்தம் எது? பற்றினது விடாதே சொல்லுகிற அபார்த்தம் எது? அந்த அபார்த்தத்தைச் சொன்னவர் யார்? என்று கேட்டால் வர்ஷசதமானாலும் வாயைக் கையைத் திறக்க வழியில்லையே. இதை நம்ஸ்வாமி தமது ஆந்திரக்ரந்தங்களிலும் வடமொழி நூல்களிலுமெழுதியிருக்கிறார்.

எம்பெருமான் தான் பண்ணுகிற ஜகத்ஸ்ருஷ்டி பலிக்காமல் பழுதுபட்டுக் கொண்டே வந்தாலும் என்றேனுமொருநாள் பலிக்குமென்கிறநசையாலே மேன்மேலும் ஸ்ருஷ்டி பண்ணிக்கொண்டே வருகிறபடியை யருளிச்செய்கிற நம்மாழ்வார் "சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா" என்கிறார். சோம்பலில்லாமல் செய்து வருவதாக ஸாதித்தபடி. இதை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் "நிஸ்தந்த்ராலோஸ் தவ நியமத:" என்று நிஸ்தந்த்ராலு பதத்தையிட்டு மொழிபெயர்த்தார். இப்படியே நம்ஸ்வாமியும் மேலே விவரித்த கேள்வியைச் சோம்பலில்லாமல் தமது நூல்களிலே அஸக்ருத் கேட்டுவருகிறார். எதனால்? என்றேனுமொருநாள் யாரேனுமொரு வித்வான் நின்று விடைதருவரோவென்கிற நசையினால். "மதிதெளர்பல்யாத் ந மத தெளர்பல்யம்" என்கிற விடைதான் சிலர்வாக்கில் வருகின்றது. இந்த விடையை எவரும் சொல்லலாம். நாடகங்களில் விதூஷகனென்று ஒருவன் இடையிடையேவந்து கிறுக்கு செய்வதுபோல் இந்த அவ்யபதேச்ய யதாஜாத ஜடக்குடுக்கையைக் கிளப்பிவிட்டுச் சிலர் க்ருதக்ருத்யர்களாகிறார்கள்போலும். இன்னமும் கக்கவேண்டிய சாயங்கள் கக்குவதற்கே ஹேதுவாகும்.

ஸ்ரீ காஞ்சியில் மஹாப்ராஜ்ஞராயும் க்ரந்த ப்ரணயநப்ரவீணராயுமெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமிக்கு 1953ஆண்டில் எழுபத்தோராவது திருநக்ஷத்ர பூர்த்தி மஹோத்ஸவம் நடந்ததாம்; அந்த ஸ்வாமியின் திருவடியில் ஆச்ரயித்தவரும் பாதுகாஸேவக பிருதபூஷிதருமாயிருந்த ஆவியூர் அனந்தராமதாஸன் என்பவரைக் கொண்டு உபயுக்தார்த்தவைசத்யம் என்றொரு புத்தகம் நாற்பத்தொருபக்கங்கொண்டது அச்சிட்டு வெளிவந்திருக்கிறது. "4—4—1953. இது கிடைக்குமிடம் காஞ்சீபுரம் ஆச்ரமம். விலை ரூ. 1." என்கிற முகப்புடன் வெளிவந்திருக்கிறது. நாளைக்கும் கோழியாலம் ஸ்வாமியாச்ரமத்தில் விற்பனை செய்யப்படுவதாகவும் தெரிகிறது.

இது வெளிவந்து பதின்மூன்று வருடங்களுக்கு மேலாகிறபடியால் கோழியாலம் ஸ்வாமியின் ஜீவத்தசையிலேயே ஏழெட்டு வருஷகாலம் இப்புத்தகம் உலவியிருந்ததாக ஸ்பஷ்டமாகிறது. இதில் ஏதோ சில விஷயங்கள் தவிர அனேக விஷயங்கள் நடுநிலையில் நின்று அவதரித்திருக்கிறது. இப்புத்தகம் அனைவர்க்கும் எளிதாக (விலைக்கு)க் கிடைக்கக் கூடியதேயானாலும், இதில் 1 முதல் 71 வரை லக்கமிட்டுள்ள வாக்யராசிகளில் முக்கிய மாகத் தோன்றுகிறவற்றை இங்கெடுத்துக்காட்ட விரும்புகிறேன். "மனிதர்களுக்கு ஸத்வகுணம் தலையெடுக்கிறகாலமுமுண்டு, ரஜஸ்தம:ப்ராசுர்யகாலமுமுண்டு" என்று அதில் தெரிவிக்கப்பட்டிருப்பதால் பெரும்பாலும் ஸத்வகுணோந்மேஷத்தினால் கோழியாலம் ஸ்வாமியே யெழுதியருளினதாகவும், ஆவியூர் சிஷ்யரை நிமித்தமாத்திரமாகவே கொண்ட தாகவும் வாக்யஸந்நிவேசங்களினால் தெரிகிறது. அதிலுள்ள சில வாக்யராசிகள் இவை ;—

(1) இந்த லோகத்தில் அனேக தர்சனங்கள் உண்டாயிருந்தாலும் ஸகல தர்சனங்களுக்குள்ளேயும் ஸ்ரீபகவத் ராமாநுஜ தர்சனமே ரொம்பவும் ச்ரேஷ்டமானது. இதுதான் ஸகலலோக ஹிதைஷியாயும் ஸகல ச்ருதிஸ்மிருதிதிஹாஸ புராணங்களுக் கொத்ததாயும் ஆபாத சூடம் அநபாயியாயும் விளங்குகிறது. இந்த தர்சனத்தில் பிறந்த வர்கள் எவ்வளவோ பாக்கியசாலிகள் என்பதில் ஸந்தேஹமேயில்லை. அப்படிப்பட்ட அபாரமான பாக்யவசத்தினால் இந்த தர்சனத்தில் பிறந்துங்கூட இந்த தர்சனத்தின் மஹார்த்த விசேஷங்களைச் சிலர் அல்லது பலர் அடியோடு அறியாமலே காலம்கழிப்பது சோசநீயம். (2) ஸ்ரீராமாநுஜதர்சனம் என்று வழங்கிவருவதனால் இது ஸ்ரீபாஷ்யகாரர் காலத்தில்தான் புதிசாகத் தோன்றினதென்று சொல்லுவதற்குச் சிலர் ஏற்பட்டார்கள். அது முன்னமே தேசிகனுடைய காதில் விழுந்தபடியால் யதிராஜ ஸப்ததியில் "யதிக்ஷமா ப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம் ததபி கிம்" இத்யாதியானச்லோகத்தினால் இதற்கு பதில் ஸாய்த்திருக்கிறார். நவீனமாகத் தோன்றினத்தாலேயே ஒரு பாதகமுமில்லையென்றும், வஸ்துஸ்திதியில் நவீனமன்று, டங்கத்ரமிடகுஹதேவாதிகள் கைக்கொண்டதர்சனமேயிது என்றும் ஸாய்த்திருக்கிறார். (3) ஸ்ரீசடகோபதர்சநம், ஸ்ரீமந் நாதமுநிதர்சனம், ஸ்ரீயா முநாசார்ய தர்சநம் என்று சொல்லாமல் அவர்களைவிட பிற்பட்டவரான பாஷ்யகாரரை யிட்டு ராமாநுஜதர்சனம் என்று வழங்குவது எதனாலேயென்னில், "த்ராதம் ஸம்யக் யதீந் த்ரைரிதமகில்தம:கர்சநம் தர்சநம் ந:" என்று தேசிகனே ஸாய்த்திருப்பதால் பாஷ்யகாரரே இதை நன்றாகக் காப்பாத்தினாரென்கிற காரணத்தாலேயென்று அறிந்து கொள்வது. (4) . பாஷ்யகாரரைவிட மிகவும் அதிகமான க்ரந்தங்களை அதாவது ந்யாயஸித்தாஞ்ஜனம் ந்யாயபரிசுத்தி சததூஷணீ அதிகரணஸாராவலீ தத்வமுக்தாகலாபம் ஸர்வார்த்தஸித்தி தத்வடீகை முதலான பரச்சதக்ரந்தங்களை ஸாய்ச்சு தேசிகனே இந்த தர்சனத்தை ஜாஸ் தியாகக் காப்பாத்தினபடியால் தேசிகதர்சனமென்று இக்காலத்தில் நாம் வழங்கிவருகிறோம். பகவத்ராமாநுஜதர்சநம் என்று சொல்வதைவிட்டு தேசிகதர்சனம் என்று சொல்லக்கூடா தென்று திருப்பக்குழிஸ்வாமியும் பட்டண்ணுஸ்வாமியும் பட்டப்பாஸ்வாமியும் சொல்லிக் கொண்டிருந்தார்களென்று கேழ்வை. அவாள் ப்ராசீனர்களாகையாலே நவீனக்கிளர்ச்சி களொன்றும் தெரிந்துக்கொள்ளாமல் சொல்லியிருக்கக்கூடும். தபால்களிலும் மத்த எந்த எழுத்திலும் ஸ்ரீமதேராமாநுஜாயநம: என்று எழுதிவந்ததை மாத்தி ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாயநம: என்னே எழுதிவரவேண்டியதென்னு ஸித்தாந்தம்செய்து அப்படியே

எழுதிவருகிற நாம் தேசிகதர்சனமென்றே சொல்லிவரவேண்டும். கோபாலதேசிகதர்சனம் என்று சொல்லக்கூடாதோவென்னுல் நாலு பெரியவாள் அப்படிச் சொல்ல ஆரம்பித்தால் அதுவும் ஒரு பாட்டையாக ஆய்விடுகிறது. (தேசிக) என்கிற சொல்லுக்கு ஆசாரியர் என்பதுதானே அர்த்தம். தேசிகதர்சனம் என்னுல் ஆசார்யருடைய தர்சனம் என்னுதானே அர்த்தமாகும். யாருக்கு எந்த ஆசார்யர் இஷ்டமோ அந்த ஆசார்யரை உத்தேசிக்கலாமல்லவோ. ஆகையாலே இதில் பிணக்கமில்லை. (5) தேசிகனுக்கும் நமக்கும் முன்னேபிடித்து ஸம்பந்தம் கிடையாதென்றும் புதிசாக ஏற்படுத்திக்கொண்டதென்றும், அநேக திவ்யதேசங்களில் தேசிக விக்ரஹம் தென்னுசார்யர்களாலேயே ஆராதிக்கப்பட்டு வருகிறதென்றும், நவீனகாலத்தில்தான் அங்கங்கே வெளிகளில் தேசிகன் ஸன்னிதிகள் புதிசாகக் கட்டிவைக்கப்பட்டு ஆராதனைகள் நடந்து வருகிறதென்றும் இப்படி செய்கிறவர்களுக்கு நவீனர்களென்று பெயரென்றும் சிலர் எழுதிவருகிருர்கள். இதையெல்லாம் நாம் காதில்போட்டுக்கொள்வதே அநாவசியம். ஏனென்னுல் "புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் நசாபி க்ருத்யம் நவமித்யவத்யம்" என்னு காளிதாஸர் சொன்னுர். அதையநுஸரித்து தேசிகனும் "ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதனம்" என்று ஸாய்ச்சிருக்கார். இன்றைக்கு நவீனமென்னும்படியிருப்பதே பத்துநாள் பொருத்தும் பத்து மாதம் பொருத்தும் பத்து வருடம் பொருத்தும் இன்னும் காலக்ரமத்தில் பழசாக ஆய்விடுகிறதல்லவா? வேதத்தை இப்போது அநாதியென்கிருேம். ஸம்ஸாரத்தை அநாதியென்கிருேம். எதுவும் ஏதோ ஒரு காலத்தில்தானே தோன்னியிருக்கும். ஸ்வயம் வ்யக்தம் என்கிறதும் ஒருகாலத்தில் வெளிப்பட்டுத்தானேயாகிறது. அப்போது அது நவீனமாகத் தோன்னுலும் காலக்ரமத்தில் அநாதியாய் விடுகிறதல்லவா? ஆகையாலே நவீநம் ப்ராசீனம் என்கிற வாதமே எனக்குப் பிடிக்கிறதில்லை. தேசிகனை தைவமாகக் கொண்டாடுகிற பாக்யம் எமக்கு என்னிக்கி ஏற்பட்டாலென்ன? அன்னிக்கித்தானே நாம் பிறந்தவர்களாக ஆகிருேம். (6) இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் தேசிகனை தங்களுடைய திவ்யதேசங்களில் ஆதிகாலந்தொட்டே ப்ரதிஷ்டைசெய்து ஆராதனுேத்ஸவாதிகள் நடத்திவந்தாலும் அது நம்போல்வாருக்கு த்ருப்திகரமான முறையில் இல்லாதபடியால் தானே நாம் தனியான ஏற்பாடுகள் செய்துகொண்டோம். அதனுல் பாதகமென்ன? பிள்ளைப்பெருமாளையங்காரையும் தேசிகனையும் துல்யமாக நினைத்துக்கொண்டிருப்பவர்களோடே நாம் ஒத்துழைப்பது தகாது என்கிற காரணத்தாலேயே நாம் ரொம்பநாளாகவே பிரிந்திருந்தோம். (7) ஸகல ஆழ்வார்களின் அவதாரஸ்தலங்களும் ஸகல ஆசார்யர்களின் அவதாரஸ்தலங்களும் அனேக திவ்ய தேசங்களும் நீண்டகாலமாகவே தங்களுடைய ஸம்ப்ரதாயமாக இருக்கிறதென்னும் அரையர்கள் முதலான கைங்கரியபரர்களும் தங்கள் ஸம்ப்ரதாயமாகவேயிருந்து வருவதாகவும் தேசிகன் அவதார ஸன்னிதியிலும் தங்களுடைய கைங்கரியங்களே அத்யாபி நடந்து வருவதாகவும் ஏதேதோ எழுதுகிருர்கள். இவைகளுக்கெல்லாம் நாம் ஒரே வார்த்தையில் ஸமாதானம் சொல்லி முடிக்கிருேம். வைதிககர்மாநுஷ்டானங்களிலும் வேதாத்யயநாதிகளிலும் ச்ரத்தைகொள்ளாத இதரர்கள் கோவில்களிலேயேயிருந்துகொண்டு பஞ்சமஹா யஜ்ஞாதிகளையும் விட்டு, வேதாத்யயநாதிகளையும் விட்டு தமிழ் வேதபாராயணத்திலேயே ஊத்தம் கொண்டிருந்து "திவாராத்ரம் ஸ்ரீரங்க பாலந கர்மடா:" என்று பட்டர் அருளிச்செய்தபடிக்கி கோவிலைக்காக்கிற கர்மடர்கள் என்றிருந்தார்கள். நாம் அப்படியிருக்கவில்லை. தேசிகன் த்ரமிடபணிதிகளில் ஆதரம்

காட்டினதும் 'நமக்கு அதில் த்வேஷம்கூடாது, விஷயம் நல்லதாகையாலே கொள்ளலாம்' என்றுகாட்டினபடி. (8) பகவத் ராமாநுஜஸித்தாந்த நிஷ்டர்களான நமக்கு எந்த மதத்திலும் எந்த ஸம்பிரதாயத்திலும் எள்ளளவும் பகைகூடாது. எந்த மதத்திலும் கெட்டதுமிருக்கும் நல்லதுமிருக்கும். அதை நாம் பழியாமல் கைப்பத்தவே வேண்டும். பாஷ்யகாரர்கூட சங்கரபாஷ்யாதிகளில் எவ்வளவோ உபாதேயங்களிருப்பது கண்டு பங்க்திகளையுங்கூட கைப்பத்தியிருப்பதைப் பார்க்கிறோம். (18) நம்முடைய அல்ப புத்தியில் ஏதேதோ சங்கைகள் தோன்றுவது இருக்கட்டும். ச்ருதப்ரகாசிகாக்ரந்தம் தேசிகனுக்கு ப்ராணனைவிட தித்திப்பானது. அதிபயங்கரமான கலாபனையிலே அந்த மஹாக்ரந்தத்தைக் காப்பாத்திவைத்தாரென்பதுதானே தேசிகனுடைய பிரபாவங்களில் சிரஸ்ஸாக நிற்கிறது. அப்படிப்பட்ட க்ரந்தம் வேறுவிதமான திருநாமத்தைக் கொள்ளாமல் (ச்ருதப்ரகாசிகா) என்கிற திருநாமமேகொண்டிருப்பதால் நடாதூரம்மாள் ஸன்னிதானத்தில் கேட்ட அர்த்தங்களையே அப்படியே பிரகாசப்படுத்தின க்ரந்தமென்று பிரஸித்தமாச்சுது. அப்படிப்பட்ட க்ரந்தத்தில் (தோஷேபி குணத்வபுத்தி:) என்பது பலதரம் இருக்கும்போது வீணான ஆக்ஷேபங்கள் விலை செல்லுமோ? ப்ராமாணிகஸரணியே சரணம்.

(32) ஈச்வரன் ஸர்வலோகங்களுக்கும் நிருபாதிகரக்ஷகனாக இருக்கச்செயும் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் புருஷகாரம் அவசியம் வேண்டுமென்றும் அதில்லாமல் பகவான் மோக்ஷப்ரதானரூபமான ரக்ஷணம்பண்ணமாட்டானென்றும் சாஸ்திரங்கள் முறையிடு கிறது. இதை தேசிகன் சில்லரை ரஹஸ்யங்களிலும் பெரியரஹஸ்யங்களிலும் ஸம்க்ஷேப விஸ்தரங்களாலே புந: புந: பேசியிருக்கிறார். புருஷகாரத்வமாவது தாபயித்ருத்வம். [கொடுப்பிக்கை.] பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தை ஒப்புக்கொண்டபின் அவளுக்கு ஸாக்ஷாத்பலப்ரதத்வரூபமான உபாயத்வத்தையும் ஒப்புக்கொள்ளுவது அஸங்கதமென்றும் ஈச்வரனைப்போல பிராட்டியும் உபாயபூதையென்றுசொல்வது சேராதென்றும் சிலர் வாதிக் கிறார்கள். ஈச்வரனைப்போலவே பிராட்டியும் ஸாக்ஷாதுபாயபூதையென்று யாரும் சொல்ல வில்லை. புருஷகாரபூதை என்பதற்கே பர்யாயமாகச் சில சப்தங்களைச் சொல்லிவருகிறோ மேயொழிய வேறில்லை. ஸ்வாமி ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் "இயம்கேவலலக்ஷ்மீசோபாயத் வப்ரத்யயாத்மிகா" என்று ஸாய்ச்சிருக்காரேயொழிய "லக்ஷ்மீததீசோபாயத்வப்ரத்யயாத் மிகா" என்று ஸாய்ச்சிருக்க வில்லைதான். ரஹஸ்யரத்நாவலியென்கிற தேசிக ரஹஸ்யத்தில் "ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம், ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்று அருளிச்செய்து, இதை ரஹஸ்யரத்நாவலீஹ்ரு தயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்துமிருக்கார். சதுச்லோகீபாஷ்யத்திலும் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணாம் கடகதயா ஏஷாதிஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றிருக்க நாம் வேறு சொல்லுவதாய் சிலர் க்ஷேபிப்பது பிசகு. பலப்ரதத்வம் பகவானுக் கும், புருஷகாரத்வம் பிராட்டிக்கும் வ்யவஸ்திதமே. "அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய', நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மனுக்ரஹே" என்கிற தேசிக ஸார்வபௌம திவ்ய ஸூக்திக்குப் பொருத்தமாகச் சொல்லுமர்த்தமே சிரஞ்சீவி

யாய் விளங்கும். (35.) ஸ்ரீமத் ராமாயணத்தில் சூர்ப்பணகைக்கு அங்கபங்கம் செய்தது லக்ஷ்மணனென்றே ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. ஸ்ரீராமன் அது செய்யும்படி நியமித்த மாத்திரமே தவிர தன் கையால் அது செய்ததில்லை. ஆனாலும் ஸ்ரீராமனே அது செய்ததாக ஆழ்வார்கள் அடிக்கடி சொல்லுவதாகக் கேழ்வைப்படுகிறோம். அவ்வித மாகவே பிராட்டியே மோக்ஷப்ரதானம் செய்ததாகச் சொல்லுவதிலும் பாதகமொன்று மில்லை. ப்ரயோஜ்ய கர்த்தாவையும் ப்ரயோஜக கர்த்தாவையும் அபேதமாக உபசரிப்பது சாஸ்த்ர ஸம்மதமேயாகும். அமாத்யனுடைய புருஷகார பலத்தாலே மஹாப்ரபு ஒரு ச்ரோத்ரியனுக்கு ஜாகீர் ஜமீன் கொடுக்கிறான். பெற்றவன் அடியறிந்து அமாத்யனே தனக்கு ஜாகீர் கொடுத்ததாகப் பறை சாற்றுகிறான். இதில் ஏதாவது அஸாங்கத்ய முண்டோ? ஒன்றுமில்லை. 'ஐயா, அமாத்யனுக்குக் கொடுக்க என்ன அதிகாரம்? அரசன் தான் கொடுத்தான்' என்று சிலர் சொன்னால் இதை மறுக்க வேண்டிய அவச்யமேயில்லை. 'அமாத்யன்தான் கொடுத்தான்' என்ற வார்த்தையையும் மறுக்க அவசியமில்லை. இந்த நியாயமே ப்ரக்ருத விஷயத்திலுமொக்குமாகையாலே இதில் போரடுமவர்களை அசடு களென்றே சொல்லவேண்டும். (36.) த்வய சரீரத்தில் விசாரம் நடக்கும்போது "ஸ்ரீமந் நாராயணசரணௌ" என்று சொல்லப்பட வேண்டுமென்கிற ஆபாதனம் ஒரு வகுப்பில் தோன்னியிருந்தது. அந்த ப்ரயோகம் ஸாதுவா? அஸாதுவா? என்கிற கிளற்சியும் உண்டாச்சுது இந்த சர்ச்சையில், "ஸமஸ்யமான பதார்த்த ஸம்பந்திலிங்க வசநாநாம் ப்ரதான மாத்ராநுஸாரித்வம்" என்றொரு நியாயம் மஹாமதிகளால் ப்ரஸ்தாவிக்கப் பட்டது. இது அஸமஞ்ஜஸமாயும் சாஸ்த்ரஜ்ஞான வைதேசிகர்களால் ஸ்வகபோல கல்பிதமாயுமிருக்கிற நியாயமென்றும், இதில் லிங்கபத ப்ரயோகம் ஸர்வாத்மநா அநுசித மென்றும் ஓரிடத்திலும் ஸமந்வயம் காட்டவே முடியாதென்றும் 'ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சம்' முதலான க்ரந்தங்களிலே இதரர்கள் ப்ரபலமாக வாதப்போர் நடத்தியிருக்கிறார்கள். "ப்ரஹ்மேசாதிஸுரவ்ரஜ: ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:" என்கிற ஆளவந்தார் ப்ரயோகத்தை யெடுத்துக்காட்டியும் தூஷிக்கிறார்கள். (37.) சுருக்க மாகத் தெரிவிப்போம். ப்ரஹ்மஸூத்ர மத்வ பாஷ்யத்தில் (ப்ரஹ்மசப்தோ விஷ்ணவி) என்று ஸர்வஜ்ஞரான ஆசாரியர் எழுதினார். (விஷ்ணௌ) என்று எழுதவேண்டியிருக்க (விஷ்ணவி) என்று எப்படி எழுதினாரென்று டீகாகாரர் கேட்டுக்கொண்டு (ஸ்வக்ரந்தஸ்ய ஆர்ஷத்வ ஸ்தாபநார்த்தம் ஆஹ-விஷ்ணவீதி) என்று மர்மத்தைக் கண்டுபிடித்து உபபத்தியை எழுதிவைத்திருக்கார். இப்படிப்பட்ட பல வழிகளிலே மஹான்களுடைய மஹா ஸூக்திகளை உபபத்தி செய்துகொள்ள ஏன் முடியாது. நன்றாகமுடியும். லிங்கம் ப்ரதாந மாத்ராநுஸாரியாயிருக்கணம் என்பதில் என்ன தப்பு. களத்ரசப்தம் க்லீபந்தான். ஆனாலும் (ஸகளத்ரம ராஜா) என்று சொல்லிவிடலாமோ? சொன்னால் தப்புதானே.

(38.) ஆனால் (ஸ்ரீமந்நாராயணசரணௌ) என்கிறவிடத்தில் லிங்கத்திற்கு என்ன வுபயோகமென்னு கேழ்க்கலாம். இங்கே பொஹு ஸூக்ஷ்மமாகத் தெரிவிக்கவேண்டிய துண்டு. (பதங்க்ரிச் சரணோஸ்த்ரியாம்) என்கிற கோசத்தின்படி சரணசப்தம் நபும்ஸக லிங்கத்திலுமுண்டல்லவா? புல்லிங்கமான நாராயண பதத்தோடே சரண சப்தத்தைச் சேர்த்துப்ரயோகிக்கும்போது நபும்ஸகசரணசப்தம் ப்ரயோகிக்கவே கூடாது. தெரியாமல் சிலர் ப்ரயோகித்துவிட்டுத் திண்டாடுவர்கள். அவர்களைத் திருத்தவே மஹா

ப்ராஜ்ஞர் ந்யாயசிக்ஷை பண்ணிவைத்தார். இதை நுட்பமாக க்ரஹிக்கமாட்டாதவர்கள் ஏசினுலென்ன? ஏசட்டுமே. (42.) வஸ்து தோறும் பரிஸமாப்ய வர்த்தன விஷயத்தில் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் முடிவாக என்ன தீர்ப்பு செய்யப்பட்டதென்பதைப் பார்க்க வேணும். (க்ருத்ஸ்ந ப்ரஸக்திர் நிரவயவத்வ சப்தகோபோவா) என்று சங்கித்து (ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்) என்று பரிஹரித்த ஸூத்ரகாரருடைய திருவடிகளே தஞ்ச மென்று முடிக்கப்பட்டது. அந்த ஸூத்ரத்திற்கு என்ன விதமாக பாஷ்யம் இருக்கிற தென்பதை நாம் தெரிந்து கொள்ளாமலில்லை. தெரிந்து கொண்டும் அந்தரங்கத்தை வஞ்சித்து வாதம்பண்ணுவது யுக்தமாகுமோ? ப்ரமாணைகசரணரான ஸ்ரீமத் ரங்கராமாநுஜ மஹா தேசிகனும், "விசித்ர சக்தியோகோ ந விருத்த:" என்று முடித்துப் போனார். (43.) அத்தோடும் நில்லாமல் ஸஹஸ்ரகீதியின் ஸ்வகீய ஒன்பதினுயிரத்தில் பரிஸமாப்ய வர்த்தமாநத்வத்தை சிலாசாஸநம் செய்து வைத்துப்போனார். வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்ய தீபிகைக்கும் ரொம்பவும் பொருந்தியதான இதை நாம் வீணுகக் கண்டிப்பது நம்முடைய மநஸ்ஸாக்ஷயத்திற்கு ஒத்திருக்கவில்லையே என்று சில ஸமயங்களில் தோண்ணுகிறது. சில ஸமயங்களிலோ வென்னுல் நம்முடைய மதத்தை நாம் விட்டு விடலாமா வென்று தோன்றுகிறது. இதுதான் (மம மாயா துரத்யயா) என்னப்பட்ட மாயை.

(44.) எப்படியும் பகவானுக்கு விசித்ர சக்தியோகத்தை நாம் ஒப்புக்கொண்டே யாகவேண்டும். அகடித கடநா சக்தியும் அபலபிக்க முடியாமலிருக்கிறது. பகவானுக்கு அந்த சக்தியில்லை யென்ருல் எவ்வளவோ சாஸ்த்ரார்த்தங்கள் க்ஷேபமடைந்து விடுமல்லவா? ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் (அதோ யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான்) என்று முடிவுகட்டியிருக்கிறது (யதாகமம்) என்றதை விவரிக்கப் புகுந்தால் கட்ட குட்யாம் ப்ரபாத மாகிறது. இதில் நிற்போம். (50.) இனி உபாய விஷயத்தில் சிறிது சர்ச்சிப்போம். பகவத் ப்ராப்திக்கு எது உபாயம்? என்கிற விசாரத்தில் பலர் பலவிதமாகச் சொல்லிவருகிருர்கள். கர்மஜ்ஞானபக்திகளை யுபாயமென்பர் சிலர். ப்ரபத்தியை உபாய மென்பர் சிலர். இன்னமும் ஏதேதோ சொல்லுகிருர்கள். ஒன்றும் தேசிக ஸ்ரீ ஸூக்தி களுக்குப் பொருந்தினதாக இல்லை. "ஸ்வப்ராப்தே: ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்ய மாண: ச்ருதௌ" என்று உத்கோஷித்திருக்கிற தேசிகனுடைய திருவள்ளத்தையறியாமல் சொல்லும் சொற்களுக்கு நாம் காது கொடுக்கவே கூடாது. ஸ்வப்ராப்திக்கு ஸ்வயமேவ ஸாதநமாக ச்ருதிகளில் கோஷிக்கப்படுவதாக ஸாதித்திருக்கிற ஸ்வாமியின் திருவுள்ளத்தில் முக்கியமாக (நாயமாத்மா) ச்ருதியே உறைந்திருக்கும். (51) இது நாம் அநுமானமாகச் சொல்லுகிறதல்ல; ஸ்பஷ்டமாக ஸாய்ச்சிருப்பதைக் கொண்டே சொல்லுகிறோம். இதை 8–14 ச்லோக பாஷ்யத்தில் "தத்வியோகமஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே, மத்ப்ராப்த்யநுகுணோபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகம் ச அஹமேவ ததாமீத்யர்த்த:; யமேவைஷ வ்ருணுதே தேன லப்ய இதி ஹி ச்ருயதே" என்று ஸ்ரீமத் பாஷ்யகாரர் கல்வெட்டாக ஸாய்ச்சிருக்கார். இந்த சேதநனிடத்தில் வினையும் அத்வேஷம் தொடங்கி பரமபக்திபர்யந்தமான பரிபாகங்களை பகவானே தான் விளைவிக்கிரு னென்று ஸகல சாஸ்த்ர ஸாரார்த்தம் தேறுகிறது. இதையெல்லாம் அதிவாதமென்று ஸஹஸா சொல்லிவிடுவர் சிலர். அங்கே தாத்பர்ய சந்திரிகையில் ஸ்வாமி ஸாய்ச்சிருப்ப

தாவது "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ யமேவேதி' என்பதாக. (52.) இதனுல் நாயமாத்மாச்ருதியின் உயிரான பாகமாகிய "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" என்பதன் யதார்த்தமான அர்த்தம் விளங்கினதோடுகூட, இது அதிவாதமன்று, ஸத்யமான அர்த்தம் என்பதும் விளங்கிவிட்டது. "நாஸௌ புருஷ காரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந" இத்யாதி பரஸ்ஸஹஸ்ர பகவத் வாக்ய அநுக்ருஹீதமுமாகிறது இவ்வர்த்தம். (53.) இவ்விஷயத்தை தேசிகன் ரஹஸ்ய க்ரந்தங்களில் பலதடவை அருளிச்செய்கிருர். சிந்தனை பண்ணித்தரிக்க முடியாத பல பல பங்க்திகளின் ஸாரப்பொருளைத் திரட்டி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அற்புதமானவொரு ச்லோகம் ஸாதித்திருக்கிருர். அது ஒன்றை மாத்திரம் மனனம் பண்ணிஞல் போதும். அதாவது (உபாய: ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந்) இத்யாதி ச்லோகரத்னம். இதில் கடைசி பாதத்தைப் பார்க்கிறவரையில் அவரவர்கள் ஆகாசதாண்டவம் செய்து கொண்டிருப்பர்கள். (நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:) என்கிற கடைசி பாதம் ஆச்சரியமாக அவதரித்து ஆகாசதாண்டவகாரர்களின் அட்டஹாஸங்களை அடக்கி நின்றது. நிதாநம் என்கிற பதத்தின் அர்த்தம் தெரியுமன்றே. (நிதானம் த்வாதிகாரணம்) என்று அமரகோசம். சேதநன்தலையில் எந்த ஸுக்ருதத்தை ஏறிட்டாலும் அதற்கெல்லாம் பகவானேதான் மூலகாரணமாக முடிந்து நிற்பன் என்று மருமத்தை வெளியிட்டு விட்டார் ஸ்வாமி. (54.) எதையும் அதிவாதம் அதிவாதம் என்றே சொல்லி யொதுக்குவது தகுமா? (ஸ்வாமிந் ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்) என்ற யதார்த்தமான அநுஸந்தானத்தையுமா அதிவாதமென்று தள்ளுவது? ஸ்பஷ்டோக்திகளைக் கொண்டு அஸ்பஷ்டோக்தி ஸ்தலங்களை நிர்வஹிப்பதென்பது ஸர்வ ஸம்மதமான வழி. (ந்யஸ்ய த்வத்பாத பத்மே வரத!நிஜபரம் நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி) இத்யாதிகளில் வேருன பொருள் தோன்றிஞல் கீழே விவரித்த ஸ்பஷ்டார்த்தகங்களாய் அநந்யதாஸித்தங்களான ஸூக்திகளைக் கொண்டு அநாயாஸமாக நற்பொருள் காண வேண்டியதன்றே யுக்தம். (59.) "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மது ஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:" என்கிற ச்லோகத்திஞல் ஸர்வேச்வரன் நம்முடைய கர்ப்பகாலத்திலிருந்தே க்ருஷி செய்து வருவதாக விளங்குகிறது. ப்ரமாணகதிகள் இப்படியிருக்க, எலியெலும்பர் என்று ஆசாரியர்கள் சொல்லுகிறபடி அத்யந்தம் துர்ப்பலரான நாம் ஏதோ மலையைச் சுமந்து விட்டதாக்வும் அது ஸாதநமாய் விட்டதாகவும் நினைப்பதும் சொல்லிக்கொள்வதும் எழுதுவதும் தகாது தகாது. (63.) உபாயாநுஷ்டான விஷயத்தில் "த்வயோச்சாரணுநூச்சாரணே" த்யாதி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரபங்க்தியைக்கொண்டும், (அந்தோ நந்த, உக்த்யா தனஞ்ஜய...) என்கிற ந்யாஸதிலக ச்லோகங்களைக்கொண்டும் இதர ஸித்தாந்திகள் எழுதியுள்ள விஷயங்களைப் பத்திச் சொல்லுகிறேம். "ச்ருத்வா வரம் தததநுபந்த மதாவலிப்தே" என்கிற தேசிக ஸூக்தியை நிஷ்பக்ஷபாதமாக கவனித்தால் பாஷ்யகாரருடைய அநுபந்தத்தையிட்டு நாம் (நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி) என்றிருக்கலாம்படியான ஒரு வரம் பாஷ்யகாரருக்கு ஸ்ரீரங்க நாதன் கொடுத்திருப்பதாகவும் அது கர்ணபரம்பரயா ஆப்தர்களின் வாயிலாகக் கேட்டு அறியத்தக்கதாகவும் ஸ்வரஸமாக அர்த்தமாகிறது. கும்பகோணத்திலுள்ள மஹா ப்ராஜ்ஞர்கள் பார்த்து அச்சுபோட்ட புஸ்தகத்தில் இந்த வரப்ரகாரம் நன்ருக விவரிக்கப்

பட்டிருக்க அது அஸம்பத்தமென்று குத்தமும் குறையும் கூறுவது ப்ராமாணிக பத்ததியாகாது. (64) சில வருஷங்களாய் எந்த காரணத்தாலோ நமக்கு அனுஷ்ட்டானத்தில் வந்திருப்பதை நாம் விடமுடியாதுதான். (தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்) (யத்யதாசரதி ச்ரேஷ்ட:) என்கிற ப்ரமாணங்கள் நமக்குக் கைகொடுத்தேதீரும். இதில் நாம் முக்கியமாக ஒரே வார்த்தை சொல்லுகிறோம். சரியோ தப்போ, ஒரு பரம்பரையில் ஒரு ஆசாரம் வந்துவிட்டால் அதைப் பழிப்பது அசட்டுத்தனம். எந்த மதத்திலானாலும்ஸரி; நமக்கு அடி தெரியாதபடி ஒரு ஆசாரம் வந்திருந்தால் அது அப்ராமாணிகமாயிராது, ப்ராமாணிகமாகத்தானிருக்கும். (ஸங்கே சக்தி: கலௌயுகே) என்றதையும் கவனிக்கவேண்டும். ஆகவே நம்முடைய அத்ருஷ்டார்த்தத்தை அநாவச்யகமாக யாராவது பழித்தால் அதற்கு நாம் காது கொடாமலிருப்பதுதான் உசிதம். சக்ராங்கனமும் புதுசுதானப்பா என்று சொல்லிவிடவும். அன்பர்களே! எந்த அவ்யபதேச்யனுக்காக இந்த *ஈந்தனனீயாதவின்னருளென்கிற கட்டுரை வெளிவருகின்றதோ, அந்த அவ்யபதேச்யன் முக்கியமாகக் கீழே காட்டிய கோழியாலம்ஸ்வாமியின் வாக்யராசிகளால் தெளிவுபெறவேண்டும். அது அந்த ஸ்வாமியின் சிஷ்யாள் யாரோ எழுதினதேயொழிய அவர் ஸாதித்ததல்லவென்னில், யார் ஸாதித்ததாகவாவதிருக்கட்டும்; விஷயங்களுக்கு பதில் சொல்லித்தானேயாக வேண்டும். அதைவிட்டு அர்த்தமில்லாத நிந்தைகளைக் கொட்டுவதனால் என்னாகும்? இதோ நவநிதிவார்த்தைகளையும் அந்த அவ்யபதேச்யன் காலைமாலை நிச்சலும் சிந்தனை செய்யட்டும். ... ... ...

## நித்யாநுஸந்தேய நவநிதி வார்த்தைகள்.

[இந்த அவ்யபதேச்யனும், இவனை முன்னே நிறுத்துமவர்களும் நித்தியம் அநுஸந்தானம் செய்யவேண்டிய நவநிதியான நவரத்ன வார்த்தைகள்.]

1. "நாம் செய்யும் செய்கைகள் யாவும் அஸங்கதம்" என்று மநஸ்ஸாக்ஷிகமாக நன்கு தெரிந்திருந்தும் விட்டுத் தொலைக்கவேண்டியவற்றை இன்னமும் விடாமல் பற்றிக்கொண்டு மன்றாடுவதுதான் வெகு ஆச்சரியம்! அது என்னவென்றால், "தேசிகன் திவ்யப்ரபந்த காலக்ஷேபம் செய்துகொண்டிருக்கையில் ப்ரம்மதந்திரஸ்வதந்திரஜீயர் பிரதாந சிஷ்யராயிருந்து அவருக்கு ராமாநுஜதயாபாத்ரம் என்ற தனியன் அருளிச்செய்தார்" என்றெழுதிக்கொண்டும் சொல்லிக்கொண்டும் காலங்கழிப்பதுதான். தேசிகர் திருவாய்மொழிக்கு விபுலவியாக்கியானமாக எழுபத்திராயிரப்படி (அல்லது) எழுபத்துநாலாயிரப்படியான நிகமபரிமளம் ஸாதித்து அதை ப்ரவசனம் செய்துகொண்டிருந்தாரென்றும், அந்த நிகமபரிமளத்தில் ஒன்பதினாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி, பன்னீராயிரப்படி ஆகிய எல்லாப் படிகளிலும் உள்ள அபார்த்தங்களெல்லாம் கண்டிக்கப்பட்டு, அனேகவிடங்களில் ஆறாயிரப்படியும் கண்டிக்கப்பட்டுத் தொலைந்துவிட்டனவென்று ஓயாமல் எழுதிக்கொண்டிருந்தவர்கள் சிலவாண்டுகளாய் நிகமபரிமள ப்ரஸ்தாவமே செய்யாமல் வெத ஸாதுக்களாயிருப்பது எதனாலோ?

2. பாத்திரத்தனியன் எனப்படுகிற இரண்டு சுலோகங்களையும் பார்க்கும்போது இரண்டும் ஒரே சாயலாக இருப்பதனால் ஒன்றைப்பார்த்து மற்றொன்று போட்டியாகச்

செய்யப்பட்டதென்பதில் சந்தேகமுண்டா? எது முற்பட்டது, எது பிற்பட்டது என்பதை நிர்ணயிக்க சிரமமுண்டா? கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான ஸகல திவ்யதேசங்களிலும் தேசிகருடைய அவதார ஸ்தலத்திலுமுட்பட எந்தத் தனியன் விஜயஸ்ரீயோடு விளங்குகின்றதோ அதுதான் முற்பட்டதென்றும், எந்தத் தனியனைச் சொல்லவேணுமென்று நெஞ்சால் நினைக்கும்போதே தடையுத்தரவுகளும் தண்டனைகளும் கைமேல் கிடைக்கிறதோ அதுதான் பிற்பட்டதும் கல்பிதமுமான தனியனென்றும் நிர்ணயிக்க என்ன தடை? பாத்ரம் தோன்றியதைப்பற்றிமட்டும் ஐதிஹ்யமெழுதுகிறவர்கள், நமோராமாநுஜார்யாய தனியன் தோன்றினதைப்பற்றி ஏனோ ஒரு ஐதிஹ்யமும் எழுதுவதில்லை? அப்புள்ளாருக்கு தேசிகன் சாதித்த தனியனில் (ப்ரபூதம்) என்கிற அச்லீல சப்தம் வருவதால் அதைத்தள்ளி நமச் ஸ்ரீசைல நாதாய போலே வேறொரு அநுஷ்டுப்பு எழுதி வைக்கும்படி பிள்ளானுக்குக் கட்டளையிட, அவர் அதை விண்ணப்பம் செய்தார் என்று ஓர் ஐதிஹ்யம் ஏன் எழுதிவைக்கக்கூடாது? எல்லாவற்றுக்கும் ஒரு கர்த்தாவைக் காட்டுகிறமாதிரி அதற்கொரு கர்த்தாவைக் காட்ட இன்றுவரை ஒருவராலும் முடியவில்லையே! ஏன் முடியவில்லை? ஏதோவொரு பெயரை எழுதிவைத்தால் அடிப்பாரார்? அதைக் கல்பித்தகாலத்தில் இதைப்பற்றிப் பிற்பாடு கேள்வி வரப்போகிறதா? என்றுதானே நினைத்துவிட நேர்ந்தது.

3. சங்கராசாரியார் முன்னிலையில் ராமாநுஜர் தனியனைச் சொல்லுவதென்றோ, ராமாநுஜர் முன்னிலையில் சங்கரர் தனியனைச் சொல்லுவதென்றோ எங்கேயாவது ஏற்பட்டிருக்கிறதா? ஏற்படக்கூடிய விஷயமா இது? தேசிகர் ஸகல ஆசார்யர்களோடும் ஒத்து வாழ்ந்தபடியாலே மற்ற ஆசார்யர்களின் திருமுன்பே எவ்விதமான தனியன்கிரமம் நிர்விவாதமாய் நீண்டகாலமாய் நடைபெற்றுவருகிறதோ அவ்விதமான கிரமமே தேசிகர் முன்னிலையிலும் நடந்துவாராநிற்க, இதில் வீணானவொரு அஸஹிஷ்ணுதை ஏற்பட்டு அப்பப்ப! என்னென்ன விபரீதங்கள் உண்டுபண்ணப்பட்டன? எத்தனை லக்ஷக்கணக்கான பணச்செலவு செய்யப்பட்டது? லக்ஷக்கணக்குதானா? கோடிக்கணக்குமன்றோ ஆயிற்று. எத்தனை செய்தும் பயனொன்றுமில்லையே. தேசிகர் பகவத்விஷய காலக்ஷேபம் சொல்ல எப்போது ஆரம்பித்தார்? எத்தனை வருஷகாலம் ஸ்ரீமாந் வேங்கட தனியனைச் சொல்லி அந்தக் காலக்ஷேபம் நடந்துவந்தது. திடீரென்று ஒருநாள் அதைத்தள்ளி ராமாநுஜ பாத்ரத்தை யொரு சுதந்திரஜீயர் விண்ணப்பித்தாரென்றும், அதைத் தேசிகரும் ஆமோதித்தாரென்றும், கவிதார்க்கிக கேஸரீ என்கிற கர்ணகடோரசப்த ஸந்தர்ப்பம் பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு வேண்டாமென்று தேசிகரே கட்டளையிட்டாரென்றும் இப்படியெல்லா மெழுதிவைத்திருக்குமவர்கள் தங்களை தேசிக பக்தர்களென்று கூசாமல் சொல்லிக் கொள்வது ஐயோ! என்ன காலக்கொடுமை!

4. ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்றால் ராமாநுஜ தயாபாத்ரமென்னவேண்டியது; நமச் ஸ்ரீசைலநாதாய என்றால் நமோ ராமாநுஜார்யாய என்ன வேண்டியது; வாழி திருவாய்மொழிப்பிள்ளை என்றால் வாழியிராமாநுசப்பிள்ளான் என்னவேண்டியது, தேறும்படி யுரைக்குஞ்சீர் என்றால் மாறும்படி யுரைக்குஞ்சீரில்லாமே தேறும்படி யுரைக்குஞ்சீரென்பது, செய்யதாமரைத்தாளிணை வாழியேயென்றால், வைக்கோல் புரியை வாயில் போட்டுக்கொண்டு மெல்லுகிறாப்போலே வஞ்சப்பல சமயம் மாற்ற வந்தோன்

வாழியேயென்பது, அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ என்றால் நானிலமுந்தான் வாழ நான்மறைகள்தாம் வாழ, மாநகரில் மாறன் மறைவாழ என்பது, இன்னமொரு நூற்றாண் டிருமென்றால் இன்னமொரு நூற்றாண்டிருமென்பது—இப்படியாக அநுஷ்டுப்புக்கு அநுஷ்டுப்பு, வெண்பாவுக்கு வெண்பா, ஆசிரியத்திற்கு ஆசிரியம், தொங்கலுக்குத் தொங்கல் இங்ஙனே வைரக்கமலத்திற்கு ரங்கூன் டைமண்டுபோலே கற்பனைசெய்திருக்கிற படியைக் கண்டுகொள்ள வல்லாரில்லையா? "மாநகரில் மாறன் மறை வாழ" என்றொரு வாழ்த்து. அந்த மாநகர் எது? அது ஸாமாந்ய சப்தமா? விசேஷ சப்தமா? "அரங்கநகர் வாழ" என்று ஏற்கெனவே விசேஷத் திருநாமம் அவதரித்துவிட்டபடியால் அதையிட்டு வெண்பா இயற்றக் கூசி 'மாநகரில்' என்று அர்த்தமற்றவொரு சொல்லைப் புகுத்தி விட்டார்கள். நம்மாழ்வார் "தென்திருப்பேரெயில் மாநகரே" என்று தென்திருப்பேரை யென்னும் திவ்யதேசத்தை மாநகராக வ்யபதேசித்தருளியுள்ளார். அந்த மாநகரில் மாறன் மறை வாழவேணுமென்று கோஷிக்கிறீர்கள்? "மாநிலத்தில் மாறன் மறை வாழ" என்று திருத்திக்கொண்டு கோஷித்தால் கேட்பாருண்டா? ஆக்ரஹம் தாங்கமுடியாமல் அஸம்பா விதத்தையெல்லாம் சேர்த்து எவனோவொரு வழிப்போக்கனையிட்டுப் பாடுவித்துக் கொண்ட பாட்டுக்களென்று தெரிந்துகொள்ள அருமையுண்டா? மாநகரில் என்றால் அது எந்த நகரமென்று கேள்வி வராமற்போகுமா? டில்லி, பாம்பே, கல்கட்டா, அலஹாபாட், ஹைடராபாட் என்னுமவை மஹா நகரங்களாதலால் அவற்றிலே மாறன் மறை விளங்க வேணுமென்று மங்களாசாஸனம் செய்கிறீர்கள்? திருமலைமால் திருமணியாய் சிறக்க வந்தோன் வாழியே" என்னுமிது ஒரு அஸம்பத்த உத்கோஷம். திருமலை மாலின் திருமணி தேசிகராக வந்ததா? தேசிகர் திருமலைமால் திருமணியாய் வந்தாரா? என்று கேட்டால் 'என் தாயார் ஆசாரியன் திருவடிகளையடைந்தார்' என்ன வேண்டியிருக்க 'ஆசார்யர் என் தாயார் திருவடிகளையடைந்தார்' என்னுமாபோலே இதென்ன அநந்வித ப்ரலாபமென்று விட்டுத்தொலைக்க முடியவில்லையே. 'திருமலைமால் திருமணியேயென வந்தோன் வாழியே' என்று எளிதாகத் திருத்திக்கொள்ள முடியவில்லையா? "வஞ்சப்பல ஸமயம் மாற்ற வந்தோன்" என்கிறீர்கள். 'மாய்க்க வந்தோன் வாழியே' என்று திருத்திக் கொள்ளலாகாதா? இந்த பாத்திரமும் வாழியும் பிறந்தநாள்முதல் க்ஷேபமும் க்ஷோபமும் தவிர வேறுண்டா? இந்த சனி நமக்கேதுக்கு? என்பவர்கள் எத்தனைபேர்கள்?

5. "த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய:" என்று தாமே ஸாதித்தபடி முப்பது பர்யாயம் ஸ்ரீபாஷ்யப்ரவசனம் செய்து போந்தவர் ஸ்வாமி தேசிகர். அதனிடையே திருவாய்மொழி ப்ரவசநமும் செய்துகொண்டிருந்தவரேயொழிய கேவலம் ஸ்ரீபாஷ்யத்தை மட்டும் ப்ரவசனம் செய்துகொண்டிருந்தவரல்லர். இப்படிப்பட்ட ப்ரவசனங்களில் ச்ரோதாக்களான சிஷ்யர்கள் ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனை யநுஸந்தித்துக் கொண்டிருந்தவர்களேயல்லது வேறொன்றை நெஞ்சாலும் நினைத்தவர்களல்லர். அப்படி யிருக்க திடீரென்று ஒருநாள் ராமாநுஜபாத்ரம் வந்து முளைத்ததென்பது விவேகிகளின் வாக்கில் வரக்கூடியதா? 'கவிதார்க்கிக கேஸரி' என்கிற விசேஷணமுள்ள தனியன் பகவத் விஷய காலக்ஷேபத்திற்குத் தகாதென்று தள்ளப்பட்டதாகப் பரகாலமடம் எழுதுவதும், இதை வடகலையுலகம் ஆமோதிப்பதும் என்ன கலிக்கேடு! கவிதார்க்கிக கேஸரீ என்று சொல்லி பகவத்விஷயம் ஸேவித்தவர்கள் எத்தனை பேர்கள்? எத்தனை வருஷகாலம் அப்படி

ஸேவித்தார்கள்? அவர்களெல்லாரும் பிறகு பிராயச்சித்தம் செய்துகொண்டார்களா? இவ்வுலகில் எத்தனை ஆசாரியர்கள் அவதரித்திருக்கவில்லை. அவர்களுக்கெல்லாம் தனியன்கள் இல்லையா? வாழி திருநாமமில்லையா? அவற்றைச் சொல்லுவதற்கு ஒரு தடையுண்டா? ஒரு தண்டனையுண்டா? அவற்றைப்பற்றி நீதிமன்றங்களில் ஒரு விவாதமுண்டா? இந்த ராமாநுஜாபாத்ரத்துக்குத்தானு நாடறிய, நகரமறிய, த்வீபமறிய த்வீபாந்தரமறிய ஸகல மரியாதைகளும் நேரவேணும்! உண்மையில் இந்தப் பரிபவத்தை விளைப்பவர் மானிடவரல்லர்; ஸ்ரீமாங்வேங்கடநாதார்ய தனியனே தன்னை யவமதித்தது காரணமாக விளைத்தது, விளைக்கின்றது. "தேசிகர் தனியனை தேசிகர் முன்னிலையில் சொல்லுகிறோம்" என்று ஒரு பெருங்கூட்டத்தார் சொன்னால் இதைத் தடைசெய்ய ஒரு மனிதனுக்குத் தோன்றுமா? மஹா விவேகிகளான த்வீபாந்தரஸ்த ஜட்ஜுகளுக்குமன்றோ இது இமிடேஷன் தனியனென்று தெரிந்துவிட்டது. ஹிந்துக்களில் எத்தனை ஜாதியாருண்டோ, ப்ராஹ்மணர், அப்ராஹ்மணர், வைஷ்ணவர், ஸ்மார்த்தர், மாத்வர், மலையாளர், தெலுங்கர், கன்னடர் இத்யாதி பலபல வகுப்பினர், மஹம்மதியர், க்ரிச்சியன்கள், ஹுணர் இத்யாதி வகுப்பினர்—ஆக பூலோகத்திலுள்ள ஸகல ஜாதீயர்களிடத்திலும் ராமாநுஜாபாத்ர வழக்கு ஏழெட்டு திவ்யதேசங்களிலிருந்து சென்றிருக்கிறது. ஸிவில் விவகாரங்களாகவும் கிரிமினல் விவகாரங்களாகவும் தாற்காலிக பிடிஷன்களாகவும் மற்றும் பல சில்லரை விவாதங்களாகவும் கோர்ட்டுகளில் ஏறினவையெல்லாம் "பாதுகாஸஹஸ்ரபஹுமானம் என்று ஒரு ஸ்வாமி எழுதியிருக்கிறரே அந்த பஹுமானத்தையன்றோ பெறுவித்திருக்கின்றன. தென்னுசாரியர்கள் குடிவாழகில்லாமல் வெளியேறிப்போன சிலவிடங்களில் கொடிநாட்டிவிட்டோமென்று குதிக்கிறவிது அபூர்வ ஸமாசாரமா?

6 தேசிகருக்கும் உங்களுக்கும் அநுஸ்யூதமான ஸம்பந்தம் கிடையாதென்பதும் ஏதோ சண்டைக்காக வலுவில் இழுத்துப் போட்டுக்கொண்டதேயென்பதும் பார்வைமெண்டு தீர்ப்புதானே. ஆனால், அதனால் உங்களுக்கு ஒரு ஹானியுமில்லை. தேசிகரோ ஒப்புயர்வற்ற மஹாசார்யர் ஈடுமெடுப்புமில்லாத குருஸார்வபௌமர். அப்படிப்பட்ட ஆசார்யச்ரேஷ்டரை நீங்கள் தலைவராகக் கொண்டதற்குத் தகுதியாக பரம ஸாத்விக பாவத்தை வஹிக்கவேண்டியதல்லவா கடமையாகும். அந்த மஹாசார்யருக்கு ஸத்யமாக எங்கெந்த பெருமைகளுளவோ அந்தந்த பெருமைகளை யநுபவித்துக்கொண்டு பரம ஸாத்விகஸரணியில் போதைப் போக்குவது எவ்வளவு அழகு! அவ்வழகில் ஈடுபட பாக்கியமில்லையே ஸ்ரீமாங் வேங்கடநாதார்ய தனியனைத் தினப்படி ஆயிரம்முறை நியதியோடு ஜபித்தால் ஸகலவித அபீஷ்டஸித்தியுமுண்டாகும். ஆனால் ராமாநுஜாபாத்ரத்திற்கு வெற்றியுண்டாகவேணுமென்கிற ஒரு அபீஷ்டம்மட்டும் தலைகீழாகநின்று தவம்புரிந்தாலும் ஸித்தியாது. பூர்வாசாரியர்களென்று எத்தனையாசாரியர்கள் உள்ளார்களோ அத்தனையாசாரியர்களும் தென்னுசாரியர்களேயொழிய ஒருவர்கூட வேற்றுமைப்பட்டவரல்லர் என்பதைத் திடமாக நெஞ்சில் கொள்ளுக. இக்கொள்கைதான் உலகுக்கே க்ஷேமங்கரம்.

7. இருநூறு வருடங்களுக்குப் பிற்பட்ட செய்திகளை வெகுதூரத்தில் விட்டு விடுவோம். தேசிகருடைய காலம் 600 ஆண்டுகளாகிறதல்லவா? இடையில் நானூருண்டுகளையெடுத்துக்கொள்வோம். அந்தகால கலையில் தென்னுசார்யவ்யதிரிக்த ஸம்பிரதாயஸ்த

ராக ஒருவர் ஆழ்வார்களைப்பற்றியோ ஆசார்யர்களைப்பற்றியோ விசிஷ்ய தேசிகரைப் பற்றியோ அணுமாத்திரமாவது ப்ரஸ்தாவம் செய்திருப்பதுண்டோவென்று எத்தனை தடவை கேட்டாலும் பதிலில்லையே. முற்காலம் பிற்காலம் இடைக்காலம் என்று காலத்தை மூன்றாகப் பிரித்து, (1) முற்காலத்தில் தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளைப் பலவிடங்களில் உதாஹரித்தவர்கள் வாதிகேஸரி ஜீயரும் மணவாளமாமுனிகளும்; (2) இடைக்காலத்தில் காஞ்சீபுரம் அழகிய மணவாள ஜீயரும் சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்ய ந்ருஸிம்ஹராஜ ப்ரப்ருதிகளும்; (3) பிற்காலத்தில் மைஸூர் அனந்தாழ்வான் ப்ரப்ருதிகள் என்று நம்ஸ்வாமி. கண்ணாடிபோல் காட்டியிருக்கிறாரல்லவா? இவ்விதமாகப் பிறர் காட்ட விரும்பினால் பிற்காலத்தவர்கள் தவிர வேறொருவரைக் காட்ட முடியுமா? முடியுமானால் வெளியிட்டு உலகமெல்லாம் உண்மையுணரும்படி செய்யலாமே. இதுவன்றோ மிகமிக முக்கியமான பணி. உலகமெல்லாம் இதையன்றோ ஆவலுடன் எதிர்பார்க்கிறது.

8. ஒன்று முக்கியமாகக் கவனிக்கவேணும். திருக்கச்சிநம்பிகளின் மரபைச் சேர்ந்தவர்களாக அனேக ப்ராந்தங்களிற் சிலர் வாழ்கின்றார்கள். அவர்களில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தைக் கொண்டாடுமவர்கள் மிகச் சிலரே. விபூதியையும் ருத்ராக்ஷத்தையும் தரிப்பவர்கள் அதிகமாகக் காணப்படுகிறார்கள். அவர்கள் திருக்கச்சிநம்பி பக்கலில் மிகுந்த பக்தியோடுதானிருக்கிறார்கள். பலவிடங்களில் நம்பி ஸன்னிதிகளுக்கு அவர்கள் டிரஸ்டிகளாயுமிருந்து வருகிறார்கள். அன்னவர்கள் நம்பிக்குத் திருமண்காப்பை மாற்றவேணுமென்றாவது விபூதியணிவிக்கவேணுமென்றாவது, ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயப்படி நடந்து வருகிற வழிபாடுகளை மாற்றவேணுமென்றாவது நெஞ்சாலும் நினைப்பதில்லை. 'நாம் எப்படியிருந்தாலும், *ராமாநுஜமுநேர் மாந்யரான திருக்கச்சிநம்பிகள் விபவத்தில் எப்படியிருந்தாரோ அப்படியே அர்ச்சையிலும் இருக்கட்டும்' என்று அத்யவஸாயங்கொண்டு அவருடைய உண்மைநிலைக்கு எள்ளளவும் மாறுபாடில்லாமல் நடந்துகொள்கிறார்களென்பதை உலகமறியும். இதேபோல, தேசிகர் விஷயத்திலும் பிராமாணிகர்கள் இருக்கவேண்டிய நிலையை ஒருவர் தெரிவிக்கவேணுமோ? விவரிக்கவேணுமோ? வடகலை மதத்திலும் தாதாசார் குடும்பத்திலும் நிகரற்ற பெரியவராக விளங்கின திருப்புட்குழி ஸ்வாமி என்பவர் நீதிமன்றத்தில் ஏறி "விளக்கொளி தேசிகர் தென்கலைத் திருமண்காப்பு உள்ளவரே, தென்கலையாருடைய வழிபாடுகள்தான் அங்கு நடந்துவருவது, அங்கு வடகலை ஸம்பந்தம் யாதொன்றும் கிடையாது" என்று உள்ளபடி ஸாக்ஷியம் கூறினது ரிகார்டுகளில் ஏறி விளங்குவதை நம் ஸ்வாமி பல நூல்களில் எடுத்துக்காட்டியிருக்கிறார். அது பொய்யாக எழுதப்பட்டதென்று இதுகாறும் ஒருவர்கூட எழுத முன்வரவில்லை. இதனால் தேசிகர் தம் அவதாரஸ்தலத்தில் தம்முடைய உண்மை ஸ்வரூபத்தையுடையவர் என்பது மறுக்கமுடியாமலிருக்கின்றது. இதை நன்குணருமவர்கள் திருக்கச்சிநம்பி வம்சஸ்தராகக் கீழே தெரிவிக்கப்பட்டவர்களின் நடத்தையைப் பின்பற்றவேண்டாமா? தேசிகர் திருவுள்ளம் கன்றும்படியாகச் செய்து போருவதா தேசிக பக்திக்கு இலக்கணம்?

9. 'யார் என்ன எழுதினாலும், எவ்விதமாக ஹேளனம் பண்ணினாலும் நாம் தேசிகரை விட்டுவிடமுடியுமா? ஒருநாளுமில்லை; யார் எதை எழுதினால் நமக்கென்ன?

என்று நினைக்கவும் சொல்லவுங்கூடும். தேசிகரை விட்டுவிடவேணுமென்று யாரும் சொல்லவில்லை, அப்படி நெஞ்சாலும் நினைப்பாரில்லை. அவரை எதற்காக விடவேணும்? எந்த அம்சத்தில் அவர்க்குக் குறை? அவரைக் குலகுருவாகக் கொள்ளவேணுமேயானால் அவருடைய நூல்களில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட அர்த்தங்களை அப்படியப்படியே கொண்டாட வேண்டாமா? "உலகோ உறங்குமே" என்று திருவாய்மொழியில் நம்மாழ்வார் ஸாதிக்கிறபடி உலகமெல்லாம் உறங்குவதாகவன்றோ நினைத்திருக்கிறீர்கள். சில பிறமதஸ்தர்கள் நாராயணா நாராயணா என்று சொல்லிக்கொண்டே நாராயணனை நிந்திப்பது போலவும், சிலர் ராமசாமி என்று பெயர் வைத்துக்கொண்டே ஸ்ரீராமபிரானை நிந்திப்பது போலவும் வாய்க்குவாய் தேசிகன் தேசிகன் என்று சொல்லிக்கொண்டே தேசிக ஸ்ரீஸூக்திகளுக்கு நேர்விருத்தமாகவேயன்றோ ஒவ்வொரு விஷயமும் சொல்லப்பட்டு வருகிறது. இதற்குமேல் "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யே" என்கிற ச்லோக ரத்னத்திற்கு நம்ஸ்வாமியருளிய விபுலவியாக்கியானத்தை உபந்யாஸ சதத்வயத்தில் ஸேவித்து விதிதவேதிதவ்யர்களாருக. இனிமேல் புதிதாகவா ஸேவிக்கப்போகிறீர்கள்? ❋

## இடையில், மதுரை கனபாடி உவே. ஸுந்தராசாரியர் கடிதம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமதாண்டவன் நேற்றுப் பௌர்ணமியன்று இவ்விடத்தில் ஸங்கல்ப மஹோத்ஸவம் வெகு சிறப்பாகக் கண்டருளியாச்சுது. அபரிமிதமான ஸ்ரீவைஷ்ணவத்திரள் குழாங்கூடியிருந்து அநுபவித்த அதிசயம் வாசாமகோசரமென்றே சொல்லவேணும். வித்வான்கள் பலபேர்கள் விஜயம் செய்திருந்தபடியால் அவர்களுக்கு ஸன்மானம் செய்வதற்காக ஒரு ஸமயம் குறிப்பிட்டு, கண்டபேர்களும் வித்வான்களென்று சொல்லிக்கொண்டு உள்ளே புகாதபடி பார்த்துக்கொள்ள ஒரு ஸ்ரீகார்யஸ்தரை நியமித்தாச்சுது. எங்கும் நமக்குத்தான் முதல் ஸன்மானம் கிடைக்குமென்றும் நம்மைத்தான் முன்னே ஏளப்பண்ணுவர்களென்றும் நினைத்துக் கொள்ளுகிற ப்ராம்மணார்த்த ஸ்வாமிகள் எல்லாவூரிலுமுண்டாதலால் அப்படிப்பட்டவர்கள் சிலர் அங்கேயும் வந்திருந்தார்கள். அவர்கள் நமக்கு இங்கே ப்ரவேசம் கிடைக்காதென்று அறிந்து நிராசையாய் போய்விட்டார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவர் மட்டும் விடாப்பிடியாய் என்னை உள்ளே விட்டுத்தானாகவேண்டுமென்று மன்றாடினார். ஆனால் அவருடைய முகத்தைப் பார்த்தால் இவர்க்கு அக்ஷராப்யாஸமே ஆகவில்லை யென்று ஒவ்வொருவரும் நிச்சயமாக எண்ணும்படி யிருந்ததனால் ஸ்ரீகார்யஸ்தர் அவரை உள்ளே விடாததோடு வெருட்டியும் தள்ளிவிட்டார். அவரும் விட்டபாடில்லை. தள்ளிக்கொண்டு உள்ளே போகப் பெரும்பாடு பட்டார். அப்போது அவர்களுக்கு நடந்த ஸம்பாஷணை இது.

ஸ்ரீகார்யஸ்தர்—ஓய்! நீர் எவ்வூர்? உம்முடைய பெயர் என்ன? கையிலிருக்கிற புத்தகக்கட்டு என்ன? சொல்லும். உள்ளே புகாதவர்—நான் திருவெள்ளூர். என் பெயர் ஹ்ருத்தாபநாசிநீதீர நித்ராளுஜன ஜஞ்ஜகர். இந்த புத்தகக்கட்டு நானெழுதிய கண்டன க்ரந்தங்கள். (ஸ்ரீகார்யஸ்தர்) உம்முடையபேர் சொன்னீரே, இதுவே சர்மனா? வேறு சர்மனா? (பதில்) இது எனக்கு டைடலாகக் கிடைத்தது. இதையேதான் நான் எங்கும் சொல்லுவது வழக்கம். (கேள்வி) இந்த டைடலை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இது

உம்முடைய டைடலென்பது இப்போதுதான் தெரிந்தது. ஸந்தோஷம். உம்முடைய பெயரைச் சொல்லுங்காணும். (பதில்) ஸ்ரீமத்ராமாயணத்தில் ஸுந்தரகாண்டத்தில் ஒன்பதாவது ஸர்க்கத்தில் (13) "ராக்ஷஸேச்வர:—ஈஹாம்ருக ஸமாயுக்" என்றிருப்பது உமக்குத் தெரியுமா? (கேள்வி) அந்தம்ருகமாநீர்? அங்கிருந்து திருவள்ளூர்வந்து திருவள்ளூரிலிருந்து இங்கு வருகிறீர் போலும். நல்லது. இந்த புத்தகக்கட்டுகள் என்ன? (ஈஹாம்ருகத்தின் பதில்) நான் போட்ட கண்டனங்களையெல்லாம் கட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். உள்ளே கூடியிருக்கிற வித்வான்களுக்குத் தரவேணும். தாமதம் செய்யாமலும் எனக்கு சளஹஸ்திகை கொடுக்காமலும் உள்ளே விடும். (கேள்வி) அப்படியே செய்வோம். நீர் கொணர்ந்திருக்கிற கந்தைகளின் பெயரைச் சொல்லி ஒவ்வொன்றிலும் ஸாரமான சில வரிகளை வாசிப்பீரா? (ஈஹாம்ருகத்தின் பதில்) அதற்கென்ன தடை? இதோ வாசிக்கிறேன், கேளும்.

இதோ பாரும், இது ஈகையப்பன் சரித்திரமென்பது. இதற்கு மங்கள சுலோகம் கேளும். "ஈகாய் நரகமே போகாய் சாகாய் பரிபவங்களால். ஆகாயம் நோக்கியழுவாய் மாகாயம் தொலையும் வரை." (கேள்வி) 'மாகாயம் தொலையும் வரை' என்றால் என்னஜ்ஞே அர்த்தம்? (பதில்) மாம்ஸபிண்டமான காயம் தொலையும்வரை யென்று அர்த்தம். அர்த்தம் தெரியாமலா கவி பண்ணுவேன். மேலே கேளும். "அடடா முழு முழு மூடா! ஏதுக்கிப்படி நிரந்தரம் நித்யம். பரிபவமடையாநின்றாய்? இப்படியாவுன் சிரோலிபிர் ஹந்த." (கேள்வி) இந்த பரிபவம் என்றைக்கு நிற்கும். (பதில்) நிற்கவேணுமென்று என்ன கட்டாயம்? இது பராபவ வருஷமாகையால் இவ்வருஷம் முழுதும் தொடரும். ஸ்வாரஸ்யமாக நான் வாசிக்கிறேன்; இடையிடையில் எதையாவது கேட்டு டிஸ்டப் பண்ணுகிறீரே. வித்வான்களெல்லாரும் இவ்விடத்திலேயே குழுமி விட்டார்களே. நான் உள்ளேபோய் செய்யவேண்டியதை இங்கேயே செய்து விடுகிறேன். இதோ பாரும் இது மக்ஷிகாப்ரபாவஸாகரம். கடல்போன்றதிது. இதில் பல தரங்கங்கள். முதல் தரங்கம்—மக்ஷிகாமயூர ஸம்வாதம். இதோ பாரும். இது இரண்டாவது தரங்கம்—அஜகஜ ஸம்வாதம். இதோ மூன்றாவது தரங்கம்—திமிரமிஹிர ஸம்வாதம். இதோ நான்காவது தரங்கம்—வாயஸவைநதேய ஸம்வாதம். இது ரொம்ப ஆச்சர்யமானது. இதில் என் ப்ரபாவம் 116 சுலோகங்கள். (ஹ்ருத்தாப நாசிநீதீர நித்ராளுஜநஜஞ்ஜக:) என்கிற எனது டைடலின் வியாக்கியானம் இதிலேதானுள்ளது. இதோ பாரும் இவை யெல்லாத்துக்கும் மேலானது—வ்ருதாவலேப வித்வம்ஸம். இதில் திருமலைமால் திருமணியாய் சிரிக்க வந்தோன்வாழியே என்கிற உண்மையான பாடம் காட்டி, ப்ரபந்த சாரம் என்பதன் பொருளையும் வியாக்கியானம் செய்து ரொம்ப தடபுடல், ரொம்ப அமர்க்களம் பண்ணியிருக்கேன். இதோ பாரும் துர்வாத கண்டனம். இதில் எம்பாரையும் நஞ்சீயரையும் வளாசியிருக்கிறேன்.........இப்படி சொல்லிக்கொண்டிருக்கையில் உள்ளிருந்து குண்டாரகுண்டரொருவர் பதறியோடிவந்து முகஞ்சிதறப்புடைத்து வில்லிவாக்கம் சாக்கடையில் புரண்டுருண்டது போதாமல் வைகைக்கும் வந்து சேர்ந்தையா? இப்படியா ஒரு வெட்கங்கெட்டபிழைப்பு! என்று சொல்லி வெருட்டியோட்டி விட்டார். கனபாடி ஸுந்தரதாஸன்

(2) **திருவள்ளூர் வித்வான் திருமலையங்காருடைய கடிதம்.** மதுரையில் பரிபவப்பட்டுவந்த 'நித்ராளுஜநஜஞ்ஜகப்பேர்வழி' நானூறுபக்கங்கொண்ட உபந்யாஸசத

த்வயத்தை நாலு ஏட்டில் கண்டனம் செய்துவிட்டதாகக் கும்மாளமடிக்கிறது. 26-4-66ல் வெளிவந்த தினமணியில் ஒரு வடகலை வித்வான் உபந்யாஸசதத்வயத்திற்கு நீண்ட மதிப்புரையெழுதி வெளியிட்டிருப்பதை வீடுவீடாக ஏறி வாசித்துக்காட்டின சுணை கேடனிவன். மன்னார்குடிக்கடுத்த சேனங்குளத்தில் ஞான ஒளி என்கிற ஹிந்துமத தார்மிக மாதப்பத்திரிகை நடத்துகிறவர் R. S. ராகவாசாரியரென்பவர் வடகலை. அவர் நேற்று சித்திரைமாதப் பத்ரிகையில் "ஸகலஸத்விஷயங்களும் உள்ளடங்கப்பெற்று விளங்கும் ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையால் அனேகம் ஆஸ்திகவைஷ்ணவர் கிருதார்த்தர்களா கின்றனரென்னில் மிகையில்லை .....அதிலுள்ள அர்த்தவிசேஷங்களைக்கண்டு மகிழாதவர் கள் இருக்கவேமுடியாது. எத்துணையோ ஸம்ப்ரதாய விஷயங்களும் சாஸ்த்ரார்த்தங் களும் பலபடியாக வரையப்பட்டு வெளிவந்திருக்கின்றன ஸ்ரீராமாநுஜ பத்ராதிபரால். "ந சேத் ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ" என்று ப்ரஸித்தமான சுலோகம் இந்த ராமாநுஜன் பத்ரிகை விஷயத்திலும் பொருந்தும்" என்று மிக விரிவாக வெளியிட்டிருப் பதைக் கண்டு உலகமெல்லாம் களித்திருக்க இந்த ஜஞ்ஜகம் "ஸ்வஹஸ்தே நோத்க்ஷிப் தைஸ் ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர் ககனதலம் ஆலிம்பதி ஜட:" (யதிராஜஸப்ததி) என்கிற ஸ்வாமி ஸூக்திக்கிணங்க ஹ்ருத்தாபநாசினியிலுள்ள சேற்றை யெல்லாம் வாரி வழியவிட்டுக் கொள்ளட்டுமே.

இந்த ஜஞ்ஜகம் நேற்று மார்கழி மாதத்தில் விரலுக்குத்தகாத வீக்கமாக ஒரு கார்டு அச்சுபோட்டு சில பேர்களுக்கு அனுப்பிற்று. ப்ரஹ்மஸ்ரீ. உபந்யாஸகேஸரீ, உபந்யாஸ சக்ரவர்த்தி இத்யாத்யநேக பிருதாவளீபூஷிதராய் ப்ரவசனஸிம்ஹமாய் விளங்கும் கல்லிடைக்குரிச்சி ராமக்ருஷ்ண சாஸ்திரிகளவர்கள் மாட்டுமாட்டென்று மாட்டி வாய்ப் பூட்டு போட்டுவைத்தது உலகப்பிரசித்தம். "நீங்கள் பொதுமநுஷ்யராக இருக்கவேண்டி யிருக்க இப்படி ஒருதலையில் நிற்கலாமா" என்று கேட்டு பதில் கார்டு எழுதி "உபந்யாஸ கேஸரீ என்கிற உங்களுடைய பட்டச் சொல்லுக்கு எப்படி ஸமாஸம்?" என்று கேட்டு நல்ல சாட்டையடி பெற்றுக்கொண்டது ஜஞ்ஜகம். திருவல்லிக்கேணியில் வாழும் M. V. கிருஷ்ணய்யரியன் ஒரு பத்ரிகையச்சிட்டு "வித்வான் மதுராந்தகம் ரங்கநாதாசாரியர் முன்னிலையில் வந்து பேசு" என்று தெரிவித்தவாறே ஈகையப்பன் சரித்திரம் மூதலான சில ஏடுகளை திருவள்ளூரிலும் திருவல்லிக்கேணி மடங்களிலும் பரப்பிவிட்டு "வந்ருக: குத்ரேதி நஜ்ஞாயதே" என்று கிடந்ததீஹாம்ருகம்.

கீதாபாஷ்ய ஷோடசாத்யாய தாத்பர்ய சந்திரிகையில் சமதம விவரணத்தைப்பற்றி ஸ்வாமி ஸாதித்திருப்பதில் ப்ராசீனதாளகோசங்களைப் பரிசீலனை பண்ணவேணுமென்று பிரபல வித்வான்கள் பேசிக்கொண்டிருக்க இந்த ஸீஸம் ஐயோ என்ன எழுதுகிறது. என்ன தலைவிதி. கண்டனம் கண்டனமென்கிறவிந்த ஜடத்துக்கு அடுத்த ஜன்மம் மூஷிகாவதாரமே. காகிதச் சாலையினுள்ளே புரண்டுருண்டு எதையும் எளிதாகக் கண்டனம் பண்ணிவிடலாம். "விததமகவிதே: என்றார் தேசிகர்" என்று எழுதிவிட்டு (விததா மகவிதி: யஸ்மின் என்று ஸமாஸம்) என்றெழுதுகிறது இந்த ஸீஸம் எலி தானே வந்து போனுக்குள் மாட்டிக்கொள்வதன்றோவிது. விதி சப்தம் ஸ்த்ரீலிங்கமாயிருக்க முடியுமா? என்பதைக்கூட அறியமாட்டாத ஸீஸம் 'அங்கே ஓதினேன், இங்கே

12

உறங்கினேன், எங்கேயோ உதைபட்டேன்' என்றெழுதிக்கொண்டு போதைப் போக்க வேண்டியது தலைவிதியாயொழிந்தது...... அடியேன் திருமலைதாஸன்.

**நிகமனம்** :—ஈந்தனனீயாத வின்னருள் என்று நாமகரணம் செய்தபடி ஒருவர்க்கும் ஈயாத இன்னருளை இந்த யதாஜாதனுக்கு ஈந்ததுபோதும். இதில் மதுரை கனபாடி யொருவரும் திருவள்ளூர் வித்வானொருவரும் பங்கெடுத்துக்கொண்டது பரமவிசேஷம். அரியபெரிய சில விஷயங்கள் கேண்மின். பிராட்டி திருவடியிடம் வாயஸவ்ருத்தாந்தத்தை யருளிச்செய்யும்போது "மத்க்ருதே காகமாத்ரே து ப்ரஹ்மாஸ்த்ரம் ஸமுதீரிதம்" என்றாள். கோஷ்! என்றால் பறந்தோடக்கூடிய காக்கையின்மேல் பெருமாள் ப்ரஹ்மாஸ்த்ரம் விட்டது பிராட்டிபக்கல் அன்புமிகுதியால் என்று சொல்லவேண்டியதாகிறது. இந்த அவ்யபதேச்யன்மேல் இவ்வளவு ப்ரஹ்மாஸ்த்ரம் நாம்விட்டது தகுதியன்றுதான். நிகமாந்த மஹாகுரு ஸங்கல்பஸூர்யோதயத்தில் "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" என்னும் அற்புதமான சுலோகத்தில் மூன்று விஷயங்களை யெடுத்துரைத்து 'இக்ஷ்வாகுவம்சத்தவர்கள் எளிய காரியமும் செய்வர்கள் அரிய காரியமும் செய்வர்கள்' என்று தலைக்கட்டுகிறார். பெருமாள் பரத்வாஜாச்ரமத்தில் அமுது செய்தாரென்று ஒருவர் சொன்னால், 'சபரிகையாலே அமுது செய்தாரப்பா' என்கிறாராம் மற்றொருவர். விச்வாமித்ர முனிவர்க்கு விதேயராயிருந்தாரென்றால் 'வானரபதிக்கு விதேயராயிருந்தாரப்பா' என்கிறாராம் மற்றொருவர். பரசுராமருடைய தபஸ்ஸின்மேல் அஸ்த்ரம் விட்டாரென்று ஒருவர் சொன்னால் 'காக்கையின் கண்ணிலும் அஸ்த்ரம் விட்டாரப்பா' என்கிறாராம் மற்றொருவர். இப்படி துர்வாதிகளின் பெருமை சிறுமை பாராதே விஷயமொன்றிலேயே நோக்காக நம் ஸ்வாமி எழுதாத சாஸ்த்ரார்த்தங்கள் கிடையாது. இந்த அவ்யபதேச்ய அஸந்தர்ப்பக் குடுக்கை அபத்த ஜடிலமாக நாலேடு எழுதி 'உபந்யாஸ சதத்வய கண்டனம் முடிந்து விட்டது' என்று எழுதிவிட்டால் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளெல்லாம் கண்டிக்கப்பட்டு விட்டனவென்று முடிந்து விடுமல்லவா? ஒருவன் ஸ்ரீ பாஷ்யத்தைக் கண்டிப்பதாக ஆரம்பித்து "ஸ்ரீ பாஷ்யத்தில் முதலெழுத்து (அ). முடிவுவாக்கு (ஸமஞ்ஜஸம்). முதலையும் முடிவையும் சேர்த்தால் அஸமஞ்ஜஸ மென்றாயிற்று. உபக்ரமோபஸம்ஹாரா ப்யாம் சாஸ்த்ரார்த்த நிர்ணயமாகையாலே ஸ்ரீ பாஷ்யத்தின் உபக்ரமோபஸம்ஹாரங்களைக் கொண்டே அது அஸமஞ்ஜஸமென்று முடிந்துவிட்டது என்றெழுதினானும். அப்படியே இந்த யதாஜாதனும் இருநூறு உபந்யாஸங்களையும் கண்டித்துவிட்டேன் என்று ஒரே வார்த்தையில் முடித்திருக்கலாமே. தொலையட்டும்; இனி வாயைக் கைகயைத் திறவாதே யொழிந்திடுக. ... ... ...



ஸ்ரீ ராமாயண ஸுந்தரகாண்டத்தில் (9-13ல்) காணும்
ஈஹாம்ருகத்தின் சேஷ்டைகளுக்குத்
தக்க மருந்தாக ஈந்த
"ஈந்தனனீயாதவின்னருள்" வியாஸம்
முற்றுப்பெற்றது.
"பூயாத் ஸௌதர்சநோ வ: ப்ரதிபடபருஷ:
பூருஷ: பௌருஷாய."

# சித்ரகூடத்தில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்.

சித்ர கூடத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமது பயவே. அஷ்டகோத்ரம் C. S. பார்த்த ஸாரதி ஐயங்கார் ஸ்வாமியை அறியாதாரில்லை. காட்டுமன்னார் ஸன்னிதி ஸ்ரீமந் நாத முனிகள் ஆளவந்தார் தேவஸ்தான தர்மகர்த்தர்வான இந்த ஸ்வாமிக்கு நேற்று விசுவாவஸு ௵ பங்குனித் திங்களில் 7௳ 20—3—66. சதய நக்ஷத்திரத்தில் சித்ர கூடத்தில் தமது திருமாளிகையில் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக



சித்திரகூடத்தில் விலக்ஷணஸ்வாமிகளின் கோஷ்டி. 20-3-66

நடந்தேறியது. ஐந்துநாள் உபய வேதபாராயணங்களும் இதிஹாஸ புராண ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி படனங்களும் வித்வதுபந்யாஸங்களும் நடந்தன. அந்த ஸமய விசேஷத்துத் திருவுருவப்படம் இது. லௌகிக வைதிகங்களில் மஹா நிபுணரான இந்த ஸ்வாமிக்கு ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதும் பல்லாண்டு பாடக் கடமைப் பட்டிருக் கின்றது. இன்னும் ஒரு ஷஷ்டியப்தபர்யாயம் இந்நிலவுலகில் எழுந்தருளியிருந்து திவ்யதேசகைங்கரியங்கள் பலவற்றையும் வெகு சாதுரியமாக நிர்வஹித்தருள வேணு மென்று அடியேன் பெருந்தேவி மணவாளனை பேரருளாளன் திருவடிகளிலே ப்ரார்த்தித்து நிற்கிறேன். ... ... ...

(பத்ராதிபர்.)



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையின் ப்ரகடனம்.

நிகழும் ஸம்வத்ஸரத்தில் ப்ராப்தமாகின்ற இரண்டு திருமூல நன்னாளின் நினைவுமலராக ஸ்ரீமத்வரவர முநீந்த்ரக்ரந்தமாலை யென்னும் பெயரால் மணவாளமாமுனிகளின் ஸகல ஸ்ரீஸூக்திகளும் ஒரு ஸம்புடமாக அச்சிடப்பட்டு வருகின்றதென்பது ஏற்கெனவே பெரும்பாலும் ப்ரஸித்தமாகவுள்ளது. எம்பெருமானாருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள் ஒன்பது என்றும், மணவாள மாமுனிகள் அருளிச்செய்தவை அதற்கு இரட்டிப்பாகப் பதினெட்டென்றும் ப்ரஸித்தம்.

1. ஸ்ரீதேவராஜமங்களம்
2. யதிராஜவிம்சதி
3. காஞ்சிக்ஷேத்ரமுக்தகங்கள்
4. உபதேசரத்தினமாலை
5. திருவாய்மொழி நூற்றந்தாதி
6. ஆர்த்திப்பிரபந்தம்,
7. முமுக்ஷுப்படி வியாக்கியானம்
8. தத்வத்ரய வியாக்கியானம்
9. ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம்
10. ஆசார்யஹ்ருதய வியாக்கியானம்
11. ஞானஸாரப்ரமாண யோஜனை
12. ப்ரமேயஸாரப்ரமாண யோஜனை
13. ஈட்டுப்ரமாணத்திரட்டு
14. ஸ்வகீயரஹஸ்யவியாக்கியானப்ரமாணத்திரட்டு
15. நித்யம்
13. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம்
17. இராமாநுச நூற்றந்தாதியுரை
18. கீதாதாத்பர்ய தீபம்

இப்பதினெட்டுக்ரந்தங்களுள் கீதாதாத்பர்யதீபமொன்றுமட்டும் லுப்தம். மற்றவை அநுபவத்திலுள்ளன. இவற்றுள் 1 முதல் 12 லக்கம் வரையிலுள்ள க்ரந்தங்களை ஒரு ஸம்புடமாகவும், மற்றக்ரந்தங்களை மற்றொரு ஸம்புடமாகவும் பிரசுரம்செய்ய உத்தேசம். பிரமாணத்திரட்டுகளும் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானமும் நாளது ஐப்பசித் திருமூலத்திற்குள் அச்சிட்டு வெளியிடமுடியாதவை யாதலால் நித்ய க்ரந்த முட்படப் பதின்மூன்று திவ்ய க்ரந்தங்களை நாளது ஐப்பசித் திருமூலத்தில் ஒரு ஸம்புடமாக அச்சிட்டுப் பிரசுரம் செய்வதாக நிச்சயித்திருக்கிறது. இரண்டாவது ஸம்புடம் தை மாசியில் பிரசுரமாகும்.

இப்போது அச்சிடப்பட்டு வருகிற முதல் ஸம்புடம் அச்சு முடிவுபெறுவதற்கு ஏறக்குறைய பதினாயிரம் ரூபா செலவாகுமென்று உத்தேசிக்கப்படுகிறது. அச்சுக்கூலி, காகிதக்கிரயம் பயிண்டிங்சார்ஜ் சோதகபண்டித ஸன்மானம் ஆகிய நான்கும் இதில் அடக்கமாகும்.

முதல் ஸம்புடம் புத்தகம் ஒன்றுக்கு விலை 20ரூ. என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இப்பெரியகாரியம் இடையூறின்றி விரைவில் நிறைவேறுவதற்காகச் சில பல மஹான்கள் பெருந்தொகையாக உபகரிக்கவேணுமென்று பிரார்த்திக்கப் படுகிறார்கள். ஆனால் இனாமாகக் கொடுக்கவேணுமென்று விரும்பவில்லை. அவரவர்களின் கொடைக்குத் தக்கபடி ஐப்பசித் திருமூல நன்னாளினன்று ஸ்ரீ கோசங்கள் பகுத்துக் கொடுக்கப்படும். இந்த க்ரந்தமாலை எந்தவிதமாக அச்சிடப்படுகிறதென்பதை அவரவர்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டுச் சில காபிகள் சேர்த்து மாதிரிக்காபி யொன்று (Sample book) ஸித்தப் படுத்தியிருக்கிறது. அதைப்பார்க்க விருப்பமுள்ளவர்கள் அடியேனுக்கெழுதித் தருவித்துக்கொள்வது.

இங்ஙனம்,

P. B. அண்ணங்கராசாரியர்,

சின்ன காஞ்சீபுரம்.

25—7—66



# வில்லிபுத்தூரில் பிறந்து வளர்ந்து மறைந்த வித்வத்ரத்னம்.

ஸ்ரீவானமாமலை மடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. சின்னகலியன் ஸ்வாமி ஸிம்ஹாஸனஸ்தராயெழுந்தருளி யிருந்தகாலத்தில் ந்யாயவேதாந்த வித்வத்வரேண்யரான ஸ்ரீமத். அழகப்பங்கார் ஸ்வாமியென்பவர் ஆஸ்தானவித்வானாக எழுந்தருளியிருந்தார். பிறகு அவருடைய ஸ்தானத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர் சின்னநாரணையங்கார் ஸ்வாமியென்பவர் ஆஸ்தானவித்வானாக எழுந்தருளியிருந்தார். அழகப்பங்கார் ஸ்வாமியையும் அடியேன் நன்கு ஸேவித்திருந்தாலும் இந்த ஸ்வாமியோடு நெருங்கிய பழக்கமுடையவனாயிருந்தேன். சின்ன கலியன் ஸ்வாமி உத்தரதேச யாத்திரையில் பாட்னாவில் தீகாகாட்டில் எழுந்தருளியிருந்தபோது அடியேன் அங்கு யாத்திராமார்க்கமாய் விடைகொள்ள நேர்ந்ததைச் சில ஸந்தர்ப்பங்களில் தெரிவித்திருக்கிறேன். அப்போது அவ்விடத்தில் (இங்கே ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் சின்னநாரணையங்கார் ஸ்வாமியின் ஞானப் பெருமைகளை அதிகமாக அநுபவித்து ஆனந்திக்கப் பெற்றேன். நியாயவேதாந்தங்களில் நிகரற்ற வித்வான். ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களை வரியடையவே ஓதியோதுவித்தவர். வேதமும் ஓதியிருந்தார். இத்தனை யோக்யதைகளும் நிறம் பெறும்படி ஸௌசீல்ய நிதியாக இருந்தார். இவர் திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பது ஸம்வத்ஸரங்களாயின. இவருடைய திருப்பேரனார் ஸ்ரீ வில்லிபுத்தூரில் வாழ்ந்து வருகிறார். அடியேன் நெடுநாள் தேடியிருந்த இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தை யுபகரித்தவர் அவரே. ... ...



ஸ்ரீவில்லிபுத்தூர். வித்வத்ரத்னம். சின்னநாரணையங்கார் ஸ்வாமி (வைதண்டவாஸி.)








## திவ்யதேசப்ரவண—பரமபாகவதர்.

சோழநாட்டுத் திருப்பதிகளுள் தலைச்சங்கநாண்மதியமென்பது ஒரு திவ்யதேசம். திருமங்கையாழ்வாரொருவர் பாடியதலம். இருதுணுக்கைகளே பாடல். துணுக்கையானு லென்ன? பதிகமானுலென்ன? ஆழ்வாருடையமங்களாசாஸனம்பெற்றஸ்தலமென்பதொன்றே ஏற்றத்திற்குஹேது. அடியேன் இளமையில் ஒரு பர்யாயந் தான் இத்தலத்தைத் தேடிப்பிடித்து ஸேவிக்கப் பெற்றேன். மங்களாசாஸனபரர்கள் மிகவும் அருமையாமிடத்தில் எழுந்தருளியிருப்பதனுல் தகுந்த சேமக்காப்பின்றியே யெழுந்தருளியிருந்த காலத்தில் அடியேன் ஸேவிக்கப் பெற்றுப் பரிதாபங் கொண்டேன். அப்போதே தொடங்கி இத்தலத்திற்குச் சேமம் விளைய ஆரம்பித்ததாகக் கேட்டுக் களித்து வருகின்றேன். சில பாகவத மணிகள் முன்னின்று முயன்று திருப்பணிகள் நடத்தி வருவதாகக் கேள்விப் படுகிறேன். அவர்களில், இங்கே காட்சிதரும் பக்த மணியானவர் பரிகணிதராயிருக்கிருரென்பதை கைங்கர்ய ருசியுடையார்க்கு அறிமுகப்படுத்தி வைக்கிறபடி. ...



M. அய்யாஸாமிப்பிள்ளை பாகவதர், மிராசுதாரர், நடராஜப்பிள்ளைசாவடி.

## நூற்றெட்டுத் திருப்பதித்துதி.

நூற்றெட்டுத் திருப்பதியெம்பெருமான்களுக்கும் தனித்தினியே ஸ்துதிபத்யங்கள் நித்யாநுஸந்தேயமாக அமையவேண்டுமென்று சில ஆப்தர்கள் விரும்பினுர்கள். அன்னவர்களின் த்ருப்திக்காக இரண்டுவகையான ஸ்துதிநூல்களை விஜ்ஞாபித்து வைதிகமநோஹரா பத்ரிகையில் (நெ. 151ல்) வெளியிட்டிருக்கிறேன். திவ்யதேசங்களின் பெயர்களைமட்டுங் கொண்ட அநுஷ்டுப்பு சுலோகங்கள் 27 அமைந்தது முதல் ஸ்துதி. பலவிருத்தங்களில் நூற்றெட்டு சுலோகங்களாக அமைந்தது இரண்டாவது ஸ்துதி. அபேக்ஷகர்கள் எழுதித் தெரிவித்துக் கொள்ளலாம். ... ... ...



# ஹரிகீர்த்தனரத்ன பிருதப்ரதானம்.

தேவப்பெருமாளுடைய அபிமானபாத்ரபூதமான தென்னேரியகரத்திற்கு அணித்தான திருவண்காரணேயக்ரஹாரத்தில் முப்பது வருடங்களுக்குமுன்பு மிகச்சிறந்த வித்வானுக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. ராகவாசார்யஸ்வாமியின் பௌத்திரிக்கு 23-6-66ல் ஆனிமீ 9உ காஞ்சீபுரியில் ஸன்னிதி வீதியில் வெகுசிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. வரன் மதுரமங்கலம் ஸன்னிதி ட்ரஸ்டி உவே. ஸ்ரீநிவாஸய்யங்கார் குமாரன் சிரஞ்சீவி. ஸம்பத்குமாரன், B.A., B.T., அப்போது உபயவர்க்கத்திலும் வைதிக லௌகிக மஹநீயர்கள் விசேஷமாக விஜயம் செய்திருந்தார்கள். இங்கே காட்சிதரும் பாலபாரதீத்யாதி பல விருதுகள்பெற்ற ஸ்ரீமதி யதுகிரியம்மாவும் பந்துஹோதாவில் வந்திருந்தபடியால் அவ்வம்மையின் ஸங்கீத ஸாஹித்ய கலாவிநோதங்களையறிந்த பல பெரியார்கள் ஸீதா கல்யாண ஹரிகதா காலக்ஷேபமொன்று நடத்தவேணுமென்று கோரினுர்கள். தேவப்பெருமாளுடைய ஸன்னிதி வீதியிலேயே ஆரணி ஜாகீர்தார் மித்தைமேல் ஹாலில் இரவு 8 மணிக்கு நடக்க ஏற்பாடாகிவிட்டது. எனக்கும் அழைப்பு வந்தது. ஆனுல் இதுகாறும் நான் ஒரு ஹரிகதாகாலக்ஷேப ச்ரவணத்திலும் அந்வயித்ததில்லை. தலைகாலில்லாமல் எதையாவது சொல்லிப் போதைப்போக்கு வதுதான் ஹரிகதை என்று நான் கிரஹித்திருப்பது. அதனுல் நிர்ப்பந்தமான ஆஹ்வானம் வந்தாலும் ஹரிகதைக்கு நான் போவதில்லை ப்ரஸ்தாவித்த அம்மையின் ஒரு ஹரிகதையைச் சிலவாண்டுகட்குமுன்பு நான் சோளஸிம்ஹபுரத்தில் யாத்ருச்சிகமாகக் கேட்டுக்களிக்க ப்ராப்தமானபடியால் இங்கே நம்மூரிலே நம் வீதியிலே



ஸ்ரீமதி. யதுகிரியம்மா (பாலபாரதி.)

அசிந்திதமாக நேருமிந்த ஸந்தர்ப்பத்தை இழக்கக்கூடாதென்று குதூஹலத்துடன் பேயிருந்தேன். தகுந்த பக்கவாத்யங்களுடன் இரண்டுமணிகாலம் வெகு அற்புதமாக நடைபெற்றது. இடையிடையில் விச்ராந்திகொள்வதற்குப் பின்பாட்டுக்காரரை வைத்துக்

கொள்வதென்று ஒரு வழக்கமுண்டாம். அது இவ்விடத்தில் இல்லை. நடந்த இரண்டுமணி காலமும் பேரின்பவெள்ளமான பேச்சுக்களால் ஸபையோர் ரஞ்ஜிதர்களானார்கள்.

இத்தகைய காலக்ஷேபங்களுக்கு ஸங்கீதமும் ஸாஹித்யமும் மிக முக்கியமானவை. இந்த அம்மைக்கு ஸங்கீத ஸாமர்த்தியம் ஜன்மஸித்தமென்று பலர் சொல்லக் கேட்டேன். ஸாஹித்ய ஸாமர்த்தியம் வெகு நன்றாக அமைந்திருக்கின்றது. அப்ரமேயாசார்யரென்று ப்ரஸித்தராயிருந்த தன்னுடைய திருத்தகப்பனார் பிரபல ஸம்ஸ்க்ருத வித்வானென்றும், அவரிடத்திலே ஸம்ஸ்க்ருத காவ்ய நாடகாலங்காரங்களை வரியடைவே வாசித்து வித்வத்து ஸம்பாதித்துக்கொண்டதாகவும் தெரியவந்தது. ஸம்ஸ்க்ருதபாஷை ஒன்றுமட்டுமேயல்ல. மற்றும் பல பாஷைகளும் வாசோவிதேயங்களாயிருப்பது வியக்கத்தக்கதே.

அன்று பல ரஸிகர்கள் கதாகாலக்ஷேப ஸபைக்கு விஜயம்செய்திருந்தார்கள். தேவப் பெருமாள் ஸன்னிதி கைங்கரிய பரர்கள் பலரும் வந்திருந்தார்கள். அவர்களுள் ஸ்ரீஉவே. ஸ்ரீ பாஞ்சராத்ரம் வரதபட்டர் மிகவும் ரஸித்து உவந்தார். ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி தர்மகர்த்தா. ஸ்ரீஉவே. நல்லப்பா ஜீயப்பங்கார், சென்னை Advocate. R. V. சேஷாத்ரி ஐயங்கார் முதலான பரிகணிதர்கள் பலர் விஜயஞ்செய்திருந்து ச்ரவணானந்தமடைந் தார்கள். அடியேன் வெறுமனே யெழுந்துபோக மனமில்லாமையால் ஆனந்தபரீவாஹ மாகச் சில வார்த்தைகள் சொல்லி ஹரிகீர்த்தனரத்னம் என்று விருதுசூட்ட அனைவரும் கரகோஷத்தினால் ஆமோதித்தார்கள். இப்படிப்பட்ட பல விருதுகளை இவ்வம்மை பெற்றிருப்பதாக அங்கேயே பலர் ப்ரஸ்தாவித்தார்கள். மறுபடி மறுபடி கேட்கப் பெறவேணுமென்கிற ஆசம்ஸையோடுதான் அனைவரும் வெளியேறினர். ...

## ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியின் காச்மீரவிஜயம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியின் பதரிகாச்ரம விஜய யாத்திரையை முன்னிதழில் ப்ரஸ்தாவித்திருந்தோம். ஸ்வாமி அவ்விடத்தில் சில நாட்களே யெழுந்தருளியிருந்து காச்மீரமண்டலத்திற்கு விஜயம் செய்யவேணுமென்கிற குதூஹலத் தினால் இப்போது காச்மீரயாத்திரை செய்துகொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. அனேகமாய் இதுவரையில் அவ்விடம் சேர்ந்திருக்கலாம். அவ்விடத்திலும் ஸ்ரீராம க்ரதுஸ்தம்ப ப்ரதிஷ்டை நடக்குமென்று தெரிகிறது. இந்த ஸ்வாமியின் எந்த மனோரதமும் தடைபடுவதில்லையாதலால் எதுவும் வெற்றியுடன் நடைபெறும். ...

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தரக்ஷா

## இரண்டாவது பரிச்சேதம்

### கீழ் முதல் பரிச்சேதத்தில்—தென்னுசார்ய ஸித்தாந்தத்தின் உள்ளுறையை ஸாரமாகத் தெரிவித்து

1. பகவத் க்ருபையின் நிர்ஹேதுகத்வ நிரூபணம்.
2. ப்ரபத்தியின் அநுபாயத்வ விவரணம்-
3. சேதநலாபம் ஈச்வரனுக்கே பேறு என்கிற தத்துவம்.
4. பரகத ஸ்வீகார ப்ராசஸ்த்ய நிரூபணம்.
5. ப்ரபத்தியின் அபராத கோடி ப்ரவேச நிரூபணம்.
6. உபாயாந்தரங்களின் ஸ்வரூப விருத்தத்வ நிரூபணம்.
7. எம்பெருமானுடைய வ்யாப்தி தத்வம்.
8. லக்ஷ்மீ தத்வ நிஷ்கர்ஷ ஸாரம்.

என்னும் எட்டு விஷயங்களை விபுலமாகவும் விசதமாகவும் நிரூபித்து, முதல் பரிச்சேதத்தின் உபஸம்ஹாரம் என்ற தலைப்பின்கீழ் ஸ்ரீரங்க தேவஸ்தான வ்யவஹார ஸாரம் வெளியிட்டு (முதல் பரிச்சேதத்தை)த் தலைக்கட்டினேம். இனி இரண்டாவது பரிச்சேதம் தொடங்கப்படுகிறது. இதில் வாத்ஸல்ய குணவிசாரம் முதன்மையாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. இங்கே சில வார்த்தைகள் அவர்ஜநீயமாக விஜ்ஞாபிக்கப் படுகின்றன. தென்னுசார்ய ஸித்தாந்தப் பொருள்களில் தலையானபொருள் எது? என்று ஒருவர் கேட்டால் "வாத்ஸல்ய குணத்தின் பொருளையும் தயாகுணத்தின் பொருளையும் உள்ளபடி நிஷ்கர்ஷிப்பதொன்றே தென்னுசார்ய ஸம்ப்ரதாய ஸித்தாந்த ஸாரம்" என்று அடியேன் விடை கூறுவேன். நாம் நிர்க்குண ப்ரஹ்ம வாதிகளின் திரளில் பிறவாமல் எம்பெருமானுர் தரிசனத்திலே பிறவி பெறுந்தனை புண்ணியம் பெற்றது பகவத் குணுநுபவமொன்றுக்காகவே. எம்பெருமான் அவதாரங்கள் செய்தருளினதும் திருக்குணங்களைக் காட்டி அடியார்களை ஆனந்தக் கடலில் ஆழ்ந்து கிடக்கச் செய்யவேயாம். ஸ்ரீ ராமாயணத்தில் கயிறுபோட்டு எந்த இடமெடுத்தாலும் குணகணப்ரசம்ஸா ப்ரகரணமாகவேயிருக்கும். ஸ்ரீ ராமாயணத்தின் உபக்ரமமே குணப்ரச்னமாக அமைந்தது. அப்படிப்பட்ட குணங்களில் வாத்ஸல்யமும் தயையும் தலையானவை. தயையைக் காட்டிலும் வாத்ஸல்யம் மிகச் சிறந்தது, வாத்ஸல்யத்திற் காட்டிலும் தயை மிகச்சிறந்தது என்னத் தட்டில்லை.

எம்பெருமானுர் சரணுகதி கத்யத்தில் "ஸ்ரீவைகுண்டநாத!" என்றதற்குப் பிறகு "அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய.........மஹோததே" என்று இட்டுவைத்து மீண்டும் (மூன்ருவது விளியாக) *ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே!* என்கிருர். ஆழ்வார்

*அகலகில்லேன் பாசுரத்தில் *நிகரில் புகழாய்* என்ற விளியினால் இந்த வாத்ஸல்ய குணத்தை விவக்ஷித்தருளினர் என்பதறிந்தே அந்த மஹா குணத்தில் ஆதராதிசயம் காட்டியருளினர் எம்பெருமானர். அப்படிப்பட்ட மஹாகுணத்தைப் பிறர் உள்ளபடியுணராததோடு பழிக்கவும் புகுந்தால் இது ஸஹ்யமான துக்கமன்றே. எம்பெருமானையே இல்லைசெய்து விட்டால் இவ்வளவு துக்கமில்லையே. கிணற்றில் விழுந்துபோன குழந்தை யொன்று முடிந்தேபோயிற்றென்று அழுது தீர்ந்தவுடனே குழந்தை கிடைத்துவிட்டதென்றுசொல்லிவிட்டு 'ஆனால் அதற்கு முகமும் தலையும் போய்விட்டது' என்றால் பின்னையும் விக்கிவிக்கி யழவேண்டியது தவிர வேறில்லையே.

இந்த வாத்ஸல்யத்தையும் தயையையும்பற்றி அடியேன் வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகா என்றும் அபிநவதயாசதக மென்றும் இரண்டு வடமொழிநூல்கள் இயற்றி வியாக்கியானத்தோடும் வெளியிட்டிருக்கிறேன். இரண்டும் ச்லோகபத்தங்கள். ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் போலே இரண்டும் இரண்டு சதகங்கள் கொண்டவை. வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகை 212 சுலோகங்கள் கொண்டது. அபிநவதயா சதகம் 228 சுலோகங்கள் கொண்டது. தென்மொழியிலும் வடமொழியிலும் வியாக்கியானத்தோடு ஷூ 1952ல் தேவநாகரலிபியில் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன். விதுஷாம் அதிபோக்யம். நிற்க.

## 9. வாத்ஸல்ய குணவிசாரம்

## [வாத்ஸல்யமாவது—தோஷபோக்யத்வம்]

101. எம்பெருமானுடைய திருக்குணங்களை விவரித்தருளாநின்ற நம் பூருவாசாரியர்கள் "வாத்ஸல்யமாவது—தோஷங்களையும் போக்யமாகக் கொள்ளுகை" என்று காட்டியருளினர்கள். சரணாகதி கத்யத்திற்கு மிகவும் ஸம்க்ஷேபமாக பாஷ்யமிட்டருளின ச்ருத ப்ரகாசிகாபட்டர் "வாத்ஸல்யம் நாம தோஷேஷு குணத்வ புத்தி:" என்றருளிச் செய்தார். அவர் தாமே ஸ்ரீ பாஷ்யச்ருத ப்ரகாசிகையிலும் "ஸம்பந்த விசேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ:; யஸ்ய விபாகா அஸ்தாநபயசங்கித்வம் தோஷாநவபாஸ: தோஷேபி குணத்வ புத்திரித்யாதய:." என்றருளிச் செய்துள்ளார். இந்த வாக்யத்தில் *தோஷேபி குணத்வபுத்தி:* என்றது நோக்கத் தக்கது. "வாத்ஸல்யம் நாம தோஷேஷ்வபி குணத்வபுத்தி:" என்று ஸமந்வயாதிகரண ச்ருத ப்ரகாசிகையிலுமுள்ளது. எங்கும் ஒருமிடறான விவரணம்.

102. உலகில் ப்ரீதியின் நிலைமைகள் பலவிதமா யிருக்கும். அச்சம் சங்கிப்பதற்கு ஆஸ்பதமில்லாம லிருக்கச்செய்தேயும் என்ன ஆபத்து நேர்ந்துவிடுமோவென்று வயிறுபிடிக்கும்படியாகப் பண்ணிவிடுவது ஒருவகையான ப்ரீதிநிலைமை. ஒருவனிடத்தில் குற்றங்கள் பலபல நிரம்பியிருக்கச் செய்தேயும் அவை புலப்படாதபடியாவதும் ஒரு ப்ரீதி நிலைமை. அக்குற்றங்கள் புலப்படாதவளவேயன்றிக்கே அவற்றையே நற்றமாகக் கொள்ளும்படியாவதும் ஒரு ப்ரீதி நிலைமை. இவ்வர்த்தத்தையே மேலெடுத்துக் காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியானது விளங்கக் காட்டுகின்றது.

103. தோஷங்களையும் போக்யமாகக் கொள்ளுவதென்னும் வார்த்தையைப் பிறர் ஹேயமாக நினைத்து ஹேளனம் செய்வதுமுண்டு. உலகத்திலும் ப்ரத்யக்ஷமான அநுபவத்திலுள்ள படிகளை அறியாமையினாலது. தோஷங்களை அருவருக்க வேண்டி யிருக்க அவற்றை குணமாகக் கொண்டு போக்யமாகக் கொள்ளும் நிலைமை ப்ரேமத்தினுடைய மிகச் சிறந்த எல்லைநிலமான பருவமாகும். ஒருவனுக்கு ஒருவனிடத்தில் எல்லை கடந்த ப்ரீதி சென்றதென்றால் அவனது குற்றங்களை யெல்லாம் நற்றமாகக் கொள்வதற்கு மேற்பட வேறொன்றுமாகாது. இது லோகஸித்தமான விஷயம். "யதா ஸத்ய: ப்ரஸூதாயா தேநோர் வத்ஸே" என்று ஒரு த்ருஷ்டாந்தமும் காட்டி யருளுகிறார் ச்ருதப்ரகாசிகாசார்யர். "எற்றே! தன் கன்றினுடம்பின் வழுவன்றோ காதலிப்பது, அன்றதனை யீன்றுகந்த ஆ" என்பது ஞானஸாரத்தில் அருளாளப்பெருமாளெம்பெருமானார் அருளிச் செய்த பாசுரம். அன்றீன்ற கன்றின் பக்கல் தாய்ப் பசுவானது எவ்வகையான ப்ரேமம் கொண்டிருக்கின்றதென்பது அபரோக்ஷம். கன்றினுடம்பிலுள்ள வழுக்களையெல்லாம் பரம போக்யமாகக் கொண்டு நக்குகின்றது பசு. இப்படிப்பட்ட வொரு ப்ரேமவிசேஷமே வாத்ஸல்யம்.

104. இவ்விஷயத்தில் பிறருடைய சங்கை யென்னவென்றால், தோஷத்தில் தோஷத்வ மென்கிற தன்மை எப்போதும் தோன்றிக்கொண்டே யிருக்க, தோஷத்தைக் கண்டு குணமென்று க்ரஹிப்பது எம்பெருமானுடைய ஞான பூர்த்திக்குக் கொத்தையன்றோ என்பதாம். இந்தத் தெளிவிக்கின்றோம். ஸஹஸ்ர நாமத்தில் *அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு:* என்றுள்ளது ப்ரஸித்தமே. அவிஜ்ஞாதா என்பதற்கு அறியாதவன் என்று பொருள். ஸஹஸ்ராம்சு: என்பதற்கு ஸர்வதோமுகமான ஞானத்தை யுடையவன் என்று பொருள். இவ்விரண்டு திருநாமங்களும் ஒன்றோடொன்று சேராதவை. ஸஹஸ்ராம்சுவாக இருப்பவன் அவிஜ்ஞாதவாக இருக்க முடியாது. அவிஜ்ஞாதாவாக இருப்பவன் ஸஹஸ்ராம்சுவா யிருக்க முடியாது. ஆனாலும் இரண்டு திருநாமங்களும் சேர்ந்திருக்கின்றன. அவிஜ்ஞாதா என்பதற்கு 'அடியார்களின் தோஷங்களைக் காணாதவன்' என்று பொருள் கூறப்படுகின்றது. இப்பொருளில் ஸர்வஜ்ஞத்வம் பங்கமடைந்து தானே தீரும். இதற்குப் பிறர் செய்யும் பரிஹாரம் ஏதென்று பார்க்கவேணும். உண்மையில் எம்பெருமானுக்கு ஸர்வஜ்ஞத்வம் குறையற்றிருக்கவும் ப்ரேமவசத்தினால் அடியார்களின் குற்றங்களைக் காணாக் கண்ணிட்டிருப்பதென்பது பொருந்தும். அது வொரு ப்ரேமபருவம். குற்றங்களை நற்றமாகக் கொள்ளுவதென்பது அதற்கு மேற்பட்ட ப்ரேமபருவம். இதைத் தான் ச்ருதப்ரகாசிகாசார்யர் நன்கு காட்டியருளியுள்ளாரென்பது பாலிசர்களும் எளிதாக அறியக்கூடியது. (அந்த ஸ்ரீஸூக்திகள் லக்கம் 101ல் காணத்தக்கன.)

105. நம் தோஷங்கள் எம்பெருமானுக்கு போக்யமென்றால், போக்ய வஸ்துக்களை ஸமர்ப்பிக்க நாம் மேன்மேலும் ஆசைப்படுவதுபோல தோஷங்களையும் மேன்மேலும் நாம் செய்ய ஆசைப்படவேண்டி வந்துவிடாதோ வென்பது பிறருடைய முக்கியமான ஆக்ஷேபம். அவர்கள் கவனிக்க வேண்டும். எம்பெருமானை தோஷாதர்சி [அதாவது, தோஷங்களைக் காணாதவன்] என்று தெரிந்து கொண்டா

லும் தோஷங்களை க்ஷமிப்பவன் என்று தெரிந்து கொண்டாலுங்கூட கீழ்க்கூறிய ஆக்ஷேபம் இடம் பெற்றே நிற்குமன்றோ. நாம் என்ன குற்றம் செய்தாலும் எம்பெருமான் அதைப் பாரான் என்றும், பார்த்தாலும் பொறுத்துக்கொள்வன் என்றும் நாம் க்ரஹிக்கலாமென்று இசைகிறார்களன்றோ பூர்வபக்ஷிகள். இங்ஙனே இசையும்போது, நாம் குற்றங்களைக் கூசாமல் அஞ்சாமல் செய்யவேண்டிவாராதோ வென்று கேட்டால் விடையிறுக்க வழியுண்டோ?

"எம்பெருமான் எப்போதும் தண்டதரனாய் நிக்ரஹத்திலேயே ஊற்ற முற்றிருப்பனே யல்லது அவன் பொறுமைக்குண முடையவனல்லன்"

என்று க்ரஹித்தாலன்றி அவரவர்கள் பாபபீருக்களா யிருக்க முடியாது. க்ஷமிப்பவன் என்று அறிந்துவிட்டால் பாபஞ் செய்யத் தயங்கவேண்டியதில்லையன்றோ. ஆகவே எம்பெருமானை தோஷபோக்யனாகக் கொண்டால் எந்த ஆபத்துவருமென்று ஆக்ஷேபம் செய்யப்படுகின்றதோ அந்த ஆபத்து எம்பெருமானை தோஷாதர்சி யென்றும் க்ஷமாசீலனென்றும் கொள்ளுமவர்களின் பக்ஷத்திலும் அபரிஹார்ய மென்று அறியக்கடவது.

106. வஸ்துதঃ ஒரு ஆபத்துக்கும் இடமில்லாமலே உண்மை யுணர்த்துகிறோம். எம்பெருமானுக்குப் பலவகைப்பட்ட குணங்கள் உள்ளன. அவற்றுள் எந்தகுணம் எந்த ஸமயத்தில் எந்த வ்யக்தியின்மீது எந்தவிதமாக ப்ரஸரிக்குமென்று நிலையிட வல்லார் ஆருமில்லை. அப்பெருமானது க்ஷமாகுணத்திற்கோ வாத்ஸல்ய குணத்திற்கோ நாமே யிலக்கு என்கிற நிச்சய வுணர்ச்சி நமக்குத் திடமாக இருக்குமாகில் தோஷங்களை நாம்கூசாதுசெய்ய நேருமென்கிற தூஷணம் இடம்பெறும். *கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்றருளிச்செய்பவனாக எம்பெருமானை யறிந்துவைத்து ஆஸ்திகனொருவன் புத்திபூர்வகமாகக் குற்றஞ் செய்யத் துணியக் கூடுமோ? நெருப்பு தாஹகத்வ சக்தியுடையது என்று ஒருவன் சிந்தித்த மாத்திரத்திலே அவன் வீடு பற்றி யெரிந்ததாய் விடுமோ? சர்க்கரை மிகவும் தித்திக்குமென்று சொன்னவளவிலேயே நாக்கு தித்திக்குமோ? அதுபோல், வாத்ஸல்யமாவது தோஷபோக்யத்வமென்று குண ஸ்வரூபத்தைப் பேசுமளவால் நம் தோஷங்களெல்லாம் பகவானுக்கு போக்யமாய்விடுமென்றாவது, அவனுக்கு போக்யமான தோஷங்களை நாம் செய்துவிடலாமென்றாவது நினைக்க நேருமோ? ஒருகாலும் நேராது. அவன் திருவுள்ளம் எந்த வ்யக்தியினிடத்தில் எந்த க்ஷணத்தில் எவ்விதமாகப் பெருகுமோ, அதை யார் அறியவல்லார்? யாரும் அறியகில்லார். அப்பெருமான் தானும் முன்னம் அறியகில்லான். அளவு கடந்த அன்புக்கு இலக்கானாருடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளுமியல்வு அவனிடமுள்ளதென்றும், அதுதான் வாத்ஸல்யமென்றும் நிஷ்கர்ஷிப்பது அநவத்யம். நம் தகப்பனார் நம்மிடத்தில் பரம ப்ரீதி வாய்ந்தவர். நாம் தெரிந்தும் தெரியாமலும் குற்றங்களைச் செய்து போருகிறோம். அக்குற்றங்களுக்காகப் பிதா தண்டிக்கிறாரென்பது கிடக்க. சில வேளைகளில் குற்றங்களை மன்னித்ததாகச் சொல்லுகிறார். சில வேளைகளில் குற்றங்களைக் காணாதது போலவே போய்விடுகிறார். சில வேளைகளில் அக்குற்றங்

களையும் நற்றமாகக்கொண்டு அணைத்து உச்சிமோந்து உகக்கிறார். அதனால் நாம் அச்சங்கெட்டு புத்தி பூர்வமாகக் குற்றஞ் செய்யத் துணிவதில்லை. அதுபோலவே இங்குக் கொள்க. இவ்விஷயத்தில் இவ்வளவெழுதுவதே போதுமானது. ஆயினும் இன்னமுஞ் சிறிது பன்னியுரைக்க விரும்புகிறோம் இது மிக முக்கியமான விஷய மானது பற்றி. எவ்வளவெழுதினாலும் குணத்வேஷிகளினுள்ளம் கனியாது.

107. எண்ணில் பல் குணங்கட்குக் கொள்கலமான எம்பெருமானிடத்தில் வாத்ஸல்யமென்கிற விது மிகச் சிறந்த குணம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *நிகரில்புகழ்* என்கிற சொல்லால் இக்குணத்தைக் குறிப்பிடுகிறாரென்று நம் ஆசாரியர்கள் வியாக்கியானஞ் செய்தருளுகிறார்கள். அங்ஙனம் நிகரற்றதாக ப்ரஸித்தமான இக்குணத்தை ஸாமாந்ய குணமாக்கிவிடப் பார்க்கிறார்கள் பிறர். தோஷங்களைப் பாராமையே வாத்ஸல்யமென்கிற அவர்கள் ரஸமயமான பொருளை அறியப் பெறாததோடு ஸித்தாந்தப் பொருளைப் பழிக்கவும் இழிக்கவும் தலைப்பட்டார் கள். "தென்னாசார்யர்கள் கேசவனை தோஷ போக்யனாகக் கூறி நிந்திக்கிறார்கள்" என்றும், "நாம் குற்றஞ் செய்தால் எம்பெருமான் தண்டிப்பனேயென்று அஞ்ச வேண்டியிருக்க அவனை தோஷ போக்யனாகக் கூறி, அவனுக்கு க்ஷீராந்நம் ஸமர்ப் பிக்கும் ஸ்தானத்தில் தோஷங்களையே மிகமிகச் செய்து அவனை உகப்பிக்கப் பார்க்கிற தென்னாசார்யர்களுக்குப் பாபஞ் செய்வதிலேயே முழுநோக்கு" என்றும் இங்ஙனே பலவாறு பேசியு மேசியும் போருகின்றார் பிறர்.

108. ஸித்தாந்திகளுங்கூட 'இதுவொரு சிறிய விஷயந்தானே; நிர்வாஹ பேதம் போலும்; இது எப்படியிருந்தாலென்ன?' என்று இதில் உபேக்ஷையா யிருப்பார் சிலருளர். வஸ்துதஸ்து, வாத்ஸல்யம், தயை என்கிற இரண்டு குணங் களில் பிறர்செய்யும் வாதவிவாதங்களை நிரஸித்து உண்மைப்பொருளை ஸ்தாபிப்ப தொன்றே முக்கியமான ஸித்தாந்த ஸ்தாபக கைங்கர்யமாகும் என்பதே அடியேனது துணிபு. இதில் இவ்வளவு ஊற்றம் ஏதனாலென்னில்; கேண்மின். நிர்க்குண ப்ரஹ்மவாதிகளான குத்ருஷ்டிகளைக் கண்டித்து எம்பெருமானை அநந்த கல்யாண குணகணமஹோததியாக ஸ்தாபிப்பதே எம்பெருமானார் தர்சனத்தின் மிகச்சீரிய நோக்கு. ஆனதுபற்றியே ஆழ்வாரும் திருவாய்மொழி தொடங்கும்போதே * உயர்வறவுயர் நலமுடையவன் * என்றார். "நிர்க்குண ப்ரஹ்மவாதிகளின் மிடற் றைப் பிடித்தாற்போலே இப்படி அருளிச் செய்வதே" என்று கூரத்தாழ்வான் முதலானோர் உள்குழைந்துருகினார்கள். பகவத்குணங்கள் உயர்வறவுயர்ந்திருக்கை யாவது என்ன எனின்; அதை *அநவதிகாதிசய* என்கிற வடசொல்லால் ஆசார்ய ஸார்வபௌமர்கள் விவரித்தருளினார்கள். அதாவது நம்போன்ற மநுஷ்யர்களிற் காணுங்குணம் ஒரு அளவில் நிற்பதென்றும், எம்பெருமானிடத்தில் அங்ஙனன் றிக்கே ஒவ்வொரு குணமும் எவ்வளவு ஓங்கியிருக்கவேண்டுமோ அவ்வளவும் ஓங்கி யிருப்பதென்றும் சொன்னபடி.

109. வாத்ஸல்ய குணமும் தயாகுணமும் நம்போன்றவர்களிடத்திலுள்ள அளவுகூட எம்பெருமானிடத்தில் இல்லையென்று வாதிக்கின்றவர்கள், அப்பெரு

மானைக் கல்யாண குணக்கடலாக இசைந்து பயனென்கொல்? ஸாமான்யமாக மநுஷ்யகுணங்களை முன்னம் எடுத்துக்கொண்டு பேசுவோம். உபநிஷத்தும் * ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி. ஸ ஏகோ மாநுஷ ஆநந்த: * என்று மநுஷ்யா நந்தத்தை முதலிட்டுக்கொண்டே க்ரமேணபரப்ரஹ்மாநந்தத்திற்குச் சென்றதாதலால் நாமும் மநுஷ்ய குணத்தை முதலிட்டுக்கொண்டு பகவத் குணத்திற்குச் செல்வோம். மநுஷ்ய குணத்தில் எது உயர்ந்தது என்று பார்த்தால், 1. குற்றங்களையும் நற்ற மாகக் கொள்வதும், 2. பிறர் துயருறக்கண்டு தானும் துயருறுவதுமே உயர்ந்த குணமாக லோகாநுபவத்திலுள்ளது. நூல்களிலுமெழுதப்பட்டுள்ளது. இவ்விரண்டு குணங்களும் எம்பெருமான் பக்கலில் பொருந்தமாட்டாவென்று பிரபலமாக வாதிக்க எழுமவர்கள் அந்தோ! எம்பெருமானை குணசாலியென இசைந்தார்களாக வழி யில்லையே. * யதி பாஸ்கர யாதவ ப்ரகாசௌ நிகமாந்த ஸ்திதி நிர்ணயப்ரவீணௌ, அபரை: கிமிவாபராத்தமார்யை: அபதாபாஷண சாதுரீதுரீணை:* (2.92) என்று ஸங்கல்ப ஸூர்யோ தயத்தில் ஸ்வாமி ஸாதித்த ச்லோகமொன்றே அடியேனுக்கு அடிக்கடி நினைவுக்கு வாராநின்றது.

110. யஸ்ய விபாகா:.......தோஷேபி குணத்வபுத்திரித்யாதய:* என்று கீழே யெடுத்துக்காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸ்ரீ ஸூக்தி விளங்கும்போது ப்ரீதி பரீவாஹ ரூபமான தோஷ போக்யதாபுத்தி குணமன்றென்று சொல்லப்போகாது. குண மென்று தேறின விது மநுஷ்யர்களிடத்திற் காட்டில் எம்பெருமானிடத்தில் சத குணாதிகமாக விளங்குகின்றதென்று இசைந்து தீரவேண்டுமே.

111. உலகத்தில் குணமென்று பேர் பெற்றவற்றுள் ஒன்று தப்பாமல் எம்பெருமானிடத்து இருந்தேயாகவேண்டுதலால் இது எம்பெருமானுக்கு ஸம்ப வியாதென்று வாதிக்குமவர்கள்திறத்தில் * ஜந்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணி கேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோவிசேஷ?* என்கிற ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தியே அநுஸந்தேயமாக வடுக்கும்.

112. தோஷமென்பது இரண்டுவகை. செய்கைகளில் காணும் தவறுகள் ஒருவகையான தோஷம். *மாம்ஸாஸ்ருக்பூய விண்மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்த்தி ஸங்குலமான அழுக்குடம்பில் *தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்பும் செறி தசையும் வேண்டா நாற்றம்* என்னப்பட்டவை மற்றொருவகையான தோஷம். கடோபநிஷத்தில் [2-1-12] * அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே * என்றுள்ள ருக்கானது சரீர தோஷங்களும் எம்பெருமானுக்கு போக்யமாகின்றன வென்பதைக் காட்டிநின்றது. இவ்விடத் திற்கு பாஷ்யமுரையாநின்ற ரங்கராமாநுஜஸ்வாமி "பூதபவ்யேச்வரத்வாதேவ வாத் ஸல்யாதிசயாத் தேஹசுதாநபி தோஷாந் போக்யதயா பச்யதி இத்யர்த்த:" என்றுரைத்தார்.

113. வேதாந்தவாசிரியர் வரதராஜபஞ்சாசத்திலே *ஔதந்வதே மஹதி ஸத் மநி பாஸமாநே ச்லாக்யே ச திவ்யஸதநே தமஸ: பரஸ்மிந், அந்த: கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச! கதம் ஆதரணாஸ்பதம் தே?* [புரமபதம் முதலிய சிறந்த ஸ்தானங்களை யெல்லாம் இகழ்ந்திட்டுப் பரம ஹேய

மான பாவியேனுடலை போக்யமாகக்கொண்டு வர்த்திக்கிறாயே]என்றார். இப்படிப்பட்ட தோஷ போக்யத்வமே வாத்ஸல்ய மென்று இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் பெரியார் வரைந்தார். இந்த தோஷ போக்யத்வத்தை *மங்கவொட்டுன் மாமாயை* என்கிற பாட்டிலே ஆழ்வாரும் விளங்க வுரைத் தருளினர். மிகமிக அருவருக்கத்தக்கதான தேஹ தோஷங்களை போக்கியமாகிற தென்று உபநிஷதாதி ஸித்தமாம்போது, செய்கைத் தவறுகளான தோஷங்கள் ப்ரீதியின் கனத்தால் போக்யமாகின்றன வென்னும் விஷயத்தில் விப்ரதிபத்தி ஸர்வாத்மனா அப்ரஸக்தம்.

114. ஸஹஸ்ரநாமத்தில் வத்ஸலநாமத்திற்கு பாஷ்ய மருளிச் செய்யாநின்ற பட்டர் பகவத்குண தர்ப்பணத்திலே "ஸ ஹி சிரம் பரிசியமாநேஷ்வபி சரணகதேஷு கஸ்யாபி ஹேதோ: ஸத்ய: ப்ரஸூதேஷ்விவ வத்ஸேஷு ஸஹுங்காரா: ஸபயஸ் ஸம்ஸ்னவ ஸ்தன வேதநா: கிம்கர்த்தவ்யதாகுலா தேநவ இவ ஸம்ப்ராம்யதி," என்றருளிச் செய்தார். அறிவுடையார் இப்படியெல்லாம் அநுபவித்துப் பேசும் பகவத் குணத்திற்குக் கண்ணழிவு சொல்லுமதிற் காட்டிலும் நிர்க்குண ப்ரஹ்மவாதமே நன்று. தோஷாதர்சித்வம் என்கிற அதுவும் ப்ரீதியின் ஒரு பருவமாதலால் அதனை இல்லைசெய்வாரில்லை. அதுவும் ஒருபுடை; அதற்கு மேற்பட்டதான தோஷ போக்யதா ரூபமான ப்ரீதியை இல்லைசெய்யலாகாதென்பதே தத்துவம். ... .... ... 9

தோஷபோக்யத்வரூப வாத்ஸல்யகுண நிரூபணம் முற்றிற்று.

## 10. பரதுஃக்கதுஃக்கித்வரூப தயாகுண நிரூபணம்

115. எம்பெருமானை தயாளுவென்று போற்றுகிறோம். தயையாவது என்ன? என்னில், பிறர் படும் துயரத்தைக்கண்டு தானும் துயருறுவது தயை—என்று தென்னாசார்யர்களின் திருவுள்ளம். ஆநந்தமயனான எம்பெருமானுக்கும் துயருண்டென்று கொள்வது அவத்யமாகையாலே பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைப்பது மாத்திரமே தயை என்னத்தகும் என்பர் பிறர். எம்பெருமானிடத்தில் பரது:க்க நிராகரணேச்சை [அதாவது பிறர்படும் துயரத்தைத் தவிர்க்க நினைக்கை] இல்லையென்று யாரும் சொல்லகில்லார். அதுவுள்ளதென்பது ஸம்ப்ரதிபந்நம். அது வொரு ஸாமாந்ய குணமே யல்லது விசேஷ குணமன்று. பிறர்படும் துயரத்தைக் கண்டு ஐயோவென்று தானும் துயருறுகையே தயையென்றும் இதுவே மிகச்சிறந்த விசேஷகுணமென்றும், இதனை இல்லைசெய்வது நிர்க்குணப்ரஹ்மவாதத் தோடொக்கு மென்றும் ஆழ்வார்களும் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களும் திருவுள்ளம் பற்றுகிறார்கள். நன்கு நிலை நாட்டியுள்ளார்கள்.

116. கீழ்ச்செய்த வாத்ஸல்யவிசாரம்போலே இந்த தயாவிசாரமும் மிக முக்கியமானது. பரது:க்கது:க்கித்வ மென்பது மிகவுயர்ந்த குணமென்றும் இதுவே எம்பெருமானுடைய குணங்களிலேயுருகும் மெய்யன்பர்களின் உள்குழைவுக்கு உறுப்பானதென்றும் உண்மையைத் தெளியவுணரவேணும். பிறர்படும் துயரத்தைக் கண்டு ஐயோ வென்றிரங்குகை குணமா? தோஷமா? என்று முதலில் ஆராயவேண்டும். இதை தோஷமென்று யாரும் சொல்லார், * நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார்

கரைந்தேங்க * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை நோக்குங்கால், பரதுக்கங்களிலே முறுவலிப்பது ஹேயமென்றும், கரைந்து ஏங்குவது உற்றதென்றும் நன்கு தெரியவரும். கரைந்து ஏங்குமவர்களையே நல்லுற்றாரென்கிறது. துக்கத்தின் எல்லையிலே நிற்பதுதான் கரைந்து ஏங்குவது. இதை நல்லுற்றாருடைய செயலாக அருளிச்செய்கின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம் இது குணமென்பதேயன்றோ. இது குணமன்று என்றுசொல்வதற்கு ஒரு விதமான உபபத்தியும் இருக்க நியாயமில்லை. மநுஷ்யர்களுக்கு இது குணந்தானென்று தேறிவிடுமானால் இக்குணம் எம்பெருமானிடத்தில் அதிசயிதமாக இருந்து தீரவேணுமென்பது புநருக்தம்.

117. ஒருவரிடத்தில் ஒரு குணமுள்ளதென்பதை நாம் எங்ஙனம் தெரிந்து கொள்ளுகிறோம்? குணவானுடைய நடத்தையைக் கண்டும், அந்த நடத்தையைக் கண்ட ஆப்தர்கள் சொல்லுமது கொண்டும் தெரிந்துகொள்ளுகிறோம். எம்பெருமான் தனது தயாகுணத்தை எந்தெந்த நடத்தைகளினால் காட்டினானோ அந்த நடத்தைகளெல்லாம் ஸ்ரீராமாயண பாரத பாகவதாதிகளில் விசதம். எம்பெருமான் அவதாரங்கள் செய்தருளினது எதற்காக வென்றால் தன்னிடத்திலுள்ள சிறந்த திருக்குணங்களை வெளியிடுதற்காகவே யென்பது பரமார்த்தம். இதைத்தான் பட்டர் * குண பரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற ஸ்ரீ ஸூக்தியால் நன்கு காட்டியருளினார். "ராவண ஸம்ஹாரம் கம்ஸவதம் சிசுபாலவதம் முதலிய பலவகைக் காரியங்களுக்காகவாயிற்று எம்பெருமான் இந்நிலவுலகத்தில் அவதரித்தது" என்று ஸாமானியர்கள் நினைக்கும்படி யிருந்தாலும் உண்மையதுவன்று. ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸகலத்தையும் நிர்வஹிக்கக்கூடிய சக்திவாய்ந்த எம்பெருமான் புழுக்கள்போன்ற அரக்கர்களுடையவும் அசுரர்களுடையவும் ஸம்ஹாரார்த்தமாக அவதரித்தானென்கை அப்பெருமானுக்குப் பழிப்பாகவும் தலைக் கட்டும். தனது திருக்குணங்களைக் காட்டுவதற்காக அவதரித்தானென்பதே பரமார்த்தம். இதைத்தான் ஆழ்வார் திருவாய்மொழியில் * மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க் களித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்ற பாசுரத்தினால் விளங்கக் காட்டியருளினார். இதன் திவ்யார்த்தந்தன்னையே கூரத்தாழ்வான் "யா கம்ஸமுக்யந்ருபகீடநிபர்ஹணோத்தா ஸா நிர்ஜிதத்ரிஜகதஸ் தவ நைவகீர்த்தி:" என்பது முதலான பல சுலோகங்களினால் விவரித்தருளினார். இவ்வளவையும் கபளீகரித்தது *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்தி.

118. இங்ஙனே எம்பெருமான் அவதரித்து எந்த குணங்களைக் காட்டியருளினானென்று விமர்சிக்க வேண்டுவது அவசியம். இதனை நாம் இன்று புதிதாக விமர்சிக்க வேண்டாதபடி பண்டே ஸாக்ஷாத்தாக அநுபவித்த அயோத்யா வாஸிகள் அக்குணங்களை விரிவாக வெளியிட்டுள்ளார்கள். அயோத்யா காண்டத்தில் *பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே* என்று பீடிகை யிட்டுக் கொண்டு எண்ணில் பல் குணங்களை அழகாக எடுத்துரைத்திருக்கக் காணா நின்றோம். அந்த ப்ரகரணத்தில் தான் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்றுள்ளது. இதனால் பரதுக்க துக்கித்வமே நன்கு தெரிவிக்கப்படுகின்றது. இது குணவர்ணந ப்ரகரணத்தில் கூறப்பட்டிருப்பது கொண்டே இதனைக் கல்யாண

குண விசேஷமென்று கொள்ளக் குறையென்? என்று நம் பூருவாசாரியர்கள் பணித்தார்கள். "இது குணப்ரகரணமோ தோஷப்ரகரணமோ?" என்று கேட்பராம் பட்டர்.

119. இவ்விஷயத்தை நன்கு ஆராய்ந்தே நிஷ்கர்ஷிப்போம். எம்பெருமான் அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநன் என்று வேதாந்தங்களிற் புகழப்படுகிறான். அவனிடத்தில் விரும்பத்தக்க சுபகுணங்கள் குடிகொண்டிருக்கின்றனவேயன்றி வெறுக்கத் தக்க ஹேயகுணம் ஏதுமில்லையென்று தாற்பரியம். சோகமென்பது ஹேயகுணமேயன்றிக் கல்யாண குணமன்றே. ராம க்ருஷ்ணாதிவிபவாவதாரங்களில் சோகங் கொண்டிருந்ததாக விளங்குகின்றதே; ஹேயகுணமான சோகத்தைக்கொண்ட எம்பெருமானை அகில ஹேயப்ரத்யநீகனென்று எங்ஙனே போற்றலாம்? என்கிற ஆராய்ச்சியில் சில பெரியார் எழுதியுள்ள ஸமாதானமாவது-அவதாரங்களிற் காணும் சோக மோஹாதிகள் வெறும் அபிநயமாத்திரமே யாதலால் ஆபத்தி யொன்றுமில்லையென்றும். அவதாரங்களிற் காணும் எல்லாவகையான சோகங்களும் அபிநய ரூபங்களேயா? அவற்றில் ஏதேனும் பாகுபாடு உண்டா? என்று'விமர்சிக்க வேணும். உலகில் சோகம் இரண்டு வகையாகக் காண்கிறது; 1, ஸ்வார்த்த சோகம். 2. பரார்த்த சோகம். தன்காலில் அடிபட்டு அதனால் ஒருவன் துடிக்கிறான். பிறர் துக்கப்படுவதைக்கண்டு ஒருவன் துடிக்கிறான். ஆக இவ்விருவரும் பொதுவாக சோகப்படுகிறவர்களே யானாலும், முதல்வனுடைய சோகம் ஸ்வார்த்தசோக மென்றும், இரண்டாமவனுடைய சோகம் பரார்த்தசோகமென்றும் வழங்கப்படுகின்றது. இவ்விருவகையான சோகமும் விபவாவதாரங்களில் பகவானிடத்துக் காண்கின்றது. பொதுவிலே எல்லாவிதசோகமும் அபிநயரூபமென்றே சிலர் நினைக்கிறார்கள். இது ஸமஞ்ஜஸமன்று. மிகமிகத் தவறானது.

120. ஸ்ரீ ராமாயணத்தில் ஒரு பிரகரணம் எடுத்துக்கொள்வோம். வாலிமாண்ட பின்பு பெருமாள் திருவுள்ள முடைகுலைப்பட்ட படியைப் பேசுகின்ற வான்மீகி முனிவர் *ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்கிறார். இப்படிப்பட்ட பிரமாணங்கள் மற்றும் பலவுமுள்ளனவேனும், இஃதொன்றை விமர்சிப்போம். முன்னம் 'ஸம்ஜாதபாஷ்ப:' என்று வாலிக்காகப் பெருமாள் கண்ணீர் விட்டழுதார் என்றான் ரிஷி. அது மேலுக்கு அழுதபடியோ? அன்றி உள்ளிலும் வெதுப்புண்டோ? என்ன, 'விமநா பபூவ' என்று உடனே சொல்லிவைத்தான். மனமும் விகாரமடைந்துவிட்டதென்று நன்கு காட்டப்பட்டதாயிற்று. இது ஸ்வார்த்தமான சோகமன்று, பரார்த்தமான சோகம் என்பது நிர்விவாதம். இத்தகைய சோகமுங்கூட அபிநய ரூபமேயென்று கொள்வதானால் சாஸ்த்ரார்த்தங்கள் மிகவும் வியாகுலப் பட்டுவிடும். ஏனென்றால், எம்பெருமானுக்கு ஸ்துதி ரூபமாகப் பல விசேஷணங்களையும் ஸம்போதனங்களையும் எம்பெருமானார் முதலான மஹாசார்யர்கள் இடுகிறார்கள். அவற்றை வியாக்கியானிக்கும்போது ஸ்ரீமத் வேதாந்தவாசிரியருட்பட *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்றிது முதலான பிரமாணங்களை

மேற்கோளாக எடுத்துக் காட்டியே ஒவ்வொரு திருக்குணங்களையும் மூதலிக்கக் காணு கின்றோம். அபிநய ரூபமான விஷயத்தை யெடுத்துக்காட்டி ஒரு சாஸ்த்ரார்த்தம் நிர்ணயிக்கலாகுமோ? அவதாரமே பொய் என்கிற அத்வைதி மதந்தான் நிலைக்கும்.

121. நாளைக்கும் நாடகக்காட்சிகளில் வேஷங்கட்டி யாடுகின்ற பலருடைய துக்காபி நயங்களை நாம் கண்டு வருகின்றோம். அதைக்கொண்டு அந்த சைலூஷனை நாம் காருணிகனென்றாவது தயாளுவென்றாவது சொல்வதுமில்லை நினைப்பதுமில்லை. நன்றாக அபிநயிக்கிறானென்று தலைதுலுக்கிக் கொண்டாடுகிறோமித்தனை. ராம க்ருஷ்ணாத்யவதாரங்களில் இப்படி அபிநயிக்கிற சோகங்களைக் குறித்தா *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* என்று அயோத்யா வாஸிகள் கொண்டாடினார்கள்? *ஸஞ்ஜாத பாஷ்ப:* இத்யாதியாகச் சொன்னதும் மேலுக்கு அபிநயித்தபடியைக் கொண்டா? எம்பெருமானுடைய குணங்களைக் கொண்டாடுவதற்கு உறுப்பாயிருக்கின்ற விஷயங்களை அபிநயரூபமென்று சொல்லிவிடுவதானால் நமக்கு அநுபவ சாஸ்திரம் என்ன இருக்கிறதென்று ஆராயவேணும். ராமக்ருஷ்ணாத்யவதார திருக்குணங்களிலே நீர்ப்பண்டமாயுருகி நையும் ஆழ்வாராசாரியர்களின் கோஷ்டியில் அபிநயமென்கிற வார்த்தை தலைகாட்டப்பெறாது.

122. ஸஹஸ்ரநாமத்தில் *ஸத்யமேதா:* என்பது ஒரு திருநாமம். ஸத்யமான மேதையை யுடையவன் என்று பொருள். *“வல்லவவஸுதேவாதிஸாஜாத்யாபிமாநிநீ மேதா ஸத்யா அஸ்ய; ந நடநமாத்ரம்.” என்று பட்டர் பாஷ்யமிட்டருளியுள்ளார். இங்கே ‘ந நடநமாத்ரம்’ என்றதற்கு நடனமும் உண்டு என்று சிலர்பொருள் கூறுவது ஆச்சரியம். *“ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராமஸௌ குருகுலக்லிஷ்ட:”* என்னும் படியுள்ளார் இப்படி பொருள் பணிக்கத்துணியார். அங்கு பாஷ்யத்தில் மேலே நிரூபித்திருப்பதற்குச் சிறிதும் ஏலாது, சப்தஸ்வாரஸ்யத்திற்கும் பொருந்தாதது. சாஸ்த்ரார்த்தமுமன்று. மூலத்துக்கும் சேராது. நடநமாத்ரமென்று சொல்லுமவர்களை வாய்மாளப்பண்ணுதற்காக ‘ந நடநமாத்ரம்’ என்ற சொல்வடிவம் அமைந்தது.

123. அன்றியும் இது பட்டருடைய ஸ்ரீ ஸூக்தி யென்பதும் விசேஷித்து நெஞ்சிற் கொள்ளத்தக்கது. ஆவதென்? என்னில்; *மின்னிடை மடவார்கள் என்கிற திருவாய் மொழியில் ஆறும்பாட்டில் *கழகமேறேல் நம்பீ* என்றவிடத்து பட்டருடைய ஈரச் சொற்கள் ஈட்டில் ஸேவிக்கப்படுகின்றன. (எங்ஙனே யென்னில்) “இவ்விடத்தே பட்டர் அருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு:—ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வ நியந்தாவா யிருக்கிற ஸர்வேச்வரன் நாலிடைப் பெண்களிருந்த விடத்தே புக்கல்லது நிற்கமாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் நீ இங்குப் புகுராதே கொள் என்ன, விலங்கிட்டாப் போலே பேரவும் திரியவும் மாட்டாதே தடுமாறி நின்றானென் கிற ஸௌசீல்யம் தங்களையும் இவர்களையுமொழிய ஆரறிந்து கொண்டாட வ்யாஸாதிகள் எழுதியிட்டு வைத்துப் போனார்களோ! என்றருளிச் செய்வர்.”

(இதற்கு மேல் நம்பிள்ளையின் ஸ்வீய ஸ்ரீ ஸூக்தி.) “ஸர்வ நியந்தாவானவன் சிலர்க்கு நியமிக்கலாம்படி எளியனானான் என்றால் இது மெய்யென்று கைக்கொள்ளுவாரைக் கிடையாதிறே. சாஸ்த்ரங்களெல்லாம் ஈசேசிதவ்ய விபாகம் பண்ணி ஒருங்க விடா நிற்க, அத்தலை யித்தலையாகச் செல்லுகிறதிறே இது” என்று.)

124. பகவத் குணங்களில் அதிசங்கை கொள்வார் அநாதிகாலமாகவே உளர் என்பதும், பட்டர் போல்வாரான சிலரே பகவத் குணங்களில் ஆழ்ந்து நையுமவர்கள் என்பதும் இவற்றால் நன்கு அறியக்கிடக்கின்றதன்றோ. ஆகவே ஸத்யமேதா: என்கிற திருநாமத்திற்கு அஸத்ய மேதா: என்ற கருத்துப்பட பாஷ்யமிட்டார் பட்டர்: என்பது செவியேற்கவும் தக்கதன்றே.

125. இன்னமும், ஸ்வார்த்தசோகம் பரார்த்த சோகம் என்று வகையிட்டு, பரார்த்த சோகம் குணமே யல்லது தோஷமன்று என்றும், அது எம்பெருமானுக்குச் சிறந்த பெருங்குண மென்றும் ஸ்பஷ்டமாக அருளிச் செய்தவர் பட்டரே யாவர். ஸஹஸ்ர நாமத்தில் விகர்த்தா என்னும் திருநாமத்தின் பாஷ்யம் காண்க. "விகர்த்தா ஸ்வார்த்த ஹர்ஷ சோகாத்யபாவேபி பரார்த்ததத்ப்ரஸக்தி: அதோஷ:; அந்யதா பரதுக்கது:க்கித் வாதயோ குண: கதம் அஸ்ய ஸ்யு?:" என்பது பட்டர் ஸ்ரீ ஸூக்தி. விகர்த்தா என்கிற திருநாமத்திற்கு மனோவிகாரமடைகிறவர் என்றே பொருளருளிச் செய்து, எம்பெருமானுக்கு ஸ்வார்த்தமான ஹர்ஷ சோகம் முதலானவை உண்மையில் இல்லையாயினும் பரார்த்தமான ஹர்ஷ சோகங்கள் உண்டாமது அவத்யமன்று; அப்படி ஒப்புக்கொள்ளாவிடில், எம்பெருமானுக்குப் பரது:க்கது:க்கித்வம் முதலானவை சொல்லப்படுகின்றனவே அவை எப்படி குணமாக ஆகும்? என்கிறாரிறே இங்குபட்டர்.

126. இதனால் ஸ்வார்த்த ஹர்ஷ சோகங்களிற் காட்டிலும் பரார்த்த ஹர்ஷ சோகங்களுக்கு நெடு வாசியுள்ளதாக பட்டர் திருவுள்ளம்பற்றி யிருக்கின்றமை நன்கு விளங்குகின்றதன்றோ? "பரார்த்ததத்ப்ரஸக்தி:அதோஷ:" என்கிற ஸ்ரீ ஸூக்தி இங்கு அமைந்திருக்குமாற்றை நன்கு ஆராய்ந்து பார்க்கு மளவில் 'எம்பெருமானுக்கும் விகாரமுண்டென்று சொன்னால் நிர்விகாரத்வ [அகிலஹேயப்ரத்யநீகத்வ] ச்ருதிக்கு தோஷம் வருமென்று சிலர் ஆபத்தி பண்ணினதாகவும் அந்த ஆபத்திக்கு இடமில்லையென்று ஸ்வாமி (பட்டர்) பரிஹாரம் ஸாதிப்பதாகவும ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. பரது:க்க து:க்கித்வ மென்பது எம்பெருமானுக்குச் சிறந்த குணமென்றும் அடுத்த வாக்கியத்தினால் நன்கு விளக்கியுள்ளார். பொய்யான துக்கத்தைக் கொண்டு இவ்வளவு பாஷ்யமிட்டருளினரென்றால் இது பொருந்துமோ? "யானையும் பொய், நான் அஞ்சியோடினதும் பொய்" என்று ஓர் அத்வைதி சொன்னரென்று கதை சொல்லுகிற கணக்கிலே இதிஹாஸ புராணங்களெல்லாமுமே பொய்யாய் முடியும்.

127. மாரீசன் மாயமான்வேடம் பூண்டானென்று எல்லாருமறிவோம். அந்த மாயமானைக் கொன்று அதன் தோலை [க்ருஷ்ணாஜினத்தை]ப் பெருமாள் ஆஸனமாக அமைத்துக்கொண்டாரென்று நிகமாந்தகுரு ரகுவீரகத்யத்தில் அருளிச் செய்கிறார் "மாரீசமாயாம்ருக சர்ம பரிகர்மித நிர்ப்பர தர்ப்பாஸ்தரண" என்று. இதை சததூஷணியிலும் ஸ்தாபித்திருக்கிறார். கிருஷ்ணாவதாரத்தில் கம்ஸனாலேவப்பட்ட ஓர் அஸுரன் கொக்கின் உருவங்கொண்டு பகாஸுரனென வந்து மாண்டுபோன கதையை அருளிச்செய்யுமிடத்து யாதவாப்யுதயத்தில் "ஸபக்ஷ கைலாஸநிபஸ்ய தஸ்ய பகஸ்ய பக்ஷாந் அபிதோ பபந்து:" என்று அந்த மாயப் புள்ளின் மிகப்பெரிய இறகுகளை அங்கு எங்கும் கட்டி வைத்திட்டதாக அருளிச்செய்துள்ளார். பொய்

யென்று நாம் நினைக்கக்கூடியதுங்கூட மெய்யாயிருக்கும்போது மெய்யானதை யெல்லாம் பொய்யாக்கி விடுவது நம்முடைய தர்சனத்திற்குச் சேருமோ?

128. *இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச் சொல்லே* என்றும் *எத்திற முரலினேடிணைந்திருந்தேங்கிய வெளிவே* என்றும் ஆழ்வார்கள் நினைந்து நைந்துள்கரைந்து உருகியநுபவிக்கும் திருக்குணங் களுக்கு மூலமான சேஷ்டிதங்கள் [வெண்ணெய் களவுகண்டு உண்டது, ஓர் அபலைக் குப் பிடிபட்டு நின்றது, ஆப்புண்டு அழுதேங்கி நின்றது முதலியவை] மெய்யானவை யல்லவென்றும் அபிநய ரூபங்களேயென்றும் ஸித்தாந்தம் செய்துவிட்டால் அப்படிப் பட்ட சேஷ்டிதங்களடியான குணத்திற்கு அன்பர் உருகவேண்டிய ப்ரஸக்தி ஏது? நாடகங்களில் ஒருவனைக் கட்டிப் போடுவதையும் மற்றொருவனை யடிப்பதையும் இன் னொருவன் துடிப்பதையும் காண்கின்றவர்கள் 'இது என்ன குணம்!' என்று பேசியுருகுவதுண்டோ? பகவத்ராமாநுஜதர்சனஸ்தர்களுக்கா இதை நாமெடுத்துக் காட்டுவது?

129. பல சொல்லி என்? எம்பெருமானை குணக்கடல் என்று கொள்வது மெய்யா யிருந்தால் அந்த குணவிசேஷங்களை உபபாதிக்கக் கூடியவை விபவாவதார சேஷ்டி தங்களே யாகையாலே அந்த சேஷ்டிதங்களையும் மெய்யென்று கொண்டாலல்லது புகலில்லை. அவதார சேஷ்டிதங்களைப் பொய்யென்பவர்கள் அவதாரங்களையும் பொய் யென்று ஸ்தாபித்தவர்களாகத் தேறுவர்கள். பகவத் கீதையில் (4-5) *பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி* என்ற ச்லோகத்தின் பாஷ்யத்தில் "அநேந ஜந்மநஸ் ஸத்யத்வ முக்தம்" என்பது ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தி. "அவதாரத்தையும் அவதார சேஷ்டி தங்களையும் உள்ளபடி யுணருமவன் ப்ராக்ருத தேஹத்தை விட்டு என்னையேவந்து அடைகிறான்" என்று கீதாசார்யன் தானே சோதிவாய் திறந்து வெளியிட்டுள்ளான். "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:" என்று. அவதார சேஷ்டிதங்களை தத்த்வத: அறிவதாவது அஸத்யமென்று அறிவதுதான்—என்றே பிறர் பேசக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்தோ! இதனில் மிக்கோரயர்வுண்டே? கண்ணபிரான் *கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு கிடந்தமையைச் சிந்தனை செய்தால் நம்முடைய கட்டு [கரும பந்தம்] அவிழ்ந்து தொலையு மென்றும், அவன் பேய்ச்சி முலையுண்டா னென்பதை யநுஸந்தித்தால் மீண்டு மொருநாளும் நாம் முலையுண்ண நேராதென்றும் யாதவாப்யுதயத்திலே ஸ்வாமியருளிச் செய்கிறாரே; *பத்தம் ததா பாவயதாம் முகுந்தம் அயத்நவிச்சேதிநி கர்மபந்தே, தபஸ்விநீ தத்க்ரது நீதி ராத்யா ஸ்வரீளமாரண்ய கதாஸ்ய தஸ்ஜௌ.* என்கிற சுலோகமும், *ஸ்தந்யேந க்ருஷ்ணஸ் ஸஹ பூதநாயா: ப்ராணாந் பபௌ ஹுப்தபுநர்ப்பவாயா:, யதத்புதம் பாவயதாம் ஜநாநாம் ஸ்தநந்தயத்வம் ந புநர் பபூவ.* என்கிற சுலோகமும் முறையே அநு ஸந்திக்கத்தக்கன. பொய்யான கதைகளையும் குணங்களையுமநுஸந்தித்துப் பெறும் பேறு மெய்யாக இருக்க முடியுமோ? அதுதானும் பொய்தானே?

130. *இமாம் அஸிதகேசாந்தாம்........துக்கிதாம் த்ருஷ்ட்வா மமாபி வ்யதிதம் மந:* என்று அசோகவனத்தில் பிராட்டியின் க்லேசங்களைக் கண்ட திருவடி உள்குழைந்து வருந்திப்பேசுகிறார். பெருமாளுடைய துக்கம் போலவே பிராட்டியின் துக்கமும்

அபிநயந்தானே. அபிநயந்தானென்பதை நாம் இப்போது தெரிந்து கொண்டிருப்பது போலத் திருவடியும் அப்போதே தெரிந்து கொண்டிருப்பரே. நம்மை விட மிக அதிகமாகவும் அவர் தெரிந்துகொண்டிருப்பரே. அப்படிப்பட்டவர் *மமாபி வ்யதிதம் மந:* என்று ஏன் சொல்லுகிறார். பொய்யான துக்கத்தைப்பார்த்து மெய்யாக வருந்துவரா? திருவடி வருந்தினதும் வருந்தினதாகச் சொன்னதுமெல்லாம் பொய்தானென்னவேண்டும். இப்படி பொய்யான நூல்களா நமக்கு நித்ய பாராயணம்.

131. பரது:க்கது:க்கித்வமென்பது பரதுக்க நிராகரணத்தில் அசக்தர்களான நம் போன்ற மனிசர் திறத்திலே குணமானாலும் பரமசக்தனான ஸர்வேச்வரனிடத்திலே இது குணமாக மாட்டாதென்றும், பரதுக்கம் கண்டபோதே அதைத் தவிர்க்க சக்தனான ஸர்வேச்வரனுக்கு துக்கமுண்டாக ப்ரஸக்தியேயில்லை யென்றும் பிறர் கூறுவர். இதுவும் பொருந்தாது. எவ்வளவு சக்தனாயிருந்தாலும் பிறர் இனி அநுபவிக்க விருக்கிற துக்கத்தைத் தவிர்க்க முடியுமே யல்லது அநுபவித்தான துக்கத்தைத் தவிர்க்க முடியாதே. "ஐயோ! இப்படி இவன் துக்கப்பட நேர்ந்துவிட்டதே!' என்று உண்டாகக் கூடிய துக்கம் ஸர்வசக்தனுக்கும் அவர்ஜநீயமே யன்றோ. மடுவின் கரையிலே முதலைதன்னாலடர்ப்புண்ட ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினானேலும் அவன்தான் பட்டதுக்கம் வாக்குக்கு விஷயமன்றே. ஆழ்வான் பட்டர் போல்வார் தாங்கள் அப்போது உடனிருந்து கண்டது போலவே அருளிச்செய்துள்ளார்கள். *ஸ்ரக்பூஷாம்பரம் அயதாயதம் ததாநோ திங்மா மீதி அநுகஜகர்ஜமாஜகந்த* என்கிறார் பட்டர். மாம் திக்! மாம் திக்!! கெட்டேன் கெட்டேன்! என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய வோடி வந்தானென்கிறார். ஐயோ! பரமபக்தனை இப்படியொரு நீர்ப்புழுவின் வாயிலே யகப்பட்டுத் துடிக்கவிட்டேனே பாவியேன்! என்று எம்பெருமான் தான் கதறி யழுகின்றமை யன்றோ மாம் திக் என்கிறவிதில் விளங்குவது. யானையினிடரைத் தீர்க்க வல்லவனே யெம்பெருமான்; உடனே அவ்விடரைத் தீர்க்கவும் தீர்க்கிறான். அதிலொரு குறையில்லை. ஆனாலும், இடர் நேர்ந்து விட்டதேயென்று இடர் படாதிருக்க முடியுமோ எம்பெருமானாலே? மரங்களுமிரங்கும்போது பரமசேதநன் இரங்காதிருக்க வொண்ணுமோ? ஸஹஸ்ரநாமத்தில் *அக்ரூர: பேசலோ தக்ஷ:* என்றவிடத்து தக்ஷநாமபாஷ்யத்திலும் பட்டர் இதை விளக்கியுள்ளார் காண்மின்.

132. ஆழ்வானும் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் *விச்வம் திமயைவ விரசய்ய* என்கிற ச்லோகத்திலே *ஆஜக்முஷஸ் தவ கஜோத்தமப்ரும்ஹிதேந பாதம் பராமம்ர்சுஷோபி க்கா மநீஷா* என்கிறார். மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து சேர்ந்த எம்பெருமான் தான் சாத்தியருளின திருப்பரிவட்டத் தலைப்பைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்தூதிச் சூடாக்கி யானையின் புண்வாயை வெதுகொண்டு திருக்கையாலே குளிரத் தடவிக்கொடுத்ததாக இதற்கு நம்பிள்ளை அர்த்தஞ் செய்தருளுகிறார். அந்த ஸமயத்திலே எம்பெருமானது திருவுள்ளத்திலிருந்த கொதிப்பு வாய்கொண்டு பேசவொண்ணுமோ?

133. இன்னமும் கேண்மின். துச்சாஸநன்கையிலே பாஞ்சாலி பரிபவப்பட்டுக் கூவினபோது கண்ணபிரான் ஒருவாறு அவள் துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும் 'ஐயோ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாதொழிந்தேனே!' என்றும், 'ஐயோ! அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் அதைப் போக்கினேனேயன்றி முதல்தன்னிலே பரிபவத்திற்கு ப்ரஸக்தியே நேராதபடி ஜாகரூகனுயிராமற் போனேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய்விட்டேனே! என் பிறப்பு என்னுயிற்று!' என்றும் 'என் பிழைப்பு என்னுயிற்று! ' என்றும் தன் சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு கதறினது ஒரு மஹாபாரத மன்றோ? இவ்விஷயத்தில் நம்பிள்ளையீட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—

"த்ரௌபதி 'சரணம்' என்ற உக்தியித்தனையும் திருவுள்ளத்திலே கிடந்து ஸதஸ்ஸிலவன் பரிபவித்த பரிபவத்தையும் பரிஹரித்து துர்யோதநாதிகளையும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்னும் *கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி.* என்று குறைவாளனாய், பரமபதத்துக் கெழுந்தருளுகிறபோதும் * நாதிஸ்வஸ்தமநா யயௌ * என்னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று." என்று.

134. இப்படி எம்பெருமான் நெஞ்சாறல்பட்ட ப்ரகரணங்கள் பல கோடி நூறாயிரமுண்டு. எம்பெருமான் அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனுகையாலே அவனுக்கு மெய்யே துக்கமுண்டாக ப்ரஸக்தியில்லை யென்றும் துக்கப்படுபவன்போல அபிநயிக்குமளவேயென்றும் இதையே ஒவ்வொன்றுக்கும் ஸமாதானமாகப் பிறர் கூறுவர். அதுகிடக்க. *அவிகாராய சுத்தாய* என்கிற ஸாமான்ய வசனமொன்றையே பற்றி நின்று விசேஷ குணங்களை இல்லை செய்யலாகாதென்றும், ஆச்ரித ஸம்ச்லேஷ விச்லேஷங்களிலே எம்பெருமானுக்கு விகாரமுண்டாவதில்லை யென்று சொல்லுகையானது எம்பெருமானை ம்ருத்பிண்ட ப்ராயனுக இசைந்தமைக்குப் பரியாயமாகும் என்றும் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறுர்கள்.

135. *ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமானே ஸ்வகர்மபி:, ஜீவே துக்காகுலே விஷ்ணோ: க்ருபா காபி உபஜாயதே* என்கிற ப்ரமாணம் ஸுப்ரஸித்தம். து:க்காகுலர்களான ஜீவர்கள் பக்கலிலே ஈச்வரனுக்கு க்ருபையுண்டாகிறதென்றால் ஐயோவென்று இரக்கமுண்டாகிறதென்றே அர்த்தம். இதை நிகமாந்தகுரு ஸ்பஷ்டமாகக் காட்டுகிறுர். மேலே காட்டிய வசனத்தை அவர் தயாசதகத்தில் ஸ்வஸூக்தியாக மாற்றும்போது *அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா * என்கிறுர். இதில் நிர்வேத சப்தம் உற்று நோக்கத் தக்கது. நிர்வேதந்தான் தயாசரீரமென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டதன்றோ. இந்த நிர்வேதம் விபவாவதார விஷயமன்றுகையாலே அபிநயவாதம் இங்கு ஸுதராம் அப்ரஸக்தம்,

136. ஆநந்தமயனாக வோதப்பட்ட எம்பெருமானுக்கும் து:க்கமுண்டென்று எப்படியிசைய முடியும்? என்றே பிறர் வாதிப்பர்கள். பரச்சத ப்ரமாணங்களினால் நிரங்குச ஸ்வதந்த்ரனென்று தேறியிருக்கிற எம்பெருமானை ஆச்ரித பரதந்த்ரனென்று எங்ஙனம் இசைகின்றீர்களென்று கேட்கவேணும். அதையும் நாங்கள் இசைகின்றிலோம் என்றே அவர்கள் விடை யளித்துத் தீரவேண்டும். இதைப்பற்றி விரோத பரிஹாரமென்கிற ரஹஸ்யத்தில் ஸ்வாமி நிகமாந்த மஹாகுரு வெகு ரமணீயமாக அருளிச்செய்கிறார்:—

"ஸ்வதந்த்ரனான ராஜா அநுகூலரான மந்த்ரிகளுக்காதல் வல்லபையான மஹிஷிக்காதல் பாலரான புத்ராதிகளுக் காதல் தன் இச்சையாலே சொல்லிற்றுச் செய்யுங் கட்டளையிலே ஈச்வரனும் ஸர்வ சக்தியாய் நிரபேக்ஷனாயிருந்து வைத்து அழைத்த விடங்களில் வந்து, அபேக்ஷித்தவற்றைச் செய்யவும் இடைச்சிகளுள்ளிட்டார் கட்டவு மடிக்கவு மிசைந்தும் இப்படி நடக்கிற கட்டளையெல்லாம்... தன் ஸ்வாதந்த்ர்ய காஷ்டை யானபடியாலே இந்த பாரதந்த்ர்யம் விருத்தமன்று"

என்கிற ஸ்ரீ ஸூக்திகளைக் கண்டு தெளிவது.

137. பரதுஃக்க துஃக்கித்வம் எம்பெருமானுக்குள்ளதாக ப்ரஹ்ம ஸூத்ரகாரரான வ்யாஸர் ஒரு ஸூத்ரத்திலும் சொல்லவில்லையே யென்கிற வாதமும் பேசலம். எம்பெருமான் அவதாரம் செய்தருளுகிறானென்கிற விஷய ப்ரஸ்தாவமே ப்ரஹ்ம ஸூத்ரத்தில் இல்லையே. லக்ஷ்மீபதித்வமும் அதிலில்லையே.

138. ஆக, எம்பெருமானுடைய திருக்குணங்களில் தயையே சிறந்ததென்றும், அது பரதுக்க துக்கித்வ ரூபமே யன்றி வேறு வகைத்தன்று என்றும் நிரூபித்ததாயிற்று. இங்கு உபஸம்ஹார விஜ்ஞாபனம் கேளீர். வைகுண்டவாஸியான ஸ்ரீமத். ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி (திருச்சி) பகவத்குண ரஸிகர்களில் சிறந்தவராயிருந்து வைத்தும் இந்த தயாவாத்ஸல்ய குண விசாரத்தில் சில ஸுஹ்ருத்த்யர்களின் நிர்ப்பந்தத்திற்கு ஆட்பட்டு நம்மோடு க்ரந்த ரூபமான வாதப்போர் நடத்தினர்; வாத்ஸல்ய விஷயத்தில் " ஸம்பந்த விசேஷாங்விதேஷு ப்ரீதிஃ ஸ்நேஹஃ; யஸ்ய விபாகாஃ அஸ்தாநபயசங்கித்வம், தோஷாநவபாஸஃ தோஷேபி குணத்வ புத்திரித்யாதயஃ" என்கிற ச்ருதப்ரகாசிகா ஸூக்தியையும், தயாவிஷயத்தில் "அந்யதா பரதுக்க துக்கித்வாதயோ குணாஃ கதம் அஸ்ய ஸ்யுஃ!" என்கிற ஸஹஸ்ரநாம பாஷ்ய ஸ்ரீ ஸூக்தியையும் நாமெடுத்துக்காட்டி அலசியலசி யெழுதியான பின்பு அஞ்ஜலி பந்தத்துடன் ஓய்ந்து நின்றார். இது க்ரந்தாரூடமேயாதலால் இன்று நாம் கல்பித்தெழுதுவதாக விப்ரதிபத்தி பண்ணுவதற்கிடமில்லை. "தேசிக ஸூக்தி ஜயத்வஜமாலா" ப்ரலயேபி ந லீயதே. .... ... .... *

பரது:க்கது:க்கித்வ ரூபதயாகுண நிரூபணம் முற்றிற்று.

# 11. ஜாதியின் விநாச நிரூபணம்

139. *ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ராயே ஹ்யபக்தா ஜநார்தநே. *ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:* என்பது முதலான பல ப்ரமாணங்கள் வர்ணச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தத்தையே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லியுள்ளன. *பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்.* என்கிற பகவத் வசனத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் * இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னேடு மொக்க வழிபட வருளினய் * என்கிற பாசுரத்தாலே நிரூபித்தருளினர். இங்ஙனேயுள்ள பல்லாயிரம் பிரமாணங்களினல் உத்க்ருஷ்ட ஜன்மம் இன்னதென்றும் நிக்ருஷ்ட ஜன்மம் இன்னதென்றும் நிஷ்கர்ஷிக்கப் பட்டிருக்குமதை ஸ்ரீவசன பூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலான திவ்ய க்ரந்தங்களில் நம் ஆசாரியர்கள் பரக்க அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வருணங்களில் அவதரித்திருப்பதனல் அவர்கள் பக்கலில் ஜாதிப்ரயுக்தமான நிகர்ஷம் பாராட்டலாகாது என்பதற்காகவே இவ்விஷயம் ரஹஸ்ய நூல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. போலியான பக்தியை அபிநயித்து பாகவதனென்றும் பக்தனென்றும் பேர் சுமக்கின்றவர்களைப் பற்றி இந்த உத்க்ருஷ்ட ஜன்ம ப்ரபாவ விஷயம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். *கிமப்யத்ராபி ஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம்சிந்த்யம் குலாதிகம்.* என்கிற பிரமாணத்திற்கு இலக்கான மஹநீயர்களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்ம நிரூபணம் ரஹஸ்ய க்ரந்தங்களில் அமைந்தது. ஆனல் வேஷதாரிகளான இக்காலத்தவர்கள் அந்த நிரூபணங்களைத் தங்கள் விஷயமாக ப்ரமித்து அஹங்கரித்து அழிகைக்கு உடலாகையாலே, பூருவர்களின் க்ரந்தங்களில் இந்த நிரூபணங்கள் இல்லாதிருக்கலாமேயென்று சில மஹான்கள் நினைக்கவும் நேர்கின்றது.

140. அஸங்குசித ஹ்ருதயர்களான ஆசாரியர்களோவென்னில் சாஸ்த்ரார்த்தங்களை உள்ளது உள்ளபடி நிரூபித்தருளக்கடமைப்பட்டவர்களாதலால்,ஹிதசிந்தையோடே இந்த நிரூபணங்களைப் பண்ணிப் போந்தார்கள். அது இக்காலத்தவர்கள் நசித்துப்போகைக்கு உடலானல் "தத்ரைவ கேபி சபலாச் சலபீபவந்தி" என்ற கணக்கிலே நேர்கின்ற இந்த ஆபத்துக்கு அவ்வாசாரியர்கள் காரணபூதர்களாக விரகில்லை. அப்பெரியார்கள் நிரூபித்தருளியுள்ள விஷயத்தின் ஸாரம் இவ்வளவே காண்மின்:—

உலகத்தில் அவரவர்கள் நமக்குப் பெருமை யுண்டென்று நினைப்பதற்குப் பல ஹேதுக்களுள்ளன. உயர்ந்த ஜாதியிலே பிறந்திருக்கின்றேமென்று சிலர் பெருமை கருதுவர். உயர்ந்த ஆச்ரமத்தில் இருக்கின்றேமென்று [ஸந்யாஸாச்ரமம் பூண்டு யதியாயிருக்கின்றேமென்று] சிலர் பெருமை பாராட்டுவர். தர்க்க வியாகரண மீமாம்ஸைகள் முதலான சாஸ்த்ரங்களில் விசேஷபாண்டித்யம் படைத்திருக்கிறேமென்று சிலர் பெருமை கொள்வர். வேதவிதிகளைத் தவறாது ஸ்நாந ஸந்த்யாவந்

தனம் முதலான நித்யநைமித்திக ஆசாரங்களில் வழுவாதிருக்கின்றோமென்று சிலர் தம்மைப் பெரியோராக நினைத்திருப்பர்கள். இப்படி அவரவர்கள் தாங்கள் நினைத்திருப்பதே யன்றி இக்காரணங்கள் பற்றி அவர்களைப் பெருமைவாய்ந்தவராக இதரர்கள் பலரும் நினைத்திருப்பது முண்டு; சொல்லுவதுமுண்டு.

141. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அறிதற்குத் தகுதியாக த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்களே இங்ஙனம் நினைத்திருப்பர்களென்றும், அப்படிப்பட்ட ஞானமுள்ளவர்கள் கீழ்ச் சொன்ன காரணங்களினால் மாத்திரம் ஒரு பெருமை கருதார்கள், பகவத் ஸம்பந்தமொன்றைக் கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பர்களென்றும் நம் ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளார்கள்.

142. இவ்விஷயங்களுக்கு அடைவே பிரமாணங்கள் காட்டப்படுகின்றன; "சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி, வேதபார பராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மணகர்த்தப:"–நான்கு வேதங்களையும் அதிகரித்துவைத்தே வேதமுழுப் பொருளாகிய எம்பெருமானை அறியப்பெறுதவன் குங்குமஞ்சுமந்த கழுதைபோலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமணக் கழுதையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே வெறும் பிராமண ஜாதிப் பிறப்பைக் கொண்டே பெருமை பாராட்டலாகாதென்பது விளங்கிற்று.

* ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:,
விஷ்ணு பக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:*

சண்டாள யோனியிற் பிறந்தானுயினும் விஷ்ணு பக்தியுடையவனுயிருந்தால் அவன் கேவலப்ராஹ்மணனிற் காட்டிலும் சிறந்தவன்; உத்தமாச்ரமியானுலும் எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் தண்ணியன் என்று இதனுல் சொல்லிற்று. ஆகவே வெறும் ஸந்யாஸாச்ரமத்தைக் கொண்டே பெருமை கருதலாகாதென்று விளங்கிற்று.

* தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே,
ஆயாஸாய அபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்.*

மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனுல் சொல்லிற்று. ஆகவே வெறும் தர்க்க பாண்டித்யத்தைக் கொண்டே பெருமை பாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

* ஆம்நாயாப்யஸநாநி அரண்யருதிதம், வேதவ்ரதாநி அந்வஹம்
மேதச் சேதபலாநி பூர்த்தவிதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி,
தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நாநம், விநா யத்பதத்வந்த்
வாம்போருஹஸம்ஸ்ம்ருதீ:, விஜயதே தேவஸ் ஸ நாராயண:*

எம்பெருமானுடைய சிந்தனை யில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டானம் சாம்பலிலிட்ட ஆஹுதிபோல ப்ரயோஜனமற்றதென்று இந்த முகுந்தமாலை

2—3

ச்லோகத்தினுல் விரிவாகத் தெரிவிக்கப்படுகின்றது. ஆகவே வெறும் வைதிக கருமானுட்டானங்களைக் கொண்டே பெருமை கருதலாகாதென்பது விளங்கிற்று.

143. ஆக, ஜாதியினுல் ஏற்றமும், ஆச்ரமத்தினுல் உயர்வும், கல்வியினுல் சிறப்பும், ஒழுக்கத்தினுல் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ் செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது தெளிவாயிற்று. இவ்வர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமும் பரக்கப் பேசியுள்ளன. இவ்வர்த்த விஷயமான விவாதம் ஸம்பிரதாயத்தில் ஒரு பெரிய விஷயமாக வுள்ளது. சாஸ்த்ரார்த்த தத்வமிருக்கும் படியை நாம் கீழே ப்ரமாண பூர்வகமாகக் காட்டியாயிற்று. இந்த ப்ரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தி இராது. ஆனுலும் வர்ணுச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வருணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது என்னுமபிஸந்தியினுல் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்களைப் பிறர் செய்கிருர்கள். அவற்றை அநுவாதஞ் செய்து மறுப்பெழுத நாம் இங்கு விரும்புகின்றிலோம். ஏனென்னில், இது அனுஷ்டானத்திற்கு உபயோகப்படாத விஷயமாக இராநின்றது. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறேமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். இவ்வர்த்த விசேஷங்களைச் சேமிக்கின்ற நாமும் இவற்றை க்ஷேபிக்கின்ற பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆனுல் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காக வென்ருல், அவர்களுடைய காலத்திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரம பக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும். இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஓரோவிடங்களிலே தோன்றுகை அஸம்பாவித மன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்ருமே யிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்கு தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது. அவ்விஷயம் யாதெனில்; இந்த ஜந்மோத்கர்ஷ விசாரத்தில், ஜாதி நசிக்குமென்று நம் ஆசார்யர்கள் அருளிச் செய்து போந்தார்கள். "க்ஷத்ரியனுன விச்வாமித்ரன் ப்ரஹ்மரிஷியானுன்" இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளும் ஸ்ரீ வசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் விளங்குமவை. இவற்றுக்கு மறுப்புபோல் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் சில எழுதியுள்ளதனுல் அவை எவ்வளவு பொருந்துமென்பது இங்குச் சிறிது விமர்சிக்கப்படுகின்றது.

144. "சருவ்யத்யாஸாதிகளான சில விசேஷ நிதாநங்களாலே வருகிற விச்வாமித்ராதிகளுடைய நிலை வேறுசிலர்க்குக் கூடுமென்கை வசந விருத்தம்." என்பது ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ளது. இங்குத் தெளிவிக்கிறேம்.

145. ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் ஐம்பத்தாரும் ஸர்க்கத்திலே *க்ஷத்ரபந்தோ! ஸ்திதோஸ்ம்யேஷ யத் பலம் தத் விதர்சய நாசயாம்யத்ய தே தர்ப்பம் சஸ்த்ரஸ்ய தவ காதிஜ! * என்றும், *க்வ ச தே க்ஷத்ரியபலம்* என்றும், *பச்ய

ப்ரஹ்மபலம் திவ்யம்* என்று மிப்படி பலவிடங்களிலும் ஸ்ரீவஸிஷ்டபகவான் விச்வாமித்ரனை க்ஷத்ரியனுகவே சொல்லிப் போந்தான். விச்வாமித்ரன் தானும் "திக் பலம் க்ஷத்ரியபலம் ப்ரஹ்மதேஜோ பலம் பலம்" என்று தன்னை க்ஷத்ரியனுகவே சொல்லிக் கொண்டான். அன்றியும் *தபோ மஹத் ஸமாஸ்தாஸ்யே யத் வை ப்ரஹ்மத்வகாரணம்* என்று ப்ராஹ்மண்ய ப்ராப்திக்கு உறுப்பாக தவம் புரியப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு தபஸ்ஸிலே ப்ரவர்த்திக்கையாலே அதுக்கு முன்னே சருவ்யத்யா ஸ நிபந்தனமான ப்ராஹ்மண்யம் அவனுக்குண்டாயிருந்த தென்கை ஸ்ரீராமாயணத்தோடு சேருவது அரிது.

146. ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச் செய்யாநின்ற பட்டரும் உபோத்காதத்திலே "ஸ்வவசநேந க்ஷத்ரியம் விச்வாமித்ரம் ப்ராஹ்மணீக்ருதவதோ பகவதோ வஸிஷ்டஸ்ய" என்று க்ஷத்ரியனுன விச்வாமித்ரனை ஸ்வவசனத்தாலே ப்ரஹ்மரிஷியாக் கினதை யன்றோ வஸிஷ்டபகவானுக்கு ஏற்றமாக அருளிச்செய்தது. இங்ஙனன்றிக்கே விச்வாமித்ரனுக்கு ப்ராஹ்மண்யம் ஜந்ம ஸித்தமாயிருந்நால் பட்டர் இப்படி யருளிச்செய்யக் கூடாதே தபோ மூலகமான வஸிஷ்ட வாக்யத்தாலே ப்ராஹ்மண்யம் இடையில் வந்தது என்று ஸ்ரீராமாயணத்தில் தேறிநின்ற பொருளையன்றோ பட்டர் இங்ஙனே அநுவதித்தருளிச் செய்தது. தேவதாதிகரணச்ருத ப்ரகாசிகையிலே "பச்சாத் விச்வாமித்ரப்ரப்ருதீநாஞ்ச ப்ராஹ்மண்யாத்யபாவப்ரஸங்காத்" என்றிருப்பதொன்று போதுமே. விச்வாமித்ராதிகளின் ப்ராஹ்மண்யம் பிறப்பே பிடித்தன்றிக்கே பின்பு வந்ததாக இதனுல் ஸ்பஷ்டமாகிறதன்றோ. சருவ்யத்யாஸ கதையை இல்லை செய்வாரில்லை. அதற்குப் பலன் ஜாதிபேதமன்று.

147. இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கதொரு ப்ரமாணமுண்டு. (4—1—104) வியாகரண ஸூத்ரத்தின் பாஷ்யத்திலே "விச்வாமித்ரன் தன் தவ வலிமையினுல் தானும் தன் பிதாவும் தன் பிதாமஹனும் ரிஷித்வத்தை யடைந்தார்கள்" என்று ஸுஸ்பஷ்டமாகப் பதஞ்சலி முனிவர் பணித்தார். மஹாபாஷ்யத்தில் வ்யக்தமான விஷயமிது. காதிக்கும் குசிகர்க்கும் சருவ்யத்யாஸமானதுண்டோ?

148. இங்கே வெகு விரிவாகத் தெரிவிக்க வேண்டியவை பலபலவுண்டு. அவையெல்லாம் நம்முடைய ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதியென்கிற மணிப்ரவாள நூலிலும், ஸத்ஸம்ப்ரதாயஸுதாநிதியென்கிற ஸம்ஸ்க்ருதக்ரந்தத்திலும் விரிவுக்கு அஞ்சாமல் விரித்துரைக்கப்பட்டுள்ளதனுல் அங்கே சுருக்க மொழியக்கண்டு கொள்வது. முடிவாகவொரு முக்கியமான விஷயத்தை விவரித்து இதனைத் தலைக் கட்டுகிறேன். அதாவது நிகமாந்த குருவரர் அக்காலத்திலிருந்த ஆசார்யர்களோடு ஒத்துழைத்து பெரும்பாலும் அவர்களருளிச்செய்த திவ்யார்த்தங்களையே நிதியாகக் கொண்டவரென்பது. இதுவே இந்த ரக்ஷாக்ரந்தத்திற்கு சிகரமானதென்று கொள்க.

## 12. நிகமாந்தகுருவின் நிஜஸ்வரூப நிரூபணம்

149. ஸ்வாமியின் காலத்திலாவது, அவர்க்குப்பின் நூறு இருநூறு வருஷங்களுக்கு உட்பட்டகாலத்திலாவது ஆசாரியர்களுக்குள் வைஷம்யமோ ஸம்ப்ரதாய வேற்றுமையோ ஏற்பட்டிருந்தது கிடையாது. சில ஆசாரியர்களுக்குச் சில விஷயங்களில் அபிப்பிராயபேதம் என்பது மாத்திரமுண்டு. ஸமாநஸம்ப்ரதாயஸ்தர்களுக்குள்ளும் உபாகர்மவிசாரம், ஜயந்திவிசாரம், க்ருத்திகாதீபவிசாரம் போன்ற சில விஷயங்களில் அபிப்பிராயபேதங்களும் அநுஷ்டானபேதங்களுமிருந்து வருவதை இக்காலத்திலும் எங்கும் கண்டு வருகிறோம். எம்பெருமானார் எழுந்தருளியிருந்த காலத்திலேயே அவர் திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்தவர்களுக்குள்ளேயே சில அபிப்ராயபேதங்கள் தோன்றியதாகவும் ஆராய்ச்சியில் தெரிய வருகிறது. ஸோமாசியாண்டானென்பவர் எம்பெருமானார் திருவடி பணிந்தவராயிருக்கச் செய்தேயும் ஆழ்வான் ஆண்டான்பிள்ளான் கிடாம்பியாச்சான் முதலான ஆசார்யர்களோடு ஸர்வாத்மநா ஸமகண்டராயிராமல் சில அபிப்ராயபேதங்களைக் கொண்டிருந்தாரென்பது ஸ்பஷ்டமாகக் காண்கிறது. சாரீரகமீமாம்ஸையில் சதுஸ்ஸூத்ரீ சாஸ்த்ராரம்பஸமர்த்தனமன்று. முதல் ஸூத்ரம்மாத்திரமேயென்றும்; ப்ரபத்தி ஸர்வாதிகாரமன்று, பக்தியோகம்போலே இதுவும் அதிக்ருதாதிகாரமேயென்றும் இப்படிப்பட்ட அபிப்ராய பேதங்கள் எம்பெருமானார் காலத்திலேயே நம் தர்சனத்தில் முளைத்து வளர்ந்து வந்திருக்கின்றனவன்றோ. இந்த ரீதியில் தேசிகருக்கும் சில அபிப்ராயபேதங்கள் இருந்தனவென்று கொள்ளலாம். அதனால் ஸம்ப்ரதாய பேதமென்று வாய்திறக்க அவகாசமே கிடையாது. தேசிகர் கொண்டிருந்த சிற்சில அபிப்ராயபேதங்களும் கடைசிவரையில் நிலைத்திருக்கவில்லையென்று நிரூபித்தாயிற்று. நிலைத்தேயிருந்தனவென்று கொண்டாலும் குறையொன்றுமில்லை. நம்பிள்ளைபரம்பரையிலன்வயித்திருந்த வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர்க்கும் சில அபிப்ராயபேதங்களிருந்தன வென்பது அபலபிக்க முடியாமலிருக்கிறதன்றோ. அதைக்கொண்டு அவரிடத்தில் ஸம்ப்ரதாயபேதம் சொல்லுவாரில்லையே.

150. இக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் இருபிளவு ஏற்பட்டு ஸம்ப்ரதாயபேதம் கோஷ்டிபேதம் புண்ட்ரபேதம் முதலான பல பேதங்கள் காண நிற்பது போல முற்காலத்தில் ஒரு பேதமுமிருந்ததில்லை. இருந்ததென்றே சிலர் வாதித்தாலும் அதை மறுப்போமல்லோம். ஆனால் அந்தபேதங்களில் நிகமாந்தகுரு கலந்து கொண்டவரல்லர். எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரைகளில் அப்போது விளங்கி வந்த ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களோடும் ஆசார்யர்களோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறினவரேயொழிய கைவல்யாநுபவம்போலே வேற்றுமைப்பட்டிருந்தவரல்லர். வேறொரு கோஷ்டியில் சேர்ந்திருந்தாரென்னில் இவர் ஏகாகியாய்த் தனிப்பட்டிருந்தாரென்ன வேணுமேயொழிய, வேறொரு கோஷ்டி யென்பதற்கு வேறு நபர் ஒருவரும் கிடையாதென்பது திண்ணம். திவ்யப்ரபந்தங்களை நன்கு கற்றுணர்ந்து மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களோடு ஒரு நீராக கோஷ்டியில் கலந்து ஸேவிப்பது முதலான வற்றில் ஒத்துழைத்திருந்தாரே யல்லது பிறிகதிர்ப்பட்டிருந்தாரல்லர். அக்காலத்தில் மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவரும் எந்த ஸந்நிவேசமாகத் திருமண்காப்பு அணிந்து

கொண்டிருந்தார்களோ அந்த ஸந்நிவேசமல்லது வேறொரு ஸந்நிவேசத்தை நெஞ்சாலும் நினைத்தவரல்லர். சிலர் சொல்லுவது யாதெனில்; தேசிகனிடத்தில் திருக்குமாரரும் ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமியுந் தவிர வேறொருவரும் ஆச்ரயித்த தாகத் தெரியாமையாலே மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் அஸூயாதிகளாலே தேசிகனை யொதுக்கிவைத்து அணுகாமலேயிருந்து தூஷித்துக்கொண்டுமிருந்தார்களென்று தெரிகிறது; *ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணாநுஸாரிணாம்* இத்யாதி ச்லோகங்களினாலும் இது ஸ்பஷ்டமாகிறது— என்று. இது ஸாத்விகர்கள் செவியேற்கத் தக்கதேயன்று. ஸங்கல்பஸூர்யோ தயத்தில் *த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரகபாஷ்ய:* என்று முப்பது தடவை தாம் ஸ்ரீபாஷ்ய ப்ரவசனம் செய்ததாக அருளிச்செய்திருக்கிறார். திருக்குமாரரும் மற்றொருவருமான இருவர்க்கேயா முப்பது விசை ப்ரவசனம் செய்திருப்பர்? அக்காலத்தில் ஜிஜ்ஞாஸுக்களாயிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் தேசிகர் திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்வரூபக்ரந்தங்கள் கேட்டவர்களே.

151. ஆக, நிகமாந்தகுரு விபவகாலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களோடும் ஒத்துவாழ்ந்து பலரோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறி வந்தவர் என்பதில் ஒருவர்க்கும் ஒரு ஸந்தேஹமும் வேண்டா; வேதங்கள் வேதாந்தங்கள் ஸ்ம்ருதிகள் பாஞ்சராத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் திவ்யப்ரபந்தங்கள் இதர சாஸ்த்ரங்கள் ஆகிய எல்லாவற்றிலும் நிகரற்ற பாண்டித்யம் பெற்றிருந்த இப்பேராசிரியர் அக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுள் தலைமையான ஸ்தானம் பெற்றுத் திகழ்ந்தார். பித்ருச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்து ஸமயத்தில் வஞ்சித்துவிட்டார்களென்றும், திருமுடியில் படும்படி திருமாளிகை வாசலில் பாதரக்ஷையைக் கட்டிவைத்தார்களென்றும்....இப்படி அஸப்யமான ஐதிஹ்யங்களைப் பலகால் சொல்லியும் கேட்டும் பழகிவிட்டபடியால் "துர்வாஸநாந்ரடிமத:" என்று ஆழ்வான் ஸாதிக்கிற ரீதியில் இந்தப் பொய்க்கதைகளில் திடநம்பிக்கையுண்டாகி, மெய்யுரைகளை எவ்வளவு கேட்டாலும் அதைத் திரஸ்கரித்துத் தங்களுடைய மூடநம்பிக்கையையே மேம்படக் கொள்ளும் ஜனங்களிடையே இத்தகைய தத்வவாதங்கள் பயன்படாவெனினும் விசாலமான நிலவுலகத்தில் எங்கேனும் என்றேனும் பயன்பட்டே தீரும்.

152. நிகமாந்தகுரு நம்பிள்ளையை நேராக ஸேவிக்கப்பெற்றவரல்லர்; முன்னமே அவர் திருநாட்டுக்கெழுந்தருளி விட்டபடியாலே. ஆனாலும் நம்பிள்ளை திருவாக்கினின்று பெருகின மஹார்த்த அம்ருததாரைகள் அவருடைய சிஷ்யப்ரசிஷ்யர்களின் வியாக்கியான க்ரந்தங்களிலே தேங்கியிருந்தபடியாலே அவற்றை ஆராவமுதமாக அநுபவித்துப் பேரின்பமடைந்தவர்களில் தலைவரான நிகமாந்த வாசிரியர் அவ்வர்த்தவிசேஷங்களையே தம்முடைய நூல்களில் சேர்த்தருளினர். .... *

# 13. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் நிகமாந்தகுருவின் ப்ராவண்யம்

153. நம்பிள்ளை பக்கலில் நேராகக் கேட்டுப் பட்டோலை கொண்டவர்கள் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையுமான இருவர். இவர்களுள் வடக்குத் திருவீதிப்பிள்ளை யிட்டருளின வியாக்கியானங்கள் தேசிகர்க்குக் கிடைக்க ப்ரஸக்தியில்லாமலிருந்தது; பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களத்தனையும் இவர் காலத்தில் விசேஷப்ரசாரமடைந்திருந்தபடியால் அவற்றை 'அமுதிலு மாற்ற வினிது' என்கிற ப்ரதிபத்தியுடன் பருகிக்களித்தவர்களில் தலைவராகவேயிருந்தார். இதற்கு எண்ணிறந்த சான்றுகளுண்டு. சிலவற்றை இங்குக் காட்டுகிறேன்.

154. ஸ்வாமி த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலியருளிச்செய்தபோது பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியையே தழுவிப் பெரும்பாலு மருளிச் செய்திருக்கிறாரென்பது அவிசால்யமாக ஸஸாக்ஷிகமாய் மேலே நிரூபிக்கப்படும். அதுநிற்க. ஸ்தோத்ரபாஷ்யத்தை யெடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை உடன் கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை இவர் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். *நமோசிந்த்யாத்புத* என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன். இது அநுமானமன்று, உத்ப்ரேக்ஷையன்று, உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோசங்களும் ஸுலபமேயிறே துர்லபமன்றே, எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்காணும் இன்சுவைமிக்க பொருள்களை அப்படியப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங்கள் எடுத்துக் காட்டலாம்; ஆயினும் விரிவு காண்பாரில்லாமையாலே இங்குச் சிலவிடங்களே காட்டப்படுகின்றன.

155. முதல் ச்லோகத்தில் *ஜ்ஞாந வைராக்யராசயே* என்றவிடத்தில் வாரிராசி:, ஜலராசி: இத்யாதி ஸ்தலங்களிற்போல ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிறபொருளே எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப்பொருளை முந்துறப் பணித்தார் தேசிகன்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசியென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞாந ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையுமுடையவர் என்றுரைத்து, ஜ்ஞாநமும் வைராக்யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக்கொண்டு 'பகவத் ஸ்வரூபாதி ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் பாஷ்யத்தில் இதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார். கண்ணாரக் காணவேணும்.

156. மேலே *அகாதபகவத் பக்திஸிந்தவே* என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், *காதல் கடல் புரைய விளைவித்த* *காதல் கடலின் மிகப்பெரிதால்* இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச்சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன் அதைத்தழுவி "பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:" என்று பணித்தார்.

157. * ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரி ஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்திரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை ஸேவித்து அப்படியே யருளிச் செய்தார்.

158. * வசீ வதாந்யோ குணவாந் * என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தையே ப்ராயேண மொழிபெயர்த்திருக்கின்றார். இப்படி அதுவிதுவுதுவென்று எடுத்துக் காட்டவேண்டுமோ? ச்லோகந்தோறும் நியதமாகவே காணலாம்.

159. சிறிது மேலே போவோம்; (45) *அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதி ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழிபெயர்த்திருக்கிறார் தேசிகன். பக்தஜநைக ஜீவிதம் என்பதற்கு பக்த ஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவன் என்றும் பக்த ஜநங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டு விதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகனும் அப்படியே பாஷ்யமிட்டருளினர். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை யநுஸரித்தே பாஷ்யமுள்ளது. இதனை ஊன்றிக் கேண்மின்.

160. எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்றல்லவோ விசேஷணமுள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறோம். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமாயிருக்க முடியாதே; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரியவாச்சான்பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்—"[ஸமர்த்தம்] அளவுடையரான நித்யஸூரிகள் அனுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் * ஆற்றநல்ல வகை காட்டுமம்மானை * என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்த்யத்தையுடைய" என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் அற்புதமான ஸாமர்த்தியம். இப்பங்க்திகளை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழிபெயர்த்தவர் போல "ஆச்ரிதாநாம் ஸாத்ம்யபோக ப்ரதாநே" என்று அருளிச் செய்தார். ஸாத்ம்ய என்கிற ஸம்ஸ்க்ருதபதம் சிறிது அபூர்வமானது. சரக ஸுச்ருதாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில் தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9.) இவையுமவையு முவையும் * என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்-

மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாகப் பெரியவாச்சான்பிள்ளை அவதாரிகை யிட்டருளினர்; அதை யநுஸரித்து தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நா வலியில் "விபுமநுபுபுஜே ஸாத்ம்ய போகப்ரதாநாத்" என்றருளிச் செய்தார். அந்த ப்ரயோகத்தையே இங்கும் செய்தருளியுள்ளார். இனி வேறிடம் செல்கிறேன்.

161. ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகா ரத்தில் *கரியமேனிமிசைவெளிய நீறு சிறிதேயிடும். பெரிய கோலத்தடங்கண்ணன் (4-5-6) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைப்பற்றி அர்த்தவிசாரம் செய்யப்புகுந்து "சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:" என்று எழுதியுள் ளார் தேசிகன். இங்கு ஆசார்யா: என்கிற சொல்லால் பெரியவாச்சான்பிள்ளையையே விவக்ஷிக்கிறரென்பது அசைக்க முடியாதது. ஏன்? மேலே குறித்த பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறாயிரப்படி வியாக்கியானம்:—"நீலமேக நிபதிவ்ய ரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய், அதிவிசாலமாயதிரமணீயமாயிருப்பதொரு தாம ரைத் தடாகம்போலேயிருந்த திருக்கண்களையுடையனாய்" என்பது. இதனால், வெளிய நீறு என்பதற்கு திவ்யாங்கராக மென்னும் பொருள் கொள்ளப் பட்டதென்பதும், 'கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்' என்கிற முதலடியானது எம்பெருமா னுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதென்பதும் நன்கு விளங்கிற்று. பெரிய வாச்சான் பிள்ளையினுடைய வியாக்கியானத்தில் அருளிச்செய்திருக்கும் விதமாவது பிள்ளானருளிச் செய்தவிதத்திற் காட்டில் மிக வேறுபட்டது. 'வெளிய நீறு' என்பதற்கு அஞ்ஜந சூர்ணமென்று பொருள்கொள்ளப்பட்டது. "கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்' என்கிற முதலடி எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்படாமல் 'பெரியகோலத் தடங்கண்ணன்' என்றதன் ஏகதேசமான திருக் கண்களுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. 'திருக்கண்களின் கரிய விழியி னுடைய கறுத்த நிறத்தின்மேலே அஞ்ஜநசூர்ணத்தை யிடப்பெற்ற திருக்கண்களை யுடையவன்' என்னும் தாத்பரியம் பெரியவாச்சான்பிள்ளை முதலானருடைய வியாக்கி யானங்களில் மாத்திரம் காண்கிறது. பிள்ளானுடைய வியாக்கியானம் இதனில் மிக வேறுபட்டதென்பது புநருக்தம். "அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:"* என்றெழுதிய தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை முதலானரையே ஆசார்யராகச் சுட்டினரென்பது நிஸ்ஸந்தேஹவிபர்யயம்: பிள்ளானுடைய வியாக்கியானத்தில் நீறு என்பதற்கு அஞ்ஜநபரத்வமும் கூறப்படவில்லை. சக்ஷுஷி தாரணமும் காட்டப்படவில்லை யன்றோ. ஆறாயிரப்படியில் "திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய்" என்கிற பங்க்தி ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலே நீறு என்பதற்கு அங்கராகப் பொருளும் அந்த அங்கராகத்தினால் திருமேனி அநுலிப்தமாயிருக்கிறதென்பதுமே பிள்ளானுடைய திருவுள்ளமாகத் தேறுகிறது ஆக ஸச்சரித்ரரக்ஷையில் ஆசார்யா ஆஹு: என்று எடுத்துக் காட்டி யிருக்கும் விஷயம் பிள்ளானுடைய படியில் கிடையாதென்றும் நம்பிள்ளையின் பரம்பரையினருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. (தேசிக் ஆஹு:) என்னாமல் ஆசார்யா ஆஹு: என்றெழுதி யிருக்கையாலே நம்பிள்ளை பரம்பரையில் வந்த மஹான்களையே தமக்கு ஆசார்யராகக்கொண்டு உஜ்ஜீவித்தவர் தேசிகன் என்கிற பரமார்த்தம் நிஷ்கல்மஷ மாகத் தேறுகின்றது. மாச்சரியத்தை யகற்றி நடுநிலையில் நின்று காண்க.

162. தேசிகன் உபய வேதாந்தத்தையும் குருமுகமாக அதிகரித்தவர் என்பது ஸர்வ ஸம்ப்ரதிபன்நம். திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானமும் அவதரியா திருந்த காலத்தில் பூர்வாசார்யர்கள் மூலத்தை வைத்துக்கொண்டே ஸ்வஸ்வாசார்யர் களிடத்தில் அர்த்தச்ரவணம் பண்ணி வந்தார்கள். பிள்ளானுடைய ஆறாயிரப்படி அவதரித்தபின்பு அக்காலத்திலுள்ளவர்கள் அதைக்கொண்டே காலக்ஷேபம் செய்துவந்தார்கள். நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படிக்குப் பிறகு பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படி மிக விரிவாகவும் ரஸபரிபுஷ்டமாகவும் அவ தரித்தபடியினாலே அக்காலத்திலிருந்தவர்கள் யாவரும் அந்த இருபத்துநாலாயிரப்படி கொண்டே காலக்ஷேபம் செய்துவந்தார்கள். அக்காலத்தில் ஈடுமுப்பத்தாறாயிரப்படி அவதரித்திருந்தும் அது அக்காலத்தில் பிரசாரமடையாமல் பிறகு பிரசாரமடைந்த படியினால் அந்த மத்யகாலத்தில் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே தேசிகன் முதலானார்க்கும் காலக்ஷேப க்ரமமாக விளங்கிற்று—என்னுமிது அளவுகடந்த ஸாக்ஷியங்களால் அவிசால்யமாகக் காட்டி நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த நிரூபணங்கள் ஸாமாந்யப்ரஜ்ஞர்களின் புத்திக்கு அடியோடு எட்டமாட்டாதவை. (1-8.) ஓடும் புள்ளேறி. (1-10) பொருமா நீள்படை. (2-8) அணைவதரவணைமேல்.... இவை முதலான தசகங்களுக்கு ஆறாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; பெரியவாச்சான் பிள்ளையிருபத்துநாலாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறு விதம். இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாக அறியலாம். தேசிகன் இருபத்து நாலாயிரப்படியையே அடியொற்றி த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியையும் த்ரமிடோபநிஷத் ஸாரத்தையும் ஸாதித்திருக்கிறார். இது அபலபிக்க முடியாம லிருக்கின்றது. தாத்பர்யரத்நாவலியில் திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தை நோக்கி ஒவ்வொரு பதமன்றோ அருளிச் செய்யப்படுகிறது. அப்படிப்பட்ட பதமும் பெரும்பாலும் இருபத்துநாலாயிரப்படியிலுள்ள பதமாகவுள்ளதென்று இதுவும் நுட்ப மாகக் காட்டப்பட்டதடியேனால். மற்றொரு அபூர்வ விஷயமும் கேண்மின்.

163. பத்தாம்பத்தில் முதல் திருவாய்மொழி *தாளதாமரை யென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ்கின்றது. இத்திருவாய் மொழிக்கு அவதாரிகையிட்டருளின திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஆறாயிரப் படியில்—"திருக்கண்ணபுரத்திலெம்பெருமானை யநுபவித்து இப்போது திருமோகூரி லெம்பெருமானை யநுபவிக்கிறார்" என்று இவ்வளவேயருளிச் செய்தார். மேற் பாசுரங்களிலும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார்யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷமருளிச்செய்கிறார்கள்; அதாவது— ஆழ்வார் கீழ் *மாலைநண்ணித்திருவாய்மொழியில் *சரணமாகுமென்கிற பாசுரத்தில் தம்முடைய பரமபதயாத்திரையை நிச்சயித்து அர்ச்சிராதி மார்க்க கதியை யறுதி யிட்டு அந்த கதிக்குத் திருமோகூர்க் காளமேகப்பெருமாளை வழித்துணையாகப் பற்று கிறார் இத்திருவாய்மொழியில்—என்பதே. மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் *தாளடைந்தோர் தங்கட்குத் தானேவழித்துணையாம், காளமேகத்தைக் கதியாக்கி* என்றருளிச் செய்தார். ஆசார்யஹ்ருதயத்தில் "மார்க்கபந்து சைத்யம் மோஹ னத்தே மடுவிடும்" என்று பணிக்கப்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை யிருபத்து நாலாயிரப்படி முதலானவற்றிலும் 'காளமேகப்பெருமாளை வழித்துணையாகப் பற்றுகிறார்' என்றுள்ளது. இவ்விதமாக ப்ரமேயசிக்ஷை ஆறாயிரப்படியில்

ஸூசனையாகக்கூட கிடையாதென்பது நிர்விவாதம். திருமோகூரப்பனே ஸ்தோத்ரம் பண்ணுகிறுரென்னுமித்தனையே ஆருயிரப்படியிலுள்ளது. இனி, தேசிகனது த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் தத்ஸாரத்திலும் பார்க்கவேணும். ரத்நாவளியில் (104) *தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் "ச்ராந்திஹாரித்வமுக்க்யை ராகாரைஸ் ஸத்கதிஸ் ஸ்யாத்" என்கிறுர். *ஸத்கதிஸ் ஸ்யாத்* என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் "காளமேகப்பெருமாளே வழித்துணையென்று" என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோப நிஷத்ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ" என்றருளிச்செய்தார். *ஸத் கதிஸ் ஸ்யாத்* என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு *ஸத்பதவ்யாம் ஸஹாயமென்றவிது கைவிளக்காயிருக்கின்றது. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு; தேசிகனுக்கு ஆருயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியால் அதை ஒருகால் ஸேவித்து நிறுத்தி பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிறதென்கிற காரணத்தினுல் தேசிகன் இதுதன்னையே நிதியாகக் கொண்டு இதையே தமக்குக் காலக்ஷேபக்ரந்தமாக ஆதரித்துவந்தார்.

164. அரிய பெரிய விஷயமிரண்டெழுதித் தலைக்கட்டுகிறேன். நம்பிள்ளை பக்கலில் ஒரு பண்டிதர் வந்து "கீதையில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமேயில்லையே! ஏன்?" என்று கேட்க, "நாலாமோத்தில் *யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்* என்றதில் அர்ச்சாவதார நிலையும் அந்தர்க்கதமே காணீர்" என்று நம்பிள்ளையருளிச்செய்ததாக வார்த்தாமாலையிலுள்ளது. திருவாய்மொழியில் (8-1-4) *உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி* என்கிற பாசுரத்தை அர்ச்சாவதாரபரமாக நிர்வஹித்து இந்த கீதாச்லோகத்தை ஸம்வாதப்ரமாணமாக நம்பிள்ளை காட்டியருளினது ஈட்டிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் விசதம். இந்த கீதாச்லோகத்திற்கு அர்ச்சாவதாரபரத்வம் கீதாபாஷ்யத்தில் இல்லை. நம்பிள்ளை நிர்வாஹமே. தேசிகன் இந்த நிர்வாஹத்தை தாத்பர்யசந்திரிகையில் *யே யதா மாம் உபக்ரமத்திலேயே "அத்ர க்ருஷ்ணவதார வ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதார வ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத:" என்று காட்டினர். இதைக் காட்டிலும் மிகச்சிறந்த விஷயமொன்று கேளீர்; ஒருநாள் நம்பிள்ளை யுபந்யாஸத்தில் *தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்கிற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தைக் கொண்டு ரஸமாக அருளிச்செய்கையில் *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:* என்கிற கீதா ச்லோகத்தில் சகாரத்தைக் கொண்டு "ஜ்ஞானி என் பக்கலில் செய்யும் ப்ரீதியை உபாதியாக்கி அவன் பக்கலிலே நான் ப்ரீதி பண்ணுவது பெரிதோ?" என்றருளினதாகவுள்ளது. இதை ஸேவித்த தேசிகன் அந்த கீதாச்லோகத்தின் தாத்பர்ய சந்திரிகை முடிவில் "ஸ ச மம ப்ரிய இத்யத்ர நிரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிகப்ரீதிகரணத் அத்ருப்திஸ் ஸூசிதேதி கேசிதாசார்யா:" என்றெழுதினர். (கேசிதாஹு:) என்னுமல் கேசிதாசார்யா: என்றதிலுள்ள ப்ரதிபத்தி கௌரவம் உணரத்தக்கது. இங்ஙனே பலபல விஷயங்கள் அடியேனுடைய ஆராய்ச்சியின் பலனாக உலகமநுபவிக்குமவை. .... *

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் இயற்றிய
ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தரக்ஷையில் இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று

# எழுபத்தைந்து வினுவிடை - (முன்னிதழ்த்தொடர்ச்சி)

57. வினு:—"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்கிற கீதா சுலோகத்தையெடுத்துக்கொண்டு ஏதோ ஸாதித்தது இடையில் விச்சின்னமாய் விட்டது; அதைப் பூர்த்திசெய்யும்படி பிரார்த்திக்கிறேன். (விடை.) ஸகல ஜகத்துக்களும் எம்பெருமானுக்கு சரீரமாய் அவன் உயிர்க்கு உயிராயிருக்க, ஞானிகளைத் தனக்கு உயிராகச் சொல்லுகிருன். தான் நியாமகனுயும் ஸர்வசேஷியாயுமிருக்கிற இருப்பு தவிர்ந்து தன்னை நியாம்யனுகவும் சேஷ பூதனுகவுமாக்கிப் பேசியுள்ளான். அன்றியும், கீதையில் தான் சொல்லுவதெல்லாம் தன்னுடைய மதமாயிருக்க, இவ்விஷயத்தை விசேஷித்து "மே மதம்" என்கிருன். இதைப்பற்றி தாத்பர்ய சந்திரிகையில் ஸ்வாமி யருளிச் செய்திருப்பது மிகவினிது; இவ்வர்த்தம் வேதாந்தங்களுக்கு இணங்கின ஸித்தாந்தமாக இருந்தாலிருக்கட்டும்; இல்லாமற்போனுல் போகட்டும்; தேர்த்தட்டிலே கண்ணபிரானுக வீற்றிருந்து சொல்லுகிற என்னுடைய ஸித்தாந்தம் இதுவே—என்பதாக ஸ்ரீ க்ருஷ்ண ஹ்ருதயத்தை விவரித்தருளினுர். இதனுல், ஸகல சாஸ்த்ரங்களும் ஒரு தட்டாய் "ஜ்ஞாநீது ஆத்மைவ" என்கிற இவ்வசனம் ஒருதட்டாய் இதுவே மேன்மை பெற்றதென்று தேறிற்று. இளைய பெருமாளை நோக்கி "த்விதீயம் மேந்தராத்மாநம் த்வாம்" என்று பெருமாளருளிச் செய்ததைக் கொண்டும் ஆசார்யர்கள் ரஸமயமான அர்த்தத்தை வெளியிட்டுள்ளார்கள். ஸ்தோத்ர ரத்நத்தில் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்ற திவ்ய ஸ்ரீ ஸூக்திரத்நத்தில் இவ்வர்த்தவிசேஷங்களெல்லாம் ஜ்வலிக்கும். பகவான் தன்னிடத்தில் ஸாக்ஷாத் பக்தி செய்யும் அன்பர்களிற் காட்டிலும் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் தம் அடியாரடியோங்களே" என்றும் "த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய:" என்றும் இருப்பார் திறத்திலே அளவுகடந்த வாத்ஸல்ய முடையவன் என்ருல் இதில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? விவாதமுண்டோ? இதுபோலவே, பகவான் தன்னிடத்தில் தீமை செய்யுமவர்களிற் சாட்டிலும் தன்னடியாரடியாரடியார் திறத்தில் தீமை செய்யுமவர்களிடத்தில் அதிகமான நிக்ரஹருசியை யுடையவன் என்ருல் இதில் பொருந்தாமை யொன்றுமில்லை.

58. வினு:—யதிராஜ ஸப்ததியில் "அநுகல்பபூதமுரபித்பதம் ஸதாம்......சரணம் யதீந்த்ர சரணம் வ்ருணீமஹே" என்கிருர். ஸத்துக்கள் வணங்குவதற்கு எம்பெருமானுடைய திருவடிகள் கௌண பக்ஷமேயல்லது முக்ய பக்ஷமல்ல வென்றும், ஸ்ரீ பாஷ்யகாரருடைய திருவடிகளே முக்ய பக்ஷமென்றும் இதனுல் நிஸ்ஸந்தேஹமாய் ஸுஸ்பஷ்டமாய்க் கிடைக்கிறது. இதைப்பற்றி தேவரீர் திருவுள்ளமென்ன? (விடை) இதெல்லாம் அதிவாதமென்றே யிகழ்வர் சிலர், அவர்களுக்கு இதுதவிர வேறு வழியில்லை. ஸகல சாஸ்த்ர ஸாரஜ்ஞர்களோ வென்னில், இதுதான் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்த மென்று புகழ்வர்களே யன்றி இகழார்கள். இதில் விஸ்தரித்துச் சொல்லவேண்டிய அவசியமிருப்பதாக நான் நினைக்கவில்லை.

59. வினு:—வேதாந்த சாஸ்த்ரார்த்த விஷயமாக எம்பெருமானுர்க்கும் யாதவப்ரகாசர்க்கும் நடந்த பல சர்ச்சைகளில் *கப்யாஸ ச்ருதியின் பொருளைப்பற்றின

விவாதம் தலைமை பெற்றதல்லவா? இதைப்பற்றி அவரவர்கள் ஏதோ ஸ்தூலமாகச் சொல்லிப் போருகிறார்களே யொழிய மர்மஸ்பர்சியாகச் சொல்லுவார் ஆருமிலர் என்று நினைக்கிறேன். தேவரீர் இதைப்பற்றி நன்கு ஆராய்ந்திருக்கக் கூடுமாதலால் அடிபணிந்து கேட்கிறேன். அடியேனுடைய அற்பபுத்திக்கு நன்றாக எட்டும்படி ஸாதிக்கவேணும். பெரிய விஷயமாதலால் அடியேன் எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி ஸாதிக்கவேண்டு கிறேன். (விடை) உன்னுடைய வார்த்தையைப் பார்க்கும்போது இதைப்பற்றி நீ ஏதோ ஸ்தூலமாக அறிந்திருப்பது போல் தோன்றுகிறது. நீ அறிந்திருப்பதைத் தெரிவித்தால், அது யுக்தமாயிருந்தால் அதையேஆமோதிக்கிறேன்; இல்லையேல் எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். இவ்விஷயம் அவச்யம் ஸமர்மகமாகத் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். சிலர் இதில் க்ஷோபம் விளைத்திருக்கிறார்களென்பதையும் நானறிவேன். அது கிடக்கட்டும். நீ அறிந்ததைச் சொல்லு, கேட்போம்.

60. வினா;—அடியேன் ஒரு பத்ரிகையில் ஒரு வித்வான் எழுதியிருந்ததைக் கண்டேன்; என்ன எழுதியிருக்கிறாரென்றால்; "அத்வைதமதத்தை ஸ்தாபித்த சங்கராசாரியர் உபப்ரும்ஹணங்களின் உதவியின்றி *கப்யாஸம்* என்பதற்கு ஒருவிதமாய்ப் பொருள் கூறினார். ஸ்வாமிராமாநுஜர் உபப்ரும்ஹணங்களை நன்கறிந்தவராகையாலே ஸரியான பொருளைக் கூறினார். *ராம: கமல பத்ராக்ஷ:* என்பதே ராமாநுஜர் அறிந்த உபப்ரும்ஹணம். இதை சங்கராசார்யர் அறிந்திலர்" என்றெழுதியுள்ளார். இது யுக்தந் தானாவென்பதை தேவரீரிடமிருந்து தெரிந்துகொள்ள விரும்புகிறேன். (விடை.) 'சங்கராசாரியர்' என்றால் அவர் இன்னாரென்பதைத் தெரிந்துகொள்ளமாட்டாதவர் ஒருவருமில்லை. "அத்வைத மதத்தை ஸ்தாபித்த" என்கிற விசேஷணம் அவர்க்கு அவசியமேயில்லை. அவசியமற்ற அந்த விசேஷணத்தை இங்கு இட்டதற்குக் கருத்து என்னவென்றால், அத்வைத மதமென்பது பகவானிடத்தில் துவேஷம் நிரம்பிய மதம்; அப்படி பகவத்த்வேஷம் நிரம்பிய மதத்தை சங்கராசார் ஸ்தாபித்தவராகையினாலேயே அவர் கப்யாஸ ச்ருதிக்கு பகவத் த்வேஷம் நன்கு விளங்கும்படியான மர்க்கடப்ருஷ்டப்பொருளை யெழுதிவைத்தார்—என்பதுதான் கருத்து என்னவேணும்.

61. வினா :—அவருடைய கருத்து எப்படியாவதிருக்கட்டும். இந்த விஷயம் ஸரிதானா? (விடை.) எப்படி ஸரியாகும்? இது தவறாக எழுதப்பட்ட வாக்யம்; கப்யாஸ ச்ருதியின் அர்த்தமாக எதிரிகளின் கோஷ்டியில் வழங்கிவரும் மர்க்கடப்ருஷ்டார்த்தமானது சங்கராசாரியர்க்கு மிகவும் முற்பட்டவராயும் ஸ்ரீராமாநுஜர்க்கும் ஆதரணீயராயுமிருந்த த்ரமிடாசார் எழுதிவைத்த அர்த்தம்; அது ச்ருதப்ரகாசிகையில் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. அதைத் தெரிந்துகொள்ளாமல் சங்கராசாரியர் எழுதிவைத்திருப்பதாக எழுதினது ஸரியன்று. உண்மை தெரிந்து எழுதினதாக இருந்தால், "த்ரமிடாசார் பூர்வபக்ஷார்த்தமாக எழுதிவைத்ததை சங்கராசாரியர் ஸித்தாந்தப் பொருளாக மயங்கி எழுதிவிட்டார்" என்று இவ்விதமாகப் பங்க்தி யெழுதியிருக்கவேண்டும். இப்படி யெழுதாமையினாலே அவர் உண்மையைத் தெரிந்து எழுதினாரல்லர்—என்றுதான் சொல்ல வேண்டும். அவர் என்றால் எவர்? என்கிறாயோ ?......என்னமாட்டாய்.

62 வினு:—சங்கராசாரியர் எழுதிவைத்த பொருள் உபப்ரும்மணங்களின் உதவியின்றி எழுதப்பட்டதாகச் சொல்லுவதனுல் என்ன ஏற்படுகிறதென்றுல், சங்கராசாரியர் உபப்ரும்மணங்களின் உதவியைக் கொண்டிருந்தால் மர்க்கடப்ருஷ்டார்த்தம் கொண்டிருக்கவேமாட்டார், கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான ஸ்வாமிஸூக்தியால் ப்ரகாசிதமான மூன்று பொருள்களேயே கொண்டிருப்பர் என்றதாகத் தேறுகிறது. இது ஊஹித்தறியவேண்டாதபடி ஸ்பஷ்டமாகவும் பிறரால் எழுதப்பட்டிருக்கிறது. அதாவது, ஸ்ரீராமாநுஜர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்மணவசனத்தைத் துணைகொண்டபடியினுல்தான் (கம்பீராம்பஸ்ஸமுத்பூத) இத்யாதியர்த்தம் எழுதினுர் என்று அடியேன் கண்ட வியாஸத்தில் பல தடவை எழுதப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி ஸாதிக்கவேணும். (விடை.) கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான மூன்று அர்த்தங்களுக்கு ஸாதகமான உபப்ரும்ஹணம் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஏழேழ்பிறவி தேடினுலும் ஒரு துணுக்கைகூட கிடைக்காது; ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் கிடைக்குமேயொழிய ஸம்ஸ்க்ருத மயமான எந்த க்ரந்தத்திலும் ஸரி, அணுவளவும் கிடைக்காது; (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற ஸ்ரீ ராமாயணவசனத்தை நம் ஆசாரியர்கள் எடுத்தாளுகிறுர்களென்பது வாஸ்தவம்; ஆனுல் அதை எந்த விஷயத்திற்கு எடுத்தாளுகிறுர்களென்பதை உள்ளபடி யுணரமாட்டாமல் அஸ்தாநே அகாண்டே உபயோகப்படுத்தியிருக்கிறுரவர்—என்றுதான் திடமாகச் சொல்லவேண்டும்.

63. வினு:—இதைத்தானே அடியேன் விரிவாகக் கேட்டுணர விரும்புகிறேன். (விடை) ஸ்ரீ ராமாநுஜர் அருளிச் செய்திருக்கிற கப்யாஸச்ருதி விவரணமான ஸூக்தியில் முதல், இடை, கடை ஆகிய மூன்றிடங்களிலும் விஷயமிருக்கிறது. (கம்பீராம்ப:) என்றுரம்பித்து (விகஸித) வரையில் முதல் விஷயம். (புண்டரீக) என்னுமல் (புண்டரீகதள) என்றது இடை விஷயம். அதற்கு மேலும் (அமல, ஆயத) என்றது கடையான விஷயம். இவற்றில் ஒன்றுகூட சங்கராதி க்ரந்தங்களில் ஒன்றிலும் கிடையாது. இவ்வளவையும் ஸ்ரீ ராமாநுஜர் திவ்ய ப்ரபந்தத்திலிருந்தே க்ரஹித்தாரென்றும், வேறு எந்த சாஸ்த்ரத்திலிருந்தும் க்ரஹிக்கவில்லை யென்றும் இதை க்ரஹிப்பிக்கவல்ல ஸம்ஸ்க்ருத ப்ரமாணம் லவலேமும் கிடையாதென்றும், (ராம: கமலபத்ராக்ஷ:) என்பது தளாம்சமொன்றுக்கே உதவுமென்றும் தெரிந்துகொள். உண்மையில் கப்யாஸச்ருதி விசாரமெல்லாம் அந்த மூன்றெழுத்துக்களின் அர்த்தத்தில் விவாதத்தைப் பற்றினதேயொழிய வேறு எந்த விஷயத்தையும் பற்றினதன்று. இதை ஒவ்வொருவரும் நெஞ்சில் நன்றுகப் பதியவைத்துக் கொள்ளவேண்டும். விஷயத்தைப் பலாப்பிசினும் கூளமுமாக்கி மயக்கவொண்ணுது. (ராம: கமலபத்ராக்ஷ:) என்பது உபப்ரும்ஹணமன்று என்று யாரும் சொல்லமாட்டார்; சொல்லவுமில்லை. நீயே ஆலோசித்துப்பார் இந்த ராமாயண ச்லோகத்திற்கும் கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதிக்கும் என்னஸம்பந்தம்? கப்யாஸ ச்ருதிக்கும் (சுக்லாம்பரதரம்விஷ்ணும்) (யஸ்யஜ்ஞாநதயாஸிந்தோ:) என்கிற ச்லோகங்களுக்கும் எவ்வளவு உறவோ அவ்வளவு உறவுதான். (ராம: கமலபத்ராக்ஷ:) என்பதற்கும் "சங்கராசார் உபப்ரும்ஹணத்தை உதவிகொள்ளாமல் அர்த்தம் பண்ணினபடியாலே வேறுவிதமாக எழுதிவிட்டார்" என்று ஸாதிக்குமவர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்பதை அவர் உதவி கொண்டிருந்தால் எவ்விதமாக எழுதியிருக்க முடியும்? என்று விவரிக்கவேணும். (கம்பீராம்பஸ்ஸமுத்பூத) என்பதும் எழுதியிருக்க முடியாது; (ஸூம்ருஷ்டநாள)

என்பதும் எழுதியிருக்க முடியாது; (ரவிகரவிகஸித) என்பதும் எழுதியிருக்க முடியாது. காதம்பலவும் திரிந்துழன்றாலும் இதை மறுக்க முடியாது. (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்ஹணவசனத்தை உதவி கொண்டிருந்தால் "புண்டரீகதள" என்று இவ்வளவே யெழுதியிருக்கலாம். வேறொன்றும் எழுதியிருக்க முடியாது.

புண்டரீக சப்தத்திற்கு புலி யென்கிற பொருளுமுண்டு; பாரத சம்புவில் "புண்டரீக நிவஹேஷு மீலநம்" என்றதை வாசித்தவர்களுக்கு அந்த அர்த்தம் ஸ்புரிக்கும். சங்கராசார் ஒருக்கால் அந்த அர்த்தத்தை எழுதியிருந்தால் அப்போது; அவர் (கமலபத்ராக்ஷ:), என்பதைத் துணைகொள்ளவில்லை யென்று சொல்லலாம். அவரோ புண்டரீக சப்தத்திற்கு அபார்த்தம் எழுதவில்லை. புண்டரீகதளம் என்னுமர்த்தத்தில் அவர்க்கு விஸம்வாதமும் கிடையாது. புண்டரீகாக்ஷ:, கமலநயந:, ஸரஸீருஹலோசந: என வருமிடங்களிலெல்லாம் தளம் என்று அர்த்தம் பண்ணியேயாகவேணுமென்று யாதொரு நிர்பந்தமுமில்லை. ஸஹஸ்ரநாமத்தில் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு பாஷ்யம் செய்தருளின பட்டர் தாமரைப் பொருளைக் காட்டவேயில்லை; அதனால் அவர்க்கு யாதொரு குறையும் கூறுவாரில்லையே. 'லோஹிதாக்ஷ:' முதலான வேறு திருநாமங்களிலே தாமரைக்கண்ணனென்னுமர்த்தம் கிடைத்துவிட்டபடியால் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு ஸம்பாவிதமான வேறொரு பொருள் பணிக்கலாமென்று திருவுள்ளம்பற்றி பட்டர் வேறு அர்த்தத்தைத் தமது பாஷ்யத்தில் எழுதிவைத்தார். அதைக்கொண்டு பட்டர் (ராம: கமலபத்ராக்ஷ:) என்கிற உபப்ரும்ஹண வசநத்தைத் துணைகொள்ளாமையாலே இப்படி வேறு பொருளுரைத்தார் என்று யாரேனும் தூஷணம் சொல்லுவாருண்டோ? "இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்" "வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:" என்கிற ப்ரமாணங்களில் யாருக்காவது விப்ரதிபத்தியுண்டோ? சங்கராசார்யரும் இதில் விப்ரதிபந்நரல்லரே எந்த உபப்ரும்ஹண வசனம் எந்த வேதபாகத்திற்கு உபகாரகம் என்பதைப் பகுத்தறியகில்லாமல் ஜரத்கவவாக்யார்த்த ஸமசீலமாக எழுதியதனால் இவ்வளவு கிலேச மேற்படுகிறது.

64. வினா:—எம்பெருமானார் கப்யாஸ ச்ருதிக்கு கம்பீராம்பஸ்ஸமுத்பூதேத்யாதியான மூன்று பொருள்களை ஸித்தாந்தப் பொருளாகக் கொண்டது எதனாலே யென்பதை விவரித்தருளிச் செய்துவிட்டால் இதை விட்டு வேறு விஷய விஜ்ஞாபனத்தில் செல்லுகிறேன். (விடை.) இது அம்ருத லஹரீ பத்ரிகையிலும் ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையிலும் சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியிலும் பெரிய பாரதமாக வெளிவந்த விஷயம். அந்த வெளியீடுகளுக்குப் பஞ்சமில்லை. அவற்றின் ஸாரத்தை அதிஸம்க்ஷேபமாகச் சொல்லி நிற்கிறேன். *நீரார் கமலம்போல் செங்கண்மால்* என்று திருமடலில் திருமங்கையாழ்வாரருளிச் செயல். இதில் நீரார் என்ற கமல விசேஷணத்திற்குச் சேரவும், திருவிருத்தத்தில் "அழறலர்தாமரைக்கண்ணன்" என்ற சந்தைக்குச் சேரவும் (கம்பீராம்பஸ் ஸமுத்பூத) என்றது. திருவிருத்தத்தில் "எம்பிரான தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம்போல் பொலிந்தன" என்ற சந்தைக்குச் சேர (ஸும்ருஷ்டநாள) என்றது. *செந்தண்கமலக்கண்—நாயிறு அந்தமில்லாக் கதிர்பரப்பி அலர்ந்த தொக்குமம்மானே* என்கிற திருவாய்மொழிச் சந்தைக்குச் சேர (ரவிகரவிகஸித) என்றது. இந்த சர்ச்சை போதும். இனி வேறு விஷயத்தில் செல்.

65. வினு:—ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்னத்தில் முதலில் மூன்று சுலோகங்களினுல் ஸ்ரீமந் நாதமுனிகளைத் துதித்தார். அடுத்தபடியாக நம்மாழ்வாரைத் துதிக்கவேண்டியிருக்க, பராசரமஹர்ஷியைத் துதித்துவிட்டுப் பிறகு நம்மாழ்வாரைத் துதித்திருக்கின்ருர். நாதமுனிகளுக்கும் நம்மாழ்வார்க்குமிடையில் பராசர மஹர்ஷியைப் புகவிட்டது எதனுலே? உபக்ரமத்திலேயே நம்மாழ்வாரைத் துதித்து, பிறகு நாதமுனிகளைத் துதித்து, அதன் பிறகு பராசரரைத் துதித்திருக்கலாம். இந்த முறைகளை விட்டு வேருெரு முறையில் ஸ்துதியை அமைத்திருப்பது பற்றி த்ருப்திக்ரமான ஸமாதானம் ஸாதிக்கவேணும். (விடை.) ஆளவந்தார் திருவுள்ளத்தைச் செவ்வளே தெரிவிக்கிறேன் கேள். *மாதாபிதாயுவதய:* என்கிற சுலோகம் அவதரித்திருக்கிறபடியை உற்று நோக்க வேணும். இதில் சடகோப:, சடரிபு:, சடாரி:, பராங்குச:, காரிஸூநு: இத்யாதி திருநாமங்களில் எதுவும் கிடையாது. "ஆத்யஸய ந: குலபதே:" என்றிருக்கிறது. எம்பெருமானையே ஆத்ய குலபதியாக விவக்ஷித்தருளினுரென்றும் சொல்லிவிடலாம். ஆனுல் அங்ஙனம் சொல்லவொண்ணுதபடி "வகுளாபிராமம்" என்ருெரு அத்புதமான ஸ்ரீஸூக்தியைப் புகுத்தியிருக்கிருர். திருத்துழாய் சாத்தின தெய்வமன்று, மகிழ்மாலையணிந்த தெய்வமே எனக்கு உத்தேச்யமென்று காட்டினுராயிற்று. இந்த விசேஷணம் திருவடியிணைக்கு இட்டிருக்கிற படியாலே அந்தத் திருவடியை எம்பெருமானுடைய திருவடியாகவே திருவுள்ளம்பற்றி அப்பெருமான் வேறு, ஆழ்வார் வேறு என்று நினைக்கவொண்ணுபடி எம்பெருமானேடே ஏகீக்ருத்ய அருளிச் செய்தபடி. எம்பெருமான் திருவடி நிலைக்கு ஸ்ரீ சடகோபனென்றே அநாதிகாலம் தொடங்கி வ்யபதேசமாதலால் இந்த அவயவம் அவயவியோடே சேர்ந்திருக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியே ஆழ்வார் துதியை எம்பெருமானுடைய துதியோடே அவ்யவஹிதமாக்கினபடி.

66. வினு:—இது மிகவும் த்ருப்திகரமான ஸமாதானம். ஆளவந்தார் திருவுள்ளத்திற்கு மிக விணங்கின ஸமாதானம். அடியேனுக்குத் தோன்றுவதொன்றையும் விஜ்ஞாபிக்கிறேன். தவறு இருந்தால் சிக்ஷிக்கவேணும். "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்பதனுல் ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாரை விவக்ஷிப்பதாக வன்ருே சொல்லப்படுகிறது. அப்படியல்லாமல், நம்முடைய குருபரம்பரைக்கு முதல்வன் எம்பெருமானே யாதலாலும் "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்.........வந்தே குருபரம்பராம்" என்று அநுஸந்தித்து வருதலாலும், "ஆபகவத்த: ப்ரதிதாம் அநகாம் ஆசார்யஸந்ததிம் வந்தே" என்கிற ஸ்ரீஸூக்தியை யநுஸரித்தும் எம்பெருமானையே ஆத்ய குலபதியாகக் கொள்வதில் குறையொன்றுமில்லை யன்ருே. ஏவஞ்ச, 'ஆத்யஸ்ய ந: குலபதே:' என்பதற்கு 'ஸர்வேச்வரனுடைய என்றே பொருள் கூறிவிட்டு, அந்த ஸர்வேச்வரனுடைய வகுளாபிராமமான திருவடியிணை—நம்மாழ்வார் என்று கொள்ளலாமன்ருே? இதில் ஏதேனும் அநுபபத்தியுண்டோ? (விடை.) ஒரு அநுபபத்தியுமில்லை. தாராளமாகக் கொள்ளலாம். ஆனுல் ஆளவந்தார், ஆத்ய குலபதியாக நம்மாழ்வாரைத் தவிர்த்து எம்பெருமானை விவக்ஷித்திருப்பரென்று தோன்றவில்லை.

67. வினு:—எனக்குத் தோன்றவில்லையென்பது ஒரு ஸமாதானமாகுமா? ஆத்ய குலபதி சப்தத்தாலே நம்மாழ்வாரைத்தான் கொள்ளவேணுமென்பதைத் திடமாக ஸாதிக்கவேணும். (விடை) ஆளவந்தாருக்கு ஆத்யகுலபதித்வேந எம்பெருமானுடைய

விவக்ஷையிருக்குமானல் (ந:) என்று இடையில் ப்ரயோகம் செய்திருக்கமாட்டார். இதை ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி நன்கெடுத்துக் காட்டுகிருர். அங்குள்ள ஸ்ரீஸூக்தியைக் கேள்; "ஈச்வரஸ் து பரமாசார்யோபி ஸர்வேஷாம் ஸாதாரண:, அயம் து அஸ்மத ஸாதாரண இதி பாவ:" என்பது. இதற்கு முந்தின வாக்யமும் கேள்;—[ந:] நாதமுநி ஸம்ப்ரதாய பாஜாம் அஸ்மாகம். 'கோத்ரர்ஷிவத் அஸௌ' இத்யபிப்ராயேண குலபதி த்வோக்தி:" என்று. விஷயம் இப்படியிருக்க, ஆத்யகுலபதித்வேந எம்பெருமானே விவக்ஷிதனுகலாமென்று சொல்லுவதற்கு ஔசித்யமில்லை.

68. வினு:—அடியேனுடைய சங்கையைச் சிறிது விவரித்து விண்ணப்பிக்கிறேன். நம்மாழ்வாரை வகுளாபரண: என்றும் வகுளபூஷண: என்றும் வகுளதர: என்றும் வழங்கிவருகிறேம். ஆழ்வார் தாமும் தமது திருவாக்காலே மகிழ்மாலை மார்பினன் என்றே யருளிச்செய்துவைத்தார். இதற்கெல்லாஞ்சேர ஆழ்வாரை வகுளாபிராம ராகச் சொல்லவன்றே அடுப்பது; "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளோஜ்ஜ்வலஸ்ய" என்ருல் பொருத்தமாயிராதா? அங்ஙனம் சொல்லாமல் ஆழ்வாருடைய திருவடிகள் மகிழமலர்களால் அழகு பெற்றிருக்குமென்று சொல்லுவதில் என்ன விசேஷம்? (விடை) அலங்கார சாஸ்த்ரபத்ததியில் உனக்குப் பரிசயமில்லையென்று நினைக்கிறேன். ஸுதர்சந சதகமென்கிற திவ்யக்ரந்தம் ஸேவித்திருந்தாயாகில் இங்ஙனம் கேட்கமாட்டாய். அதில் ஸுதர்சந புருஷனுக்குச் சொல்லவேண்டிய பெருமைகளையெல்லாம் அவனுடைய ஏகதேசங்களான ஜ்வாலை, அரம், நாபி, அக்ஷம், நேமி என்கிற அவயவங்களிலே யேறிட்டு வருணித்திருக்கு மழகு காணவேணும். எம்பெருமான் திருத்துழாயை யணிந்துகொள்வது ஒரு அவயவத்திலன்றே. *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும், தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்* என்று ஆழ்வார் அருளிச்செய்த படியே திருத்தோளிலும் திருமார்பிலும் திருமுடியிலும் அணிந்துகொள்வதுபோலத் திருவடியிலும் அணிந்துகொள்ளுகிருன். அப்படியே ஆழ்வாரும். முக்கியமான வார்த்தை– *தன்மன்னு நீள்கழல் மேல்தண்டுழாய் நமக்கன்றி நல்கான்* என்றபடி அடியில் சாத்துமது தான் அடியார்களுக்கு உத்தேசயம்.

69. வினு:—ஆளவந்தரர் எம்பெருமானுடைய பரத்துவத்தைப்பற்றி யருளிச் செய்துவரும்போது *க: ஸ்ரீ: ச்ரிய:? பரமஸத்வ ஸமாச்ரய: க:? க: புண்டரீகநயந:? புருஷோத்தம: க:?* என்றிப்படி கேள்விகேட்டுவிட்டிருக்கிருரே, இப்படி ஏதுக்குக் கேள்விகேட்கவேண்டும்? "ச்ரிய: ஸ்ரீ: ஸஏவ; பரமஸத்வ ஸமாச்ரய: ஸஏவ; புண்டரீக நயந: ஸ ஏவ; புருஷோத்தம: ஸ ஏவ" என்றிப்படி அறுதியிட்டுச் சொல்லிவைக்க லாகாதா? (விடை.) அப்படியும் அருளிச்செய்து வைத்தேயிருக்கிருர். வினுவாக விட்டு வைப்பதில் ஒரு சுவையுண்டு. இக்கேள்விகளைப் பெரிய பலகையில் பொறித்து நாற்சந்தி யில் வைக்கவேணும்; பிறமதத்தவர்கள் பலரும் இக்கேள்விகளைக் காணவேணும்: துணிவுண்டானல் 'நாராயணனைத் தவிர்த்து வேறொரு தெய்வத்தை யெழுதிவைக்கட்டும், பார்ப்போம்—என்பது ஆளவந்தாருடைய திருவுள்ளம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருமால் பரத்துவத்தைப் பேசும்போது *திண்ணன் வீடு பதிகத்தில் *ஏழுலகும் தபாவஞ் செய்து அருளாலளிப்பாரார்? *ஆரே திருத்தித் திண்ணிலை மூவுலகும், தம்முள்ளிருத்திக் காக்குமியல்வினரே* என்று வினுவாகவருளிச் செய்தாரன்றே; அந்த சாயை.

70. (வின) எவ்வுள் கிடந்தான் பதிகமான *காசையாடையில் ஏழாவது பாட்டில் *திசைமுகனார் தங்களப்பன்* என்றதற்குப் பிறகு "சாமியப்பன்" என்றருளிச் செய்திருக்கிறாரே திருமங்கையாழ்வார்; இதன் பொருளைக் கேட்கவிரும்புகிறேன். (விடை) ஸாமவேத ப்ரதிபாத்யனென்று பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் செய்தருளியிருக்கிறாரே; அதை ஸேவிக்கவில்லையா? வியாக்கியானங்களில் நிஸ்ஸந்தேஹமாக விளங்கும் விஷயங்களைப் பற்றி விசாரம் ஏதுக்கு?

71. (வின) ஸந்தேஹமுள்ள விடங்களிலும் சர்ச்சையுள்ள விடங்களிலுந்தான் அடியேன் கேட்பேன். ஒரு மஹான் இந்தப்பதிகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார்; அதில் இப்பொருளை மதியாமல் fother of Sami' என்றெழுதுகிறார். குமரன் விஷய மென்கிறார்; அதனால் கேட்டேன். (விடை) *ஆடியாடி அகம் கரைந்து* என்பதற்கு ஆடிமாதந்தோறும் மழை பெய்வதனால் வீடு கரைந்துபோவதாக அர்த்தம் சொல்லுவாருமில்லையா? பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்களை வரியடைவே கற்றவர் நிகமாந்த வாசிரியர் என்பதை ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்த ரக்ஷையின் இரண்டாவது பரிச்சேதத்தில் கடைசி விஷயமாக "பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளில் நிகமாந்த குருவின் ப்ராவண்யம்" என்ற மகுடம் புனைந்த வியாஸம் விரிவாகவுள்ளது. அதைப் பூர்த்தியாக வாசிப்பது பிறவிப்பேறு. 164. என்று லக்கமிட்ட கடைசி விஷயமொன்றை மட்டும் வாசித்தாலும் போதும். வாசித்துவிடுவதில் பயனில்லை. அவ்விரண்டு விஷயங்களையும் நன்கு ஆராய்ச்சி செய்து உண்மையுணரவேணும். பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீ ஸூக்திக்கு மாறாகச் சொல்லவேணுமென்கிற எண்ணமுடையவர்கள் தேசிக பக்தர்களாக இருக்க முடியுமா என்பதை விவேகிகள் விமர்சிப்பது. சாமியப்பன் என்பதன் பொருள் ஆசார்ய ஹ்ருதயத்திலும், விசதவாக்சிகாமணிகளிட்டருளின அதன் வியாக்கியானத்திலும் பரமபோக்யமாக ஸேவிக்கத்தக்கது. (சூ. 52.) "சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல்......வேதகீதச் சாமிநாதனென்ற ஸாமம் தோன்ற" என்றவிடம் காண்.

72. (வின) ஒருவர் பட்டர் பக்கலிலே வந்து ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் கேட்க, அவர் அனந்தாழ்வான் பாடே போய்க் கேளுமென்ன, அப்படியே அவரிடம் சென்று கேட்க, "கொக்கைப் போலிருக்கும் கோழியைப் போலிருக்கும், உப்பைப் போலிருக்கும், உம்மைப் போலிருக்கும்" என்று அனந்தாழ்வான் அருளிச் செய்ததாகச் சொல்லுகிறார்களே; இதில் உப்பைப் போலிருக்கையாவது என்ன? பலரையும் கேட்டேன்; ஒருவரும் த்ருப்திகரமாகச் சொல்லவில்லை. தேவரீர் ஸாதிக்கவேணும். (விடை) பெரியோர்கள் ஸாதிக்கக் கேட்டதைச் சொல்லுகிறேன். தளிகை செய்யப்படுகிற பண்டங்களில் உப்பு சேர்க்கப் படும்போது சிலவற்றில் உப்பு அதிகமாக விழுவதுண்டு, சிலவற்றில் குறைவாக விழுவதுண்டு. சிலவற்றில் ஸமமாக [ஏறக்குறைவில்லாமல்] விழும். அதிகமாக விழுந்தால் 'உப்பு அதிகம்' என்று வருந்திச் சொல்லுவர்கள். குறைவாக விழுந்தாலும் 'உப்பேயில்லை' என்று வருந்திச் சொல்லுவர்கள். ஸமமாகச் சேர்த்திருந்தாலோ உப்பைப் பற்றின ப்ரஸ்தாவமே வருவது கிடையாது. பொதுவாகத் தளிகை நன்றாயிருக்கிறதென்று சொல்லவேணுமானால் 'உப்பு புளி காரங்கள் திட்டமாயிருக்கிறது' என்பதுண்டு; உப்பைப் பற்றி மட்டும் தனியான பேச்சுவாராது. அதுபோல, பெரியார்கள் குழாத்திலே நாம்

கலக்கும்போது நம்மைப்பற்றின பேச்சு நிகழாதபடிக்கு (அதாவது) நாமிருப்பது தெரியாமல்? அடங்கியொடுங்கி யிருக்கவேணுமென்பது விவக்ஷிதம்.

73. (வினா) திருவாய்மொழியில் ஒருபதிகத்திற்குப் பயனுரைக்கிற ஆழ்வார் "இவையுமொருபத்தும்வல்லார், ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே" என்கிறாரே, நிகமனப் பாசுரந்தோறும் பலனுரைத்து வருகிற அடைவிலே இங்கும் ஒரு பலன் சொல்லவேண்டியிருக்க, ஒரு பலனும் சொல்லாமல் 'இப்பதிகம் வல்லவர்கள் நீராயுருகுவர்கள்' என்றால் இதுவொரு பலச்ருதியாகுமோ? (விடை) ஆழ்வார் ஸாதிக்கிற பலன்களுக்குள்ளே இதுதான் உயர்ந்தபலன் என்று கொள்ளாய். குயில் கூவினாலும் காக்கை கத்தினாலும் வாசியறியாதே நிற்கும் மஹிஷாதிகளைப்போலே உக்திகளிலும் ஸூக்திகளிலும் ஸ்ரீ ஸூக்திகளிலும் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளிலும் ஒரு வாசியுமறியாதே கல்நெஞ்சராயிருப்பார் பலரில்லையா? உருக்கமுண்டாவது ஸாமான்யமா? அருந்தவப் பயனல்லவா? வரப்ரஸாதங்கொண்டு பெறவேண்டிய பேறல்லவா இது. குணவித்தர்கள் என்னும்படியானவர்கள் "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித்" என்னும்படியாக வன்றோ தேறுவர்கள். "நீராயுருகாநிற்பர்" என்கையாலே இதுவும் ப்ராப்யபலன்களிலே ஒன்று (அல்லது) சிறந்தது என்று காட்டப்பட்டதாயிற்று. இக்காலத்தில் ஒருவரிருவர்.

74. வினா:—ஈகைக் கண்டனமென்று ஒரு கந்தை வந்திருக்கிறதே, அதைக் கண்டீரோ? (விடை) எந்த கண்டனமும் ஒரு நாளைக்குமேல் உயிருடன் இராதென்பது உனக்குத் தெரியாதா? ஒருநாள் எதற்கு? ஒரு நாழிகையில் தொலைந்ததென்று கொள்ளாய்.

75. (வினா) விவாஹங்களில் நடக்கும் சீர்பாடலில் "சீர்பாடீ களிமண்பாடப்போமே" என்று நீட்டுகிறார்களே; இது இன்னதென்று புரியவில்லையே. கல்யாணத்தில் களிமண்ணுக்கு என்ன ப்ரஸக்தி? (விடை) களிமண்ணுமில்லை, களிமண்பாடுவதுமில்லை; "சீர்பாடிக் களிமின் களிப்போமே" என்பதுதான் உள்ளது. சீர்பாடல்பாடி நீங்கள் ஸந்தோஷியுங்கள், நாங்களும் ஸந்தோஷிக்கக்கடவோம் என்பது பொருள்.

களிமின் களிப்போமென்று இவ்வினாவிடையைத் தலைக்கட்டினோம்.

விசுவாவஸு௵ பங்குனி விசாகத்தன்று (8—4—66)
எழுபத்தைந்து பிராயப்பூர்த்திக்கான நினைவுமலர்கள் நான்கில்
மூன்றாவது நூலான
எழுபத்தைந்து வினாவிடைகள் முற்றிற்று.
ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியருடைய
பாஷாசதுஷ்டய நூல்களில்
அறுநூற்றுத் தொண்ணூற்றுமூன்றாவது நூல் முடிந்தது.

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 75. | திருப்பாவை ஜீயர் | 0 | 75 |
| 76. | திருப்பாவை ஸ்வாபதேச உரை | 1 | 00 |
| 77. | திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| 78. | திருமந்த்ரார்த்த ஸாரம் | 2 | 00 |
| 79. | திருவல்லிக்கேணி உபந்யாஸமாலை | 1 | 50 |
| 80. | திவ்யப்ரபந்தக்கண்ணுடி | 1 | 00 |
| 81. | திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு | 0 | 75 |
| 82. | திவ்யஸூரி சரிதகால நிர்ணயம் | 0 | 75 |
| 83. | துவரைப்பிரான் திருவருள் | 0 | 75 |
| 84. | தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 25 |
| 85. | தொழுகையும் தொழச்செய்கையும் | 0 | 75 |
| 86. | த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| 87. | த்வயார்த்தஸாரம் | 1 | 00 |
| 88. | நப்பின்னையவதார ரஹஸ்யம் | 1 | 00 |
| 89. | நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம் | 0 | 75 |
| 90. | நல்வார்த்தை நானூறு | 2 | 00 |
| 91. | நற்போது போக்கு | 0 | 75 |
| 92. | நித்யாநுஷ்டான பத்ததி | 0 | 75 |
| 93. | நித்யாநுஸந்தான உரை | 5 | 00 |
| 94. | நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி உரை | 1 | 50 |
| 95. | பகவத்கீதை யறுபத்திரண்டு | 1 | 00 |
| 96. | பக்ஷீச சாகாநிலய: (உபந்யாஸம்) | 0 | 75 |
| 97. | பன்னிருதிங்களனுபவம் | 2 | 00 |
| 98. | பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| 99. | பாதுகா ஸஹஸ்ராவதார விசாரம் | 1 | 00 |
| 100. | பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி | 0 | 75 |
| 101. | பார்த்தஸாரதியின் ப்ரபாவம் | 1 | 00 |
| 102. | பூர்வாசார்ய வைபவம் | 1 | 50 |
| 103. | பெரிய திருமொழி தீபிகை | 16 | 00 |
| 104. | ப்ரமேயஸார உரை முதலியன | 1 | 50 |
| 105. | மணவாளமாமுனிகள் கட்டியம் | 0 | 76 |
| 106. | மணவாளமாமுனிவாத்ஸல்ய விவரணம் | 0 | 75 |
| 107. | மணவாளமாமுனிகள் வைபவம் | 0 | 75 |
| 108. | மதுரோபந்யாஸமாலை | 0 | 75 |
| 109. | முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை | 2 | 00 |
| 110. | முதலாயிரவுரை தீபிகை | 16 | 00 |
| 111. | யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 112. | யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம் | 0 | 75 |
| 113. | ரத்னபரீக்ஷா (வடமொழி) | 0 | 75 |
| 114. | ராமாநுஜ தயாபாத்ரதத்வம் | 1 | 00 |
| 115. | ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| 116. | ஷெவ்வமொழியும் ஆங்கிலமும் | 1 | 50 |
| 117. | ராமாநுஜ ஜயந்திமலர் | 1 | 00 |
| 118. | வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| 119. | வர்ணமாலை | 0 | 75 |
| 120. | வரதன் ஸந்நிதி வரலாறு | 1 | 00 |
| 121. | வாக்யஜ்ஞமலர் | 1 | 00 |
| 122. | வாதிபீகர விஜயம் | 1 | 00 |
| 123. | வால்மீகி ராமாயண வசனம் | 8 | 00 |
| 124. | விசிஷ்டாத்வைத தர்சனம் | 1 | 00 |
| 125. | விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் | 1 | 00 |
| 126. | வித்வத்வைதிக பூஷணம் | 1 | 00 |
| 127. | விதவாவபன விசாரம் | 0 | 75 |
| 128. | வேதபாஷ்ய விமர்சம் | 0 | 75 |
| 129. | வேதாந்த தேசிக சரித்ரம் | 1 | 00 |
| 130. | வேதாந்தாசார்ய வைபவம் (ஸம்) | 1 | 25 |
| 131. | வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை | 1 | 00 |
| 132. | வைதிகலௌகிகமஹநீயமண்டலி | 2 | 00 |
| 133. | வைதிக வித்வதாபரணம் | 1 | 00 |
| 134. | வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 135. | ஸத்புருஷஸமாராதனம் | 1 | 00 |
| 136. | ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம் | 1 | 00 |
| 137. | ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| 138. | ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி | 2 | 00 |
| 139. | ஸதாசார்யஸூக்தி ரக்ஷா | 1 | 00 |
| 140. | ஸதுபந்யாஸரத்ன மாலை | 1 | 00 |
| 141. | ஸம்வாத ஸம்மார்ஜநீ | 0 | 75 |
| 142. | ஸர்வஜ்ஞ ஸூக்தி ஸர்வஸ்வம் | 2 | 00 |
| 143. | ஸாதுஸாத்விக ஸம்வாதம் | 1 | 00 |
| 144. | ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா | 1 | 25 |
| 145. | ஸ்ரீராமாநுஜன் மாதப் பத்திரிகை வருடச் சந்தா | 5 | 00 |
| 146. | வைதிக மநோஹரா வடமொழி மீ பத்ரிகை சந்தா | 10 | 00 |
| 147. | ஸ்ரீராமாநுஜ பத்ரிக (தெலுங்கு) | 10 | 00 |
| 148. | ஸ்ரீராமாநுஜன் பழைய ஸஞ்சிகைகளின் வால்யம் (பயிண்டு) | | |
| 149. | P. B. A. நூல் தொகுதிகள் 12 | 100 | 00 |
| 150. | வைதிக லௌகிக மஹநீய மண்டலி | 2 | 00 |

மற்றுமுள்ள நூற்றுக்கணக்கான புத்தகங்களுக்கு வேறு கியாடலாக் காண்க.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

மிக முக்கியமான அறிவிப்பு;—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை புத்துயிர்பெற்று நாலைந்து மாதங்களாகின்றன வென்பதும் இச்சபையின் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதும் உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண் வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இ விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... ... ... ....

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

---

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**

L. KANCHEEPURAM.

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.